## பதிப்புரை

ஜேக்கஸ் மாரிடய்ன் என்ற பிரஞ்சு அறிஞரின் நூல்களில் சிறந்த தொன்றை தமிழ் வாசகர்கள் முன் சமர்ப்பிக்கிறோம்.

ஐரோப்பிய நாடுகளிடமிருந்து மற்றைய மேற்கு நாடுகள்—குறிப்பாக அமெரிக்கா, தொழில் நாகரிகத்தையும் இதர கலாசாரங்களையும் ஏற்ற போதிலும், நசித்துப்போன பழைய சம்பிரதாயங்களை உதறிவிட்டு, முற்றிலும் புதியதோர் பாதையை வகுத்து, மனிதரிடையே ஒரு புதிய உலகத்தையும், புதிய சமுதாயத்தையும் தோற்றுவித்துள்ளது. அதுமட்டுமல்ல. எதிர்காலத்தில் ஆன்மீகத் துறையிலும் உலகுக்கு அது வழி காட்டக்கூடும் என்பதை, மதம், சரித்திரம், கலை, தொழில், அரசியல் ஆகிய நோக்குடன் திறனாய்வு செய்துள்ளார் ஆசிரியர்.

இதைத் தமிழாக்கித் தந்த அன்பர் காங்கேயனுக்கு எங்கள் நன்றி உரித்தாகும்.

பதிப்பாசிரியர்.

## முகவுரை

---

சமூகச் சிந்தனைக் கமிட்டியின் ஆதரவில் 1956-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 6, 7, 9-ஆம் தேதிகளில் சிகாகோ சர்வகலாசாலையில் நடந்த மூன்று கருத்து அரங்குகளிலிருந்து உருவாகியதாகும், இந்நூல். அவ்வரங்குகளில் நான் நிகழ்த்திய சொற்பொழிவுகள் தட்டெழுத்தில் பொறிக்கப்பட்டன. அவ்விதம் பதிவாகிய என் பிரசங்கங்களைத் திரும்பப் பரிசீலித்துப் பார்த்தபின் மேற்கொண்டு சில பக்கங்களைச் சேர்த்து இந்த நூலைத் தொகுத்துள்ளேன். ஆனால் இவ்வாறு நான் செய்த பொழுது, இந்நூலின் பொருளை நான் அப்பிரசங்கங்களில் அணுகிய முறை சிறிதும் மாறாதவாறு எச்சரிக்கையாக இருந்திருக்கிறேன். இப்பொருளை நான் என்றாவது பண்டித தோரணையில் பகுத்துக்கூற முற்பட்டிருப்பேனா என்பது சந்தேகமேயாகும். எனவே, அந்தச் சொற்பொழிவுகளில் நான் பின்பற்றிய சாதாரணச் சம்பாஷணை முறையையும் இந்நூலில் அப்படியே நீடிப்பது அவசியமாகியது.

இதனால் அவ்வளவாகப் பண்புடையனவல்லாத சில கொச்சைச் சொற்கள் இங்குமங்குமாக இந்நூலில் காணப்படலாம். இப்படிப்பட்ட பேச்சு வழக்கு மொழியை நான் கையாண்டதேன் ?—வாசகருக்கு எரிச்சலூட்டவும், அவரது நகைச்சுவையைச் சோதனைக்குள்ளாக்கவும் என் இளமைப் பருவத்தில் நான் விரும்பியது உண்டு; ஆனால் இத்தகைய விருப்பமேதும் இப்போது எனக்குக் கிடையாது. மேலும், ஒரே சீராகக் கனமாகவுள்ள நடையை எப்போதும் கடைப்பிடிப்பதை நான் வெறுக்கின்றேன். அம்மாதிரி நடையானது தத்துவ வித்தகர் 'பாஸ்கால்' குறிப்பிட்ட ஆடம்பரக்காரர்களின் பகட்டான உடையைப் போன்றே, தத்துவ வல்லுனர்களுக்கு மக்கள் தங்கள் கற்பனையில் அணிவித்துப் பார்க்க விரும்பும் ஆடையைப் போன்றே, எனக்குத் தோன்று

கிறது. இது தவிர, நான் உண்மையைத் தான் பெரிதாக மதிக்கிறேனேயன்றி என்னேயோ, என் எண்ணங்களேயோ அல்ல.

எனவே, "அமெரிக்க அரங்கம் குறித்து அவ்வப்பொழுது என் மனத்தில் எழுந்த தொடர்பற்ற சிந்தனைகள்"[1] என்று கருதக் கூடிய இவற்றை அமெரிக்கக் கூட்டமொன்றின் முன் வைத்து, அது இவற்றை எப்படி ஏற்கிறது, அதன் விமரிசனங்கள் யாவை என்பவற்றை அறிவது நல்லது என்று நினைத்தேன். அந்தச் சொற்பொழிவுகளையெல்லாம் அக் கூட்டம் வரவேற்கவே செய்தது; அது எனக்கு மிகுந்த உற்சாகமூட்டுவதாக இருந்தது. மேலும், (அமெரிக்கச் சரித்திரத்தில் மனக் கற்பனை இயங்கும் வகை போன்ற விஷயங் களைச் சார்ந்த) சிலவற்றின் விரிவான விளக்கங்களைத் தவிர மற்றபடி நான் சமர்ப்பித்த கருத்துக்கள் பொதுவாகச் சரியா னவையே என்பதை உறுதிப்படுத்தும் வகையிலேயே அவ்வ ரங்குகளில் கலந்து கொண்டவர்களின் விமர்சனங்கள் அமைந் திருந்தன என்பதையும் நான் கூறியாக வேண்டும். ஆகவே, அக் கூட்டத்துக்கு, குறிப்பாக அதன் தலைவரான பேராசிரியர் ஜான். யூ நெஃப் அவர்களுக்கு, என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். ஸால் அலின்ஸ்கி, பேராசிரியர் ஒய்வ்ஸ் ஸைமன், ஸ்ரீமதி ரஸ்ஸல் டேவன்போர்ட், பூஜ்யர் ஜான் எகன், பூஜ்யர் எட்வர்ட் ஓ'கானர் ஆகியோருக்கும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்; இவர்களுடைய குறிப்புக்களை நான் தனிமுறையில் சுவைத்தேன்.

என் நண்பர்களான ஜான் ஹைட், மார்ஷல் ஸதர், ஈ. பி. ஓ., கார்னீலியா போர்கொர்ஹாஃப் ஆகியோர் வெளி யிட்ட சீரிய கருத்துக்களுக்காக அவர்களுக்கும் கடமைப் பாடுடையேன்; அவர்கள் அனைவருக்கும் என் மனப்பூர் வமான நன்றி உரித்தாகும்.

மேலும் மூன்று விஷயங்களை நான் குறிப்பிட விரும்பு கிறேன். என் மனைவிக்கும் எனக்கும் பொதுவான அனுபவங் கள், திட நம்பிக்கைகள் ஆகியவற்றிலிருந்தே இந்நூல் எழுந்

(i) சிகாகோ விவாத அரங்குகளில் நிகழ்த்திய மூன்று பிரசங்கங் களின் தலைப்பு இதுவே யாகும்.



துள்ளது என்பது அவற்றில் முதலாவதாகும். இந்நாட்டி னிடம் என்னைப் போலவே ஆழ்ந்த ஈடுபாடும் அன்பும் உடைய வள் அவள். இந்நூல் போன்ற நற்சான்றை நான் வழங்க வேண்டும் என்று நெடுநாளாக அவள் விரும்பி வந்திருக்கிருள். எனவே, இந்நூலில் அவளுக்கும் பெரும் பங்கு உண்டு.

அரசியலைப் பற்றிச் சுட்டும் எதையுமே என் பிரசங்கங் களில் காண்பதற்கில்லை என்பது இரண்டாவது விஷயம். அரசியல் துறை இயக்கங்களின் முக்கியத்துவத்தை நான் மதிக்கவில்லை என்றோ, புறக்கணிக்கிறேன் என்றோ இதற்குப் பொருளாகாது. மனிதகுலத்துக்கு இதைச் சார்ந்த இயக்கம் எவ்வளவு அடியாதாரமானது என்பதை—மிகுந்த ஏமாற்றம் அளிக்கும் சந்தர்ப்பங்களை இது வெகுவாகச் சார்ந்திருக்கிறது என்பதையும்—எனக்கு வயது ஏற ஏற நான் மேன்மேலும் உணர்ந்து கொண்டு வருகிறேன். இவ்விவகாரங்களைப்பற்றி, முக்கியமாக சர்வதேச அரசியலைக் குறித்து நான் என்ருவது எழுத நேருமானல் நான் கணக்கற்ற விஷயங்களைச் சொல்ல வேண்டியே இருக்கும். அவை எல்லாமே பாராட்டுரைகளாக இரா, நான் நெஞ்சார நேசிக்கும் நாடுகளைப் பொறுத்தும் கூடப் புகழுரைகளாக இரா என்பதையும் கூறித்தானக வேண்டும். ஆனல் நான் எடுத்துக் கூற முற்பட்ட சொற் பொழிவுகளின் விஷயமோ முற்றிலும் மாறுனது; இன்று நான் ஒரு முகமாக ஈடுபட்டிருக்கும் தத்துவ ஞானத் துறைக்கு நான் கையாண்ட முறையே சாலப் பொருத்தமா னது—மக்கள் தாம் தத்துவ சாஸ்திரிகளின் கவனத்தைக் கவர்வரேயன்றி அரசாங்கங்களல்ல.

ஆசிரியனுகிய நான் ஒரு ஃபிரெஞ்சுக்காரன் என்ற காரணத்தினுல் இந்நூலில் தெரிவிக்கப்பட்டுள்ள கருத்துக்கள் விசேஷ முக்கியத்துவம் பெறுகின்றன என்று நான் எண்ணத் துணிவது மூன்ருவது விஷயமாகும். ஃபிரெஞ்சுக் கலாசாரம், பண்பாடுகளில் ஊறி வளர்ந்தவனுன நான் ஐரோப்பியக் கண் கொண்டு—அது விருப்பு-வெறுப்பற்ற ஐரோப்பியக் கண் என்றே நினைக்கிறேன்—அமெரிக்கக் காட்சியை நோக்கியுள் ளேன். இன்றைய அமெரிக்கக் கலாசார வாழ்க்கையில் ஒன் றித் திளைப்பவனுக ஏற்றுக்கொள்ளப்படும் சலுகையும் எனக் குக் கிடைத்திருக்கிறது. இதன் பயனுக, அமெரிக்காவினிட

மும் ஃபிரான்ஸினிடமும் என் உள்ளத்தின் ஆழத்திலுள்ள அன்பை என்னால் எளிதாக இணைக்க முடிகிறது. இரு தேச மக்களையும் நோக்கும் போது, அவர்கள் என்னதான் வேறுபட்டுத் தோற்றமளிக்கிற போதிலும் அவர்களிடையே ஒரு மர்மமான ஒற்றுமையை, புதிர்போல இருப்பினும், ஆழ்ந்ததொரு இணக்கத்தை என்னால் காணவியல்கிறது. இந்த இணக்கமானது இவ்விரு நாட்டினருக்கும் சரித்திர ரீதியாக விளையக்கூடிய நற்பயன்களை ஒன்றுபடுத்துவதாகவே எனக்குத் தோன்றுகிறது—இக்காரணங்கள் புற்றியே என் கருத்துக்கள் தனி முக்கியத்துவம் உடையவை என்றேன்.

* * *

இந்நூலில் கூறப்பட்டிருப்பவை அவ்வப்பொழுது எழுந்த சிந்தனைகளேயாயினும் அவற்றிடை உள்ளூர ஒரு ஒழுங்கு முறையும் இல்லாமலில்லை. உண்மையில் அவை மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. கருத்தூன்றிப் படிக்கும் வாசகர்களுக்கு இவ்வாறு பிரித்திருப்பதற்கான காரணங்களைக் கண்டுகொள்வதில் கஷ்டமிராது. எனினும் இது சம்பந்தமாக நானே ஓரளவு விளக்கம் கொடுப்பது நல்லதென நினைக்கிறேன்: ஒன்று முதல் எட்டு வரையிலுள்ள அத்தியாயங்கள் கொண்ட முதல் தொகுதி, அனைவருக்கும் புலப்படும் மிகவும் வெளிப்படையான விஷயங்கள் பற்றிக் கூறுகிறது. ஒன்பது முதல் பதினான்கு வரையிலுள்ள அத்தியாயங்கள் அடங்கிய இரண்டாவது பகுதி, ஆன்மாவின் அடித்தளத்திலுள்ள அம்சங்களைப் பற்றியதாதலால் புரிந்து கொள்வது சற்றுச் சிரமமாக இருக்கும். பதினைந்து முதல் இருபது வரையிலுள்ள அத்தியாயங்களை உடைய மூன்றாவது தொகுதியும் மிகுந்த முக்கியத்துவம் படைத்தவை என்று எனக்குத் தோன்றும் விஷயங்களைப் பற்றியதே; சமூக, கலாசார வாழ்க்கை பற்றியதும், அமெரிக்க சம்பிரதாய, ஸ்தாபனங்கள் பற்றியதுமாகும் இப்பகுதி.

இம்மூன்று தொகுதிகளும் ஒத்திசை எனத் தக்கதோர் இழையினால் இணைக்கப்பட்டிருக்கின்றன என்றே கூறலாம். இரண்டாவது அத்தியாயத்திலிருந்து பதின்மூன்றாவதுக்குப் பாயும் இதனைப் பத்தொன்பதாவது அத்தியாயத்திலும் இழையோடக் காணலாம்.

# 1

# அணிந்துரை

---

இந்நாட்டைப் பற்றிப் பேசவும், இதனை வியந்து பாராட்டவும் நெடுங்காலமாக நான் விரும்பிவந்துள்ளபோதிலும் மிகுந்த தயக்கத்துக்குப் பிறகே இந்தப் பிரசங்கத்தொடருக்கான பொருளைப் பொறுக்கியெடுத்தேன்.

அந்தத் தயக்கத்துக்குக் காரணங்கள் பலவுண்டு. என் மனத்தில் ஏற்பட்ட குழப்பம் முதல் காரணம். எப்படியெனில், ஒரு நாட்டில் நீங்கள் நீண்ட காலம் வசிப்பீர்களேயானால் அதைப் பற்றி மேன்மேலும் தகவல்கள் தெரியவருகின்றன. இவ்வாறு தகவல்கள் சேரச் சேர, அந்த அளவுக்கு உங்கள் குழப்பம் அதிகமாகிறது. ஏனெனில், குவியும் தகவல்களெல்லாம் உங்கள் சொந்த அனுபவத்தை மங்கச் செய்து விடுகின்றன என்றே கூறவேண்டும். அதோடன்றி, உங்கள் கண்ணெதிரே எல்லையற்றுப் பரந்து கிடக்கும் மனித சமுதாயத்தின் எண்ணற்ற சிக்கல்களையும் முடிவற்ற முரண்பாடுகளையும் காட்டுவதால் உங்களை அவை மேலும் குழப்பத்தில் ஆழ்த்துகின்றன.

நான் தத்துவஞானத் துறையில் ஈடுபட்டிருந்தது இரண்டாவது காரணம். இவ்விஷயத்தை நான் முறையாக, முழுமையாக, ‘விஞ்ஞான’ விதி முறையில் ஆராய முடியாமல் தடுத்து விட்டது தத்துவத் துறையில் எனக்கிருந்த ஈடுபாடு.

இருந்தபோதிலும், இந்நாட்டைப் பற்றியும் இதன் மக்களைப் பற்றியும் சான்று பகர வேண்டும் என்றும், அதுவே நியாயமும் நன்றி செலுத்துவதும் ஆகும் என்றும் என்னுள் ஓர் ஊக்கம் வளர்ந்து கொண்டே வந்தது, ஒரு புறத்தில். இவ்வகையில், ஷாதோப்ரியான், தாகிவிய்யி ஆகிய சான்றோர்கள் தொடங்கி வைத்ததொரு ஃபிரெஞ்சு மரபில் ஒரு சிறிய பங்கையே செலுத்தியவனாவேன்.

வெள்ளையரல்லாதாரின் நிலை குறித்து குன்னர் மிர்டால் என்பவர் எழுதிய ‘அமெரிக்காவின் தர்மசங்கடம்’ (அமெரிக்கன் டைலெம்மா) என்ற நூல் போன்று முறையாக அலசிப் பார்த்துத் தத்துவரீதியாக ஆராய்ந்து எழுதப்பட்ட நூல்கள் எவ்வளவுதான் உதவிகரமாகவும், அவசியமாகவும் இருந்த போதிலும் முற்றிலும் மாறானதொரு முறையில் அது பற்றி அணுகுவதற்கும் இடம் உண்டு என்பதை இன்னொரு புறம் உணரலானேன். விஞ்ஞான ரீதியில் இல்லாத வகையில், சொந்த அனுபவங்களை ஆதாரமாகக்கொண்டு அணுகுவதே இம்முறை. விஞ்ஞான வழியைப் போன்றே இம்முறையும் உண்மையைப் புலப்படுத்த நிறைய வாய்ப்பு உண்டு; அவ்வளவு உறுதியாக அல்லாவிடினும் இன்னும் ஆழமாக ஊன்றியுள்ள உண்மைகளை இம்முறை துலக்கக்கூடும் என்பதையும் உணர்ந்தேன்.

ஏனெனில், இறுதியாகக் கூறுமிடத்து, தனி மனிதன், அவனுடைய தனித்தத்துவம், சரித்திரம், ஆன்ம நெறி, பொது மனப்போக்கு, லட்சியக் கனவுகள், ஜீவனோபாயம் ஆகிய அம்சங்களில் தனக்கே உரித்தான வகையில் திகழும் மிகப் பெரும் கூட்டு வியக்தியாம் மக்கட் தொகுதி, இவற்றைப் பற்றிய நம் ஞானத்தைச் சார்ந்தேயிருக்கிறது, ஒரு நாடு அல்லது மக்களை நாம் பாராட்டும் வகை. தனிமைத் தத்துவத்தைப் பற்றிய அறிவைப் பொறுத்த வரையில் மிகவும் முக்கியமானது, நம்மால் நிதர்சனமாக நிரூபிக்க முடியாமல் இருக்கும் அம்சமேயாகும்; தனியொருவன் சம்பந்தப்பட்ட சந்தர்ப்பங்களை, ஒருவருக்கும் மற்றொருவருக்குமிடை உள்ள தனிப்பட்ட உறவுகளை ஒட்டிய ஒருவகை அனுபவத்தையும் உணர்வையுமே அது சார்ந்திருக்கிறது. அதனை வெளிப்படுத்தும் மொழிகளை பொதுவாக நிலவும் கருத்துக்களைக் கொண்டோ, பகுத்தறிவு ரீதியிலான வாதங்களின் மூலமோ விளக்கவும் முடியாது, நிரூபிக்கவும் இயலாது.

அமெரிக்கா காட்டும் காட்சிகளைப் பற்றிய என் சிந்தனைகளை வெளியிட முயலுங்கால் என் கொள்கை எளிதில் மறுக்கத்தக்கதாகவே இருக்கும். ஏனெனில், நிரூபித்துக்காட்டக்கூடியவையாக என் கூற்றுக்கள் இரா. மேலும், அவை சரித்திரபூர்வமான ஆராய்ச்சி முடிவுகள்



அல்ல. எல்லா அம்சங்களையும் எடுத்துக்காட்டுவனவும் அல்ல அவை; தக்க ஒரு ‘விளக்கம்’ என்றும் அவற்றை நான் சொல்வதற்கில்லை. பல முக்கியமான விஷயங்களை அவை தொடவே தொடா. ஏனெனில், முன்கூட்டித் திட்டப்படுத்திக் கொள்ளாமலே நான் பேசிய முறை அவற்றை விவாதிப்பதற்கு உகந்ததாகாது. ஆகவே, அரைகுறையாகவும், என் சொந்த அனுபவங்களை ஒட்டியவையாகவும், தொடர்பு அற்றவையாகவும், அங்குமிங்கும் ஓடும் சிந்தனைகளாகவுமே அவை இருக்கும். தவிர, என்னதான் திருத்தமாக நாம் விளக்க முற்பட்டாலும் இது போன்ற விஷயங்களில் நம் உன்னிப்புக்கள் ஓரளவு பிசகுவதற்கு எப்போதும் இடமுண்டு.

இருப்பினும், இந்த ‘மனம் போன போக்கிலான சிந்தனை’களின் உள்ளுறைப்பகுதியில் உண்மைச் சுடர்கள் ஒளி வீசுவதாகவே நான் திடமாக நம்புகிறேன். இவ்வாறு ஒளிரும் உண்மைகள் எல்லாம் நான் மிகப்பெரிதும் போற்றுதற்கு உரித்தானவை. ஏனென்றால், ஏறக்குறைய கால் நூற்றாண்டுக் காலமாக நான் அறிந்துள்ள அமெரிக்காவை ஏன் நேசிக்கிறேன் என்ற விளக்கத்தின் சாரமாய்த் திகழ்பவை அவை.

ஒவ்வொரு சிறந்த மனித இயல்பும் இரு சால்புடையது என்பதும், மிகச்சிறந்தவை எனக் கருதப்படும் விஷயங்களிலும்கூட ஆபத்துக்கு இடம் உண்டு என்பதும், அவற்றில் புறக்கணிக்க வியலாத குறைபாடுகளும் இருக்கக்கூடும் என்பதும் நன்கறிந்தவை. பண்பில் மிகச்சிறந்த அமெரிக்கர்களும் கூடத் தங்கள் சொந்தப் பண்பாட்டு வளர்ச்சியிலும் நாட்டின் நிலைமையிலும் சில அம்சங்களிலுள்ள குறைபாடுகளை எவ்வளவு கடுமையாகக் கண்டிக்கிறார்கள் என்பதையும் அறிவேன். இழுக்கான இந்த அம்சங்கள் சிலவற்றைப்பற்றி நானே சுட்டிக் காட்டும் வாய்ப்புக்கள் எழும். ஆனால் இந்நாட்டில் நான் நேசிக்கும் அனைத்துடனும், மனித குலத்தின் நம்பிக்கைகளுக்கும் வருங்கால நாகரிக வளப்பத்துக்கும் எவை அத்யந்த முக்கியமானவையோ அவற்றோடும் ஒப்பிடும்போது இந்தக் குறைபாடுகள் அற்பமானவை என்றே எனக்குத் தோன்றுகிறது.

இந்நூலின் தோற்றுவாயாக அமைந்த விவாத அரங்கின் தன்மையையும் நோக்கத்தையும் விளக்கும் பொருட்டுத்தான்

பூர்வாங்கமாக இவ்வளவும் கூறியுள்ளேன். இவ்விஷயம் சம்பந்தமாக தாகிவிய்யி, ஆன்ட்ரே ஸீக்ஃப்ரீட், ஜில்பெர்ட் சைனர்ட் போன்று பலர் எழுதியுள்ள பல நல்ல புத்தகங்களை நான் படித்திருப்பினும் அவற்றையெல்லாம் மறந்து விட்டு என் சொந்த அனுபவங்களையே ஏன் விடாப்பிடியாகப் பற்றிக் கொள்ள முயன்றிருக்கிறேன் என்பதை இந்தப் பூர்வாங்கக் கூற்றுக்கள் தெளிவுபடுத்தும் என்றே நம்புகிறேன்.

# 2

## முதற்கண் எழும் மனப்பதிவுகள்

ஏதாகிலுமொன்றைப் பார்த்ததும் முதலெடுப்பில் நம் மனத்தில் எழும் உணர்ச்சிகள் தனி மதிப்புள்ளவை என்றே பொதுவாக நான் கருதுகிறேன். அவை ஓரளவு தற்செயலான தன்மை உடையவை என்பது உண்மைதான். தவறான எண்ணங்களை அவை ஏற்படுத்தி விடக்கூடும். உதாரணமாக, ஜார்ஜஸ் நியூஹாமல் என்பவரின் துரதிர்ஷ்ட அனுபவத்தைக் கூறலாம்—அமெரிக்காவில் அவர் அடிவைத்ததும் குடியேற்றத் துறையைச் சார்ந்த வைத்தியரொருவர் பரிசோதனையின் பொருட்டு அவர் வாயில் வலுக்கட்டாயமாக உஷ்ணமானியைத் திணித்தார்; இவ்வாறு நேர்ந்தமை குறித்து அமெரிக்காவை ஒரு நாளும் அவரால் மன்னிக்க இயன்றதில்லை. ஆனால் இம்மாதிரி சந்தர்ப்பவசமான குறுக்கீடுகளை ஒருபுறம் ஒதுக்குவதுடன் போதிய அளவு திறந்த மனத்துடனேயே ஒருவர் ஒரு நாட்டில் புகுகிறார் என்று வைத்துக் கொண்டோமானால் அந்தப் புதிய நாட்டைப் பற்றிய அவருடைய முதல் எண்ணங்கள் மேலெழுந்தவாரியாகவே இருக்கக்கூடும்; காண்பதையெல்லாம் அப்படியே யதார்த்தமாகப் பாவித்துவிடவும் கூடும். ஆயினும் பொதுவாக அவை உட்பொருளை ஊடுருவும் தன்மை நிறைந்தவையாய், உண்மையை விளக்குவனவாகவே இருக்குமெனலாம்.

இந்நாடு சம்பந்தப்பட்டவரையில் இன்னும் பொருத்தமானதாக ஒன்று கூறலாம். விருப்பு—வெறுப்பு ஏதுமில்லாதவர்களாய் வெளிநாடுகளிலிருந்து பலர் இங்கு வருகிறார்கள். ஊன்றிக் கவனிப்பவர்கள் தெளிவான நோக்கு உடையவர்கள், சீராகவும் நிதானமாகவும் பிரத்யட்ச உணர்வுடனும் ஆராய்ந்து முடிவுக்கு வரும் திறன் படைத்தவர்கள் என்றெல்லாம்கூட அவர்களைப் பற்றிக் கூறலாம். அத்தகையவர்கள் அமெரிக்காவை வியந்து பாராட்டுகிறார்கள், விரும்பி நேசிக்

கிறார்கள். சாதகபாதக அம்சங்களைச் சீர்தூக்கிப் பார்க்கும் அவர்கள், முடிவாக இந்நாட்டை வெகுவாக வியந்து பாராட்டவே செய்கிறார்கள்—இந்தப் பாராட்டுகளைத் தக்கபடிக் கட்டுப்படுத்தியே அவர்கள் வெளியிடுகிறார்கள் என்பதும், விவேகமுடன் சில ஷரத்துகளைச் சேர்க்கிறார்கள் என்பதும், இவற்றோடு சில சமயங்களில் சில நல்ல ஆலோசனைகளையும், ஓரளவு உயர்வு மனப்பான்மையுடன் புத்திமதிகளையும் வழங்குகிறார்கள் என்பதும் உண்மைதான்.

ஃபிரெஞ்சு மொழியில் வழங்கும் 'கண்டதும் காதல்' என்கிற உணர்ச்சிக்கு ஏற்ப, இந்நாட்டைப் பார்த்ததுமே மனஎழுச்சி கொள்ளும் வெளிநாட்டாரும் இருக்கிறார்கள். ஆனால் 'கண்டதும் காதல்' என்பது ஒரு ஆளைப் பொறுத்துத்தான் ஏற்படலாமேயன்றி அது ஒரு பொருளைப் பொறுத்தன்று. ஆயினும் இவ்வாறு மனவெழுச்சி அடைபவர்கள் சம்பந்தப்பட்டவரையில் அந்த அனுபவமானது, ஆழ்ந்ததொரு ரகசியத்தைத் திடுமெனக் கண்டுகொள்வதுபோல அமைகிறது. ஆகவே, அமெரிக்காவின் அந்தரங்கத்தை அவர்கள் அறிந்துணர்ந்தோர் ஆகிவிடுகின்றனர்.

இம்மாதிரி அனுபவம் எனக்கு நேர்ந்தது. என்னைப் போலவே ஒரு ஃபிரெஞ்சுப் பேரறிஞரும் இந்த அனுபவத்துக்கு இலக்கானார். இவ்வாறு தம்மைப் போலவே ஒரே நோக்கில் இந்நாட்டின் உட்கிடக்கையை உணர்ந்த ஃபிரெஞ்சுக்காரர்கள் அனைவரையும் தனிப்பேறு பெற்றவர்களாக அவர் கருதுகிறார்; அனைவருக்கும் பொதுவாகவுள்ள இந்த ஞானம் காரணமாக ஒருவருடனொருவர் சகோதரப்பான்மையில் பழகும் கழகமொன்றைச் சேர்ந்தவர்களாக அவர்களை அவர் பாவிக்கிறார்.

'கண்டதும் காதல்' என்றேனே, அதுவும் தனித்ததோர் பொருளுடன் பொருத்தமும் உடையது தான். மற்றெந்த நாட்டையும்விட அமெரிக்காவையும் ஃபிரான்ஸையும் பொறுத்து அது அடிக்கடி நிகழ்கிறது என்பேன். பாஸ்கால் கூறியதற்கு மாறாக மக்களைத் தான் நாம் நேசிக்கிறோமே அன்றித் தன்மைகளையல்ல; நல்ல தன்மைகளுக்காக மட்டுமின்றிச் சில சமயங்களில் அவர்களுடைய குறைபாடுகளுக்காகவும் கூடச் சிலரை நேசிக்கிறோம். ஃபிரான்ஸையோ



அமெரிக்காவையோ பார்த்ததுமே ஒருவன் அன்பு செலுத்தத் தொடங்கிவிடுகிறான் என்றால் அது ஒரு தார்மிக வியக்தியை, ஒரு தொழில் நெறியை அவன் எதிர்ப்படுவதாலேயே எனலாம்; ஆன்மீகத் தன்மை படைத்ததும், கிறிஸ்தவ தர்மம், மரபு வழிவந்த பொறியொன்றினால் தூண்டப்பட்டதுமான மதிப்புமிக்க கௌரவத்தின் ஒரு கூறு அவன் கண்ணில் படுவதால் தான் என்று கூறலாம்.

* * *

அப்படியாயின் முதன் முதலில் என் மனத்தில் உதித்த எண்ணம் யாது?

வார்த்தைகளில் வடித்துரைப்பது கடினமேயெனினும் திட்டவட்டமானதே அது. மிகுந்த முக்கியத்துவமுடைய ஆழ்ந்ததொரு மாறுபாடே, தெளிவற்ற முறையில் என்னை எதிர்நோக்குவதாக உணர்ந்தேன். ஒரு புறம் மக்களுக்கும், மறுபுறத்தில் (வெளியிலிருந்து அவர்கள்மேல் சுமத்தப்பட்டதென நான் கூறவிரும்பும்) நாகரிகத்தின் அமைப்பு அல்லது சடங்குமுறைக்கும் இடையே நான் கண்ட கடும் வேற்றுமையே அது.

நான் நாகரிகத்தின் அமைப்பு அல்லது சடங்குமுறை என்று கூறுவது, ஐரோப்பாவில் பிறந்து இந்நாட்டில் இறக்குமதியாகிய தொழிலியல் நாகரிகத்தையே குறிப்பதாகும்; ஆண்டவனால் சுதந்தரராகப் படைக்கப்பட்டவர்களும், முன்னோடிகளுமான இந்நாட்டு மக்கள் மீது மேகம் போல் கவிந்திருக்கும் பான்மையையே முதலெடுப்பில் நான் கண்டேன்.

ஐரோப்பாவில் நான் அறிந்திருந்த இந்தத் தொழிலியல் நாகரிகமானது (ஐரோப்பாவிலிருந்து கொண்டுவந்து ஊன்றப்பட்ட மற்றும் பலவற்றைப் போலவே) இங்கு மிகமிக வளர்ச்சியுற்றிருப்பதாகவும், அந்நியத் தேவதை எதற்கோ ஆற்றும் சடங்கொன்றைப் போலவுமே எனக்குத் தோன்றியது. பணமே வளமும் வலிமையும் உடையது என்னும் தத்துவத்தையும், தனியொருவர் அடையும் லாபத்துக்கு முட்டுக்கட்டை ஏதும் கிடையாது என்னும் கொள்கையையுமே ஆரம்ப ஆதாரங்களாகக் கொண்டிருந்தபடியால், நானறிந்த இந்தத் தொழிலியல் நாகரிகத்தின் உட்தத்துவமானது உல

கெங்கணும் மனிதத் தன்மையற்றதாகவும், பருப்பொருள் வேட்கை உடையதாகவுமே எனக்குப் பட்டது.

ஆயினும் இந்த நாகரிக அமைப்பு அல்லது சடங்கு முறைக்கு உட்பட்டு வாழ்ந்தும் உழைத்தும் வந்தபோதிலும் அதற்குத் தங்கள் ஆத்மாவை அமெரிக்கர் இரையாக்கிவிட வில்லை என்ற விசித்திரமான முரண்பாட்டையும் கண்டேன். முற்றிலும் அல்லாவிடினும் அடிப்படை அம்சங்களைப் பொறுத்தவரையிலுமாவது அவர்களுடைய ஆத்மாக்களும் ஜீவ சக்தியும், அவர்களுடைய லட்சியக் கனவுகளும் அன்றாட முயற்சிகளும், அவர்களுடைய ஆதர்ச ஆர்வமும் தாராள மனோபாவமும் மேலே சுமத்தப்பட்ட இவ்வமைப்பின் உட் தத்துவத்துக்கு முரணாக இருந்ததைப் பார்த்தேன். சுதந்தரத்தையும் மனிதகுலத்தையும் நேசிப்பவர்களாகவும், நல்லொழுக்க நியதிகளின் முக்கியத்துவத்தில் விடாப்பற்று உடையவர்களாகவும், உலகைக் காப்பாற்றத் துடிப்பவர்களாகவும், தொழிலியல் கட்டத்தை எய்திவிட்ட தற்கால மக்கட் தொகுதிகள் அனைத்திடையிலும் மனிதத்தன்மை மிகுந்தவர்களாகவும், பருப்பொருள் நோக்கு குறைந்தவர்களாகவுமே அமெரிக்கர் எனக்குத் தென்பட்டனர். எனவே, அமெரிக்க மக்களின் ஆதார உணர்ச்சிக்கும், அவர்கள்மேல் சுமத்தப் பட்ட நாகரிகத்தின் அமைப்பு அல்லது சடங்குமுறையின் உட்தத்துவத்துக்குமிடையே இருந்த தீவிர வேறுபாட்டை உன்னியுணர்வது அவசியம் என்பதே முதலெடுப்பில் என் மனத்தில் எழுந்த எண்ணத்தின் அடிப்படையான அம்சம். அந்த வேறுபாட்டை மட்டுமின்றி மக்களின் ஆதார உணர்ச்சிக்கும் நாகரிக அமைப்பின் உட்தத்துவத்திற்குமிடையில் இருந்த பிணக்கையும், மறைமுகமான மோதலையும், அந்த அமைப்பின் உள்நியதிக்கெதிராக மக்களின் ஆதார உணர்ச்சியில் பொதிந்து கிடந்த புரட்சிக் கருவையும் ஆய்ந்தறிவது அவசியமென உணர்ந்தேன்.

அடுத்து, முக்கியத்துவம் மிகுந்ததொருகேள்வி எழுந்தது: மக்களின் ஆதார உணர்ச்சிக்கும், அமைப்பின் நியதிக்கும் இடையே எழும் மோதலின் முடிவு என்னவாகவிருக்கும்?— என் முதலெண்ணத்தின் இரண்டாவது முக்கியாம்சம் இதுவேயாம்.



என்னுடைய இந்த முதலெண்ணமானது விஷயங்களை அளவுக்கதிகமாக எளியனவாக்கியும், பரபரப்பூட்டியும் காட்டியது என்பது உண்மைதான். இருப்பினும் என் முதலெண்ணம் அடிப்படையில் மெய்யானது என்றே கருதுகிறேன். உண்மையில், நான் முதல் முறையாக இந்நாட்டுக்கு வந்த 1933-ஆம் வருடமானது, பல்லாண்டுகளுக்கு முன் தியோடர் ரூஸ்வெல்ட் காலத்தில் தொடங்கிய உள்ளங்கவர் நிகழ்ச்சிகளின் முக்கியத் திருப்பமொன்று விளைந்த சமயம் என்றே எனக்குப் படுகிறது.

நான் இந்நாட்டில் வாழத் தொடங்கி ஆண்டுகள் ஆக ஆக, நான் மேலே குறிப்பிட்ட முக்கியக் கேள்விக்கான விடையும் மேன்மேலும் வன்மையாக எனக்குப் புலப்படலாயிற்று— தொழிலியல் நாகரிக அமைப்பின் நியதிமுறையை மக்களின் உள் உணர்ச்சி சிறுகச் சிறுக வெற்றிகொண்டு உடைத்தெறிகிறது என்பதே அந்த விடை. அதாவது, நம் தற்காலத் தொழிலியல் நாகரிக அமைப்புகளின்மீது அமெரிக்க மக்களும் அவர்களுடைய ஆன்மாவும் பிரயோகிக்கும் அதிமுக்கியமானதும், சரித்திர காரியாம்சமானதும், முற்றிலும் முறையேதுமற்றதுமான நிர்ப்பந்தமானது தொழிலியல் ஆதிக்கத்தின் உள்விசையையும் சரித்திரப்போக்குக்களையும் உள்ளிருந்தவாறே மாற்றிவருகிறது என்பதாகும். இந்தத் தொழிலாதிக்கத்தை முதலாளித்துவத்துக்கு அப்பால் செல்லுமாறு அது செய்து வருகிறது. இவ்வாறாக, தொழில் ஆதிபத்தியத்தின் சரித்திரபூர்வமான முதல் கட்டத்தில் அதன் உட்தத்துவத்தை அமெரிக்கர் வென்றுவிட்டனர்; அதோடன்றி, தாம் அறியாமலேயே நவீன நாகரிகத்தில் உண்மையிலேயே புதியதொரு கட்டத்தைத் தொடங்கியும் விட்டனர்.

இவ்விஷயத்தை எடுத்துரைப்பதோடு இப்போது நிறுத்திங் கொள்கிறேன்; பின்னொரு அத்தியாயத்தில் விரிவாக ஆராய்கிறேன்.

பாவில் சில சமயங்களில் எல்லையற்ற தியாகங்களுக்கு உட்பட்ட பின்னரே வாய்க்கப்பெற்ற அனுபவம் இது.

சரித்திர வெள்ளத்திலிருந்து விடுபட்டுள்ளோம் என்ற பிரமையைப்பற்றி மற்றொரு கருத்தையும் கூற விரும்புகிறேன்: —அமெரிக்க மக்களுக்கும் மார்க்ஸிஸத் தத்துவத்துக்குமிடையே அடிப்படையாகவேயுள்ள பொருத்தமின்மையைத் தான் சுட்டுகிறேன். சரித்திரம் என்பது ஒன்றோடொன்று தொடர்புள்ள மிகக் கடுமையான பற்பல அவசியங்களால் உருவாவது என்றும், தன் இறுதி விமோசனத்திற்காக அவற்றினிடையே மனிதன் உழல்கிறான் என்றும் மார்க்ஸ் வித்தகரின் கொள்கை விளக்குகிறது என்பதை நாம் அறிவோம். இறுதியில் பொதுவுடைமைத் தத்துவத்தின் மூலம் ஒருவன் தன் சரித்திரத்துக்குத் தானே நாயகனாய் விளங்கித் தன்னை முன்பு அழுத்தி நொறுக்கிய பிரம்மாண்டச் சகடத்தை அவனே ஓட்டுவான் என்கிறார் அவர். ஆனால் அமெரிக்க மக்களோ முற்றிலும் வேறுவிதமாகக் கருதுகிறார்கள். அந்தப் பிரம்மாண்டச் சகடத்தை ஓட்டுவதில் அவர்களுக்கு அக்கறை கிடையாது. அந்தச் சகடத்தையே அவர்கள் தொலைத்துத் தலைமுழுகிவிட்டார்கள். அவர்களுடைய சிரத்தையெல்லாம் மனிதனின் நிகழ்காலச் சுதந்தரத்தில் தானேயன்றி, வருங்காலத்தில் ஒரு திவ்விய அவதார புருஷனால் கிடைக்கப்பெறும் மனிதகுலச் சுதந்தரத்திலோ, அன்றி சரித்திரத்தின் இன்றியமையாத துறைகளைக் கைவசப்படுத்துவதிலோ அல்ல. சுதந்தர இயக்கத்தைப் புறசாதனமின்றி டயோஜினிஸ் நிரூபித்தது போல அமெரிக்கர்களும் இச் சுதந்தரத்தைத் தங்கள் விருப்பம்போல் நடந்து கொள்ளும் முறையில் புலப்படுத்துகிறார்கள். சரித்திரம் என்பது ஒருவகையில் அவர்களைப் பின்தொடர்ந்து உருவாகக்கூடிய ஒன்றேயாம். அமெரிக்க வீதிகளை அடிக்கடி களிப்பில் மூழ்த்தும் பெரிய ஊர்வலங்களில் பேரொலி எழுப்பும் வாத்திய கோஷ்டிகளையும் விசித்திர உடைகளில் நடைபோடும் வனிதையரையும் போலச் சரித்திரத்தை முந்திக்கொண்டு நடக்கிறார்கள், அணிவகுத்து முன்னேறுகிறார்கள், துள்ளிப் பாய்கிறார்கள் அவர்கள்.

# 4

## அமெரிக்கர்களின் "பருப் பொருள் பற்று" எனும் பழைய பல்லவி

இந்நாட்டிற்கு வந்து சேர்ந்ததும் என் மனத்தில் ஏற்பட்ட முதலெண்ணங்களைக் கூறிவிட்டேன். இரண்டு நூற்றாண்டுகளுக்குள் புதியதொரு உலகத்தைப் படைக்கவும், இந்தக் கண்டம் முழுவதிலுமுள்ள சுதந்தர மனிதர்களுக்கு ஏற்றவையான பொருள் துறை, தார்மிக சாதன வசதிகளை வழங்கவும், அனைவரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்திக் கவர்ந்திழுக்கக்கூடியதும் உண்மையிலேயே முற்றிலும் புத்தம் புதுத் தன்மையுடன் காட்சியளிப்பதுமான ஒரு நாகரிகத்தை உருவாக்கவும் ஈடுபடுத்தப்பட்ட அளப்பரிய மனித முயற்சியை அன்று முதற்கொண்டு மேன்மேலும் அதிக அளவில்நான் உணர்ந்து வந்திருக்கிறேன். இவ்வகையில் சாதிக்கப்பட்ட ஆக்க வேலையையும், இடையறாமல் இன்றும் தொடரும் படைப்புப் பணியையும் மேன்மேலும் வியந்து மகிழ்ந்து வந்துள்ளேன்.

தொழிலியல் கட்டத்தை அடைந்துள்ள தற்கால மக்கட் தொகுதிகளில் அமெரிக்கர் தான் மிகக் குறைந்த அளவுக்கு பருப் பொருள் பற்றிய நாட்டம் உடையவர்கள் என்பதை ஏற்கெனவேயே கூறியிருக்கிறேன். *1945*-ம் வருடத்தில் ரோமாபுரிக்குப் புறப்படுமுன் நிகழ்த்திய பிரசங்கமொன்றில் இதை நான் விளக்கியுள்ளேன்*

"அமெரிக்கர்களுள்ளுமே சிலர் எளிதில் கருதும் வகையில் அமெரிக்கா வெறும் பருப் பொருள் போக்குடையதன்று. தொழில் துறை நுட்பங்களையும் செல்வத்தின் ஆதிக்கத்தையும் சார்ந்து நிற்கின்ற நவீன நாகரிகம் சுமத்தும் உலகாயதச்

---

* நியூயார்க்கிலுள்ள ஃபிரெஞ்சுஅமெரிக்கக் கிளப் 1945 மார்ச் 15-ஆம் தேதி அளித்த விருந்தின்போது நிகழ்த்தியது இது.

அமெரிக்கா புலப்படுத்தும்
சுமையைத் தாங்கும் முறையில்
தைரியமே இவ்வுண்மையைத் தெளிவுபடுத்துகின்றது.''
நான் இவ்விஷயத்தை வலியுறுத்த விரும்புகிறேன்.
ஏனெனில், தாமுமே சுகபோக வாழ்க்கையில் திளைக்கும் பல
ஐரோப்பியர்கள் 'இந்நாடு வெறும் பௌதிக விஷயங்களில்
ஆர்வம் கொண்டுள்ளது' என்று ஓயாமல் சாடிக் கொண்டிருப்
பதைக் கேட்டுக்கேட்டு என் மனம் மிகவும் கசந்து விட்டது.
இந்தக் கட்டுக் கதை ஆற்றல் மிக்கது; இப்படிப் புறங்கூறு
கிறவர்களின் கூற்று உண்மையாகவும் இருக்கக் கூடுமோ
என்று சில சமயங்களில் நீங்களே கூட ஏமாந்து நம்பிவிடுகிறீர்
கள். ''நாங்கள் இக வாழ்வில் தோய்ந்தவர்கள்; அல்லவா ?''
என்று நியூயார்க்கில் சில அமெரிக்கப் பெண்மணிகள் சற்றுத்
திகைப்புடன் (அதில் ஓரளவு குறும்புத்தனமும் கலந்திருக்
கலாம்) கண்சிமிட்டிக் கேட்டது எனக்கு ஞாபகம் வருகிறது—
அமெரிக்கரின் உலகாயதத்தன்மை பற்றிய இந்தப் பேச்செல்
லாம் முட்டாள்தனமான வம்பும் அபவாதமும் கலந்து நெய்த
திரையேயன்றி வேறொன்றுமில்லை.

உலகாயத வாழ்க்கையில் (குறிப்பாகப் பிறர் வாழ்வில்)
எந்த அபிவிருத்தியையும் இழிவாக நினைப்பதே தக்க பார
மார்த்திக உணர்ச்சியாகும் என்ற செருக்கில் எழுந்த குழப்பத்
தின் விளைவே இந்தக் கட்டுக்கதை; அந்தப் பழைய தப்பபிப்
பிராயத்தினாலேயே என் ஐரோப்பிய நண்பர்கள் பலரின்
மனத்தில் இது ஊன்றியுள்ளது. மற்றும் சிலர் சம்பந்தப்
பட்டவரையில் இந்த உலகாயதம் பற்றிய கட்டுக் கதை
(சாமானிய ஹாலிவுட் திரைப்படங்கள் போன்று, நீங்கள்
ஏற்றுமதி செய்யும் சிலவற்றின் தன்மையினால் இந்தக்
கருத்து ஊட்டம் பெற்றிருக்கலாம்.) ஐரோப்பா அனுபவிக்க
நேர்ந்த மனமுறிவுகளுக்கு ஒரு வகையில் பரிகாரமாய்
இருக்கலாம். ஒருவன் ஒருத்தனுக்கு நன்றி செலுத்த நேரும்
போது எழும் மனத்தாங்கலுக்கு ஒரு வகையில் ஆறுதல் போல
வும் இது உதவலாம். மற்றும் சிலரைப் பொறுத்தோ, அவர்
கள் அளவுக்கதிகமாக எதிர்பார்த்து ஏமாறுவதால் எழுகிறது
இந்தக் கட்டுக்கதை—தங்களை அமெரிக்கர் புரிந்துகொள்ள
வேண்டுமென ஐரோப்பியர்கள் எதிர்பார்க்கிறார்கள்; சில



சமயங்களில் அவர்கள் எதிர்பார்க்கிறபடி இவ்வாறு புரிந்து
கொள்ளாததால் ஏற்படுகிறது இந்த ஏமாற்றம்.

* * *

உலகில் மற்றெல்லா இடங்களிலும் போலவே, குறிப்பா
கத் தொழில்மயமாகியுள்ள தேசங்களில் போலவே, அமெரிக்க
மக்களின் பொது மனோபாவத்தில் பெரும் பகுதி—பொது
வாக, எளிதில் புலப்படும் அதன் மேலெழுந்தவாறான பகுதி—
நம் தற்கால நாகரிகத்தின் அமைப்புக்கள், சடங்குகளிலிருந்து
வரும் தொற்றுப் புண்ணே போல் அமைந்துள்ளது என்பதை
மறுக்கும் உத்தேசம் எனக்குக் கிடையாது. புள்ளிக் கணக்கு
கள், விவரங்கள் ஆகியவற்றையோ, அல்லது வெற்றி,
கேளிக்கை அம்சம், நடைமுறைச் சக்தி ஆகியவற்
றையோ வைத்துக் கொண்டே எதனையும் அளவிடுபவர்களும்,
நுகர்ச்சியில் நாட்டம் கொண்டவர்கள் அல்லது நிர்வாகத்தில்
பங்கு கொள்ளாத கூட்டாளிகள், அன்றி, ஏமாளிகள் என்று
எண்ணி எல்லோர் மீதும் திணிக்கக்கூடியவையாகக் கருத்துக்
களை நினைப்பவர்களும், ஹார்மோன்கள் அல்லது பொருளா
தாரச் சந்தர்ப்பங்களின் உபபொருளாகவே மனித நடத்
தையை மதிப்பவர்களுமான கூட்டத்தினரின் கிரந்தி நோய்
போல் அருவருக்கத்தக்க வலியுறுத்தலினால் எழும் பேரொலி
யானது எவருக்கும் காதில் விழாமல் இருப்பதற்கில்லை.

தங்கள் சொந்த வாழ்க்கையின் லட்சியங்கள், அல்லது
அரசியல் துறையில் தங்கள் விருப்புக்கள் போன்றவை குறித்து
மக்கள் அளிக்கும் விடைகளினால் ஒருவர் தவறான முடிவுக்கு
வந்துவிடக்கூடும் என்பது உண்மைதான். மொழிகளின்
தோற்றம், அவையளிக்கும் வாய்ப்புக்கள் காரணமாகவும்
இத்தகைய தவறான வழியில் செலுத்தப்படலாம். ஏனெனில்
நம் அன்றாட வாழ்வில் நம் மூளைக்குக் குறைந்தபட்ச
வேலையையே கொடுக்கக் கூடிய வார்த்தைகளைத்தான் நாம்
பெரிதும் உபயோகிக்கிறோம். இவ்வகையில், பகட்டான
மொழிகளில் பேசுவதைவிட எளிய முறையில் பேசுவதே இலகு
வாக உள்ளது என்பதைக் கூறத் தேவையில்லை. எனினும்
இந்நாட்டில் சரித்திரபூர்வமான உந்துதலினால் அறிவுத்

துறையில் உயரிய அந்தஸ்தும், அதிகப்படியான ஆக்கமும்
அளிக்கப்பட்டிருப்பதும், இன்னதென இனம் காணுமலேயே
பொதுமக்களிடையே பரவிப்படரச் செய்யப்பட்டிருப்பது
மான தத்துவத்தை உலகெங்கிலும் பரப்புவதால் நான் குறிப்
பிடும் உலகாயதத் தொற்று நோயானது இன்னும் வலிமை
பெற்றுவிடும் என்பதும் மெய்தான். இவற்றையெல்லாம்
நான் மறுக்கவில்லை. அமெரிக்காவின் உலகாயதப் போக்குக்
குச் சான்ருக இவற்றை இழுப்பது மடமையேயாகும். ஏனெ
னில், அமெரிக்கரிடம் மட்டும் உள்ள குறைபாடுகளல்ல இவை.
தொழிலாதிக்கமும், அதற்கு அனுகுணமான கோட்பாடுகளும்
நிலவும் எல்லா நாடுகளிலும் (குறிப்பாக, ஐரோப்பாவில்)
இதே போன்ற சமூக அமைப்பும் மனநிலையும் உள்ள இடங்
களிலெல்லாம் இத்தகைய நோயின் அறிகுறிகளைக் காணலாம்;
மற்ற இடங்களில் இன்னும் எச்சரிக்கையுடனும், அறிவின்
மெருகுடனும் வெளியிடப்படுகையில் இங்கு அதன் குரல்
சற்றே கர்ட்டுக் கூச்சலாகவும் அப்பாவித்தனமாகவும் ஒலிக்
கிறது என்பதொன்றே வித்தியாசம்.

இரண்டாவதாக, பொது மன நிலையின் ஆழமானவையும்
முக்கியமானவையுமான பகுதிகளைக் குறிப்பவையும், அமெரிக்
கருக்கே உரித்தானவையுமான எதிர்மாருன போக்குக்களும்
இயல்புகளும் இங்கு ஏராளமாக இருக்கின்றன—இவையெல்
லாம் அமெரிக்கர் பருவுலக நாட்டத்தில் திளைப்பவர் என்ற
கட்டுக் கதைக்குத் தகுந்த மறுப்பாகத் திகழ்கின்றன.

* * *

உலகாயதத்தின் லட்சணங்கள் என எவற்றை அவர்கள்
கருதுகிருர்கள் என்று இந்நாட்டைக் குறை கூறும் ஐரோப்
பியரைக் கேட்க ஆசைப்படுகிறேன். தாராள குணமும் நல்
லெண்ண நிறைவும் உலகாயத மனத்திற்குரிய அறிகுறிகளா ?
தனிப்பட்ட மனிதர் எவரையும் குறிப்பிடாமல் மக்களின்
பொது மனோபாவத்தையும் கூட்டுப் போக்குகளையும் பழக்க
வழக்கங்களையுமே கருதிப்பார்க்குமிடத்து தாராள குணம், நல்
லெண்ணம், சகோதரத்துவம் ஆகியவையே அமெரிக்கரின்
அடிப்படை இயல்புகள் எனலாம்.



மற்ற நாடுகளில் போலவே அமெரிக்காவிலும் அகம்பாவம்
பிடித்தவர்கள் இருக்கத்தான் இருக்கிருர்கள். ஆனுல் நாடு
என்ற முறையில் அமெரிக்கா அகங்காரம் உடையதன்று. ஏனெ
னில், தற்செருக்கை வெட்கத்துக்குரியதாகவே அமெரிக்கர்கள்
பொதுவாக நினைக்கிருர்கள்.

இதர இடங்களில் போன்று அமெரிக்காவிலும் பேராசை
மிக்கவர்கள் இருப்பதும் உண்மையே. ஆனுல் அமெரிக்கரின்
உள அமைப்பில் பேராசைக்கு இடமேயில்லை.

நவீன உலகில் பணத்தின் முக்கியத்துவம் பற்றிப்
பாசாங்கு செய்பவர்களாக அமெரிக்கர்கள் இல்லை. அதன்
முக்கியத்துவத்தை ஒளிவு மறைவின்றி அவர்கள் ஒப்புக்கொள்
வதேகூட ஐரோப்பியருக்குத் தர்ம சங்கடமாக இருக்கிறது.
ஏனெனில், சாதாரண அமெரிக்கரைப் போலவே சாதாரண
ஐரோப்பியருக்கும் பண விஷயத்தில் சிரத்தை இருக்கவே
செய்கிறது; ஆனுல் பணத்தைப் பேராசை என்ற பான்மை
யோடு பிணைத்தே கருதுபவராதலால் அந்த உண்மையை
மறைக்க ஐரோப்பியர் அரும்பாடு படுகிருர்.

இதற்கு மாருக இங்கோ பணத்தில் பகிரங்கமாக நாட்
டம் காட்டப்படுகிறது. பணம் ஒரு சாதனக்கருவியாகும்;
சேமித்து வைக்கப்படுவதற்கின்றிச் செலவிடப்படுவதற்குரியது
அது என்று கருதப்படுவதே இதற்குக் காரணம். சொந்த
வாழ்க்கையை வளமுறச் செய்வதற்கும், செயலாற்றுவதில்
சுதந்தரத்திற்கும் இன்றியமையாமையோடன்றி, மற்றவர்
களின் வாழ்க்கையை வளப்படுத்துவதற்கும் செலவிடற்குரிய
தெனப் பணம் பாவிக்கப்படுவது முக்கியமாகக் கவனிக்கத்
தக்கது.

பிறருக்குக் கொடையளிப்பதில் ஆர்வமுடையவர்கள்
அமெரிக்கர்கள். இவ்வகையில், பொதுநலக் காரியங்களுக்கு
வழங்கப்படும் தானங்களுக்கு வரிவிலக்கு அளிக்கப்படுவது
பேருக்கமாக உதவுகிறது என்பது உண்மையே. இருப்பினும்,
பிறரிடமிருந்து பெறுவதைவிடப் பிறருக்குக் கொடுப்பது சிறப்
பாகும் என்ற உண்மையைப் பொதுவாக அமெரிக்கர் உணர்ந்
துள்ளனர் என்பதைச் சட்ட மன்றத்தினர் அறிந்திருந்
தாலன்றி வரிவிலக்குபற்றிய இந்த ஏற்பாடு சட்டமாகியிராது
என்பதையும் சற்றுச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். பெரும்

தர்மஸ்தாபனங்கள் * மட்டுமின்றி இதர ஸ்தாபனங்களி னுடையவும், எண்ணிறந்த தனிப்பட்ட கோஷ்டிகளுடையவும் சாதாரண நடவடிக்கைகளும் கூட, பொது நலத்துக்காகத் தன் பணத்தைச் செலவிடும் சேவா தத்பரரான பிரஜை யைப் பொறுத்த பண்டைய கிரேக்க, ரோமானியக் கருத் தானது இன்றைய அமெரிக்கர் மனத்தில் ஆழ்ந்து வேரூன்றி யுள்ளது என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. இந்த நற் கொடைகள் பெரும்பாலும் கல்விப் பணிக்காகவும், அறிவைப் பரப்புவதற்குமே அளிக்கப்படுகின்றன. கல்லூரிப் படிப்புப் பெற இயலாது போனவர்கள் பலர் சர்வகலாசாலைகளுக்குப் பெரும் நிதி வழங்குகின்றனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

அமெரிக்கரின் அன்றாட அலுவல் கிரமமாக அமைந்து ஆச்சரியப்படத்தக்க அளவு எண்ணிறந்தவையாக இருக்கும் உதவி முயற்சிகளிலோ, மற்றவர்களின் பால், குறிப்பாக வெளிநாடுகளில் அல்லலுக்கு ஆளாகியிருக்கும் மக்களிடம் தங்களுக்குக் கடமைப்பொறுப்பு உண்டு என்னும் அவர்களு டைய தீவிர உணர்ச்சியிலோ உலகாயதப் பான்மையின் சுவடு இருப்பதாக நான் எண்ணவில்லை.

போர்க்காலத்தில் ஐரோப்பிய அறிஞர்களுக்கு மீட்புச் சங்கங்கள் அளித்த பேருதவியை என்னால் ஒருநாளும் மறக்கவியலாது. ஏதாவது உபகாரத் திட்டத்துக்காக, ஏலம் கூறுபவர் வாசாலகமாகப் பேசி, விருந்துகளுக்கு ஆர்வமுடன் ஏராளமாகக் கூடிய மக்களிடமிருந்து பணத்தைத் திரட்டிய

---

* இம்முறையில் குறைபாடுகள் உள்ளன என்று கூறுவோரும் இருக்கின்றனர். தாங்களாகவே சொந்தத்தில் ஒரு வேலையைத் தொடங்கியிருக்கக்கூடியவர்கள் இம்மாதிரியான தானங்களுக்காக வாயல பட்சிபோல் காத்துக் கிடந்து பொழுதை வீணடிக்கிறார்கள் என்கின்றனர் அவர்கள். இந்தக் கண்டனத்தில் உண்மையுண்டா என்பது எனக்குத் தெரியாது. எப்படியும், தற்செயலாகச் சூழ்ந்த குறைபாடுகளாகவே இவை எனக்குத் தோன்றுகின்றன. சுயேச் சையின் பயனாகத் தோன்றி, அரசாங்கக் கட்டுப்பாட்டிலிருந்து விடு பட்டுநிற்கும் அமெரிக்காவின் மகத்தான தர்ம ஸ்தாபனங்களை நவீ னக் கலாசாரத்தின் உன்னதமான உபகார உறுப்புக்களாகவேதான் கருதுகிறேன்.



காட்சியை எந்நாளும் மறவேன். இன்னல்களிலிருந்து மீட்கும் இந்தப் பணியை வியத்தகு ஈடுபாட்டுடன் புரிந்த ஆல்வின் ஜான்ஸன் (சமூக ஆராய்ச்சிக்கான புதிய பள்ளியின் தலைவ ராக அவர் அப்போது இருந்தார்), பின்னர் தம் பள்ளியின் உதவி யைக் கொண்டு அதன் கட்டடத்திலேயே ஃபிரெஞ்சு மேற் படிப்புக்காக நிறுவப்பட்ட இலவசப் பள்ளிக்கு அளித்த ஒத்துழைப்பும் மறக்கற்பாலதன்று.

ஒவ்வொருவருடைய நன்கொடையும் ஒன்று குவிந்து உருவாகும் அமெரிக்க தர்மநிதி ஸ்தாபனங்களில் உலகாயத அம்சம் எதுவும் கிடையாது. முக்கியமாகப் பிற நாடுகளி லுள்ள மக்களுக்கு உதவுவதற்காக வழங்கப்படும் இந்த நன் கொடைகள் வருடந்தோறும் மலையளவு குவிகின்றன. இதன் விளைவாக அமெரிக்கப் பெருந்தொழில்களில் ஒன்றாகக்கூட ஆகிவிட்டது, இந்தத் தர்மநிதிப் பண்பு—மாபெருந் தொழில் களில் இரண்டாவது அல்லது மூன்றாவது ஸ்தானத்தை இது வகிப்பதாகப் புள்ளிவிவர நிபுணர்கள் கூறுகின்றனர்.

ஆம், இக்காரணத்தினாலேயே நன்கொடைகள் என்ற பான்மை கூடத் தொழிலியலுக்கு இரையாகிவிடும், அல் லது அளவுக்கு மிஞ்சி அது இயங்கக்கூடும் என்ற அபாயத்துக்கு இடந்தரலாகும் என்பதை நான் அறிவேன். ஆனால் பேய் காப்பதுபோலப் பணத்தைக் கட்டிக் காப்பவர்கள் தாம் இந்த ஆபத்திலிருந்து அறவே ஒதுங்கி விடுவரே! தேவைப்படுபவர்களுக்கும் ஆதரவற்றிருப்பவர்க ளுக்கும் பணம் திரட்டுவது மிக மிகத் திட்டமான ரீதியில் நடப்பதன் விளைவாக ஒவ்வோராண்டும் நாம் பணம் கொடுக் கும்போது இதயக்கதவைத் திறக்காமல் இயந்திரம்போல நடந்துகொள்ள நமக்குத் தோன்றுகிறதென்றே வைத்துக் கொள்வோம். (ஆனால் ஐரோப்பிய வீதிகளிலும்கூடக் கருணை வெள்ளம் கரைபுரண்டோடுவதாக நாம் கூறமுடியுமா, என்ன?) அப்போதும்கூட, குறிப்பிட்டதொரு துரதிருஷ்டம் அல்லது சமூகக் கோளாற்றைச் சீர்படுத்தும் பொருட்டு இன்றே எண்ணிறந்தவையாக இருப்பவற்றுடன் அன்றாடம் புதிதுபுதிதாக எழும் குழுக்கள் வாயிலாக இடையறாது செயற் படும் பெருமுயற்சிகளையோ, அன்றி அண்டை அயலாரின்

பால் செலுத்தப்படும் அளவற்ற அக்கறையையோ நாம் மறந்துவிட முடியாது.

* * *

அமெரிக்க வாழ்க்கை இயலில் ஏனைய தன்மைகளை இப்போது நான் கூறவிரும்புகிறேன். அதாவது, புதிய பிரச்னைகளைச் சமாளிப்பதிலும், புதிய சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு தங்களை மாற்றியமைத்துக்கொள்வதிலும் அமெரிக்கர் அசாதாரணமான அளவுக்கு நெகிழ்ந்து கொடுக்கும் பான்மையைக் குறிப்பிட ஆசைப்படுகிறேன். எதையும் உள்ளது உள்ளபடியாக ஏற்கவோ, கஷ்டப்பட்டும் கெட்டிக்காரத்தனத்தைக் காட்டியும் தான் மற்றவர்கள் தம் நிலையைத் தாமாகத் திருத்திக் கொள்ளவேண்டும் என்று வாளாவிருப்பதையுமோ அவர்கள் விரும்புவதில்லை. எதையும், எந்நிலையையும் சீர் செய்வதற்கே அவர்கள் விழைகிறார்கள். அவற்றில் ஈடுபடும் மனிதர்களை எண்ணிப் புதிய ஏற்பாடுகளையும் சாதனங்களையும் சமூக சேவைத் துறைகளையும் கண்டுபிடிப்பதில் அவர்கள் ஆர்வம் காட்டுகிறார்கள். “அளவுக்கு எஞ்சிய உள நெகிழ்ச்சித் திறன்” படைத்த உணர்ச்சிபற்றி ஹேகல் கூறினாரல்லவா? இந்த நெகிழ்ச்சித்திறன், ஆன்மா எப்போதும் விழிப்புடன் இயங்கி மக்கள் சமுத்திரத்தில் அலையோடச் செய்வதற்கே அறிகுறி.

அமெரிக்காவின் கணக்கற்ற ஜனத்தொகையில் தேக்கம் என்பதே எங்கனும் இல்லை என்றே நான் கூறலாகும். இதனால்தான் அமெரிக்காவை வெறும் நிலப்பரப்பாகவன்றிக் கடலாக, மகா சமுத்திரமாக நான் காண்கின்றேன். சில சமயங்களில் அதில் ஒரு புயலோ, பெரும் சுழலோ எழுகிறது; அனைத்தையும் அது மூழ்கடித்துவிடும் என்றே தோன்றுகிறது. ஆனால் மறுகணத்திலேயே மற்றொரு பேரலை கிளம்பி அந்தச் சுழலைச் சக்தியற்றதாக்கிவிடுகிறது. ஆம், கடலைப்போலவே கணக்கற்ற காற்றுத்திசை மாற்றங்களைக் காணக்கூடிய நாடு இது!*

* அமெரிக்காவின் ஜீவசக்திக்குச் சின்னமான பல்வேறு மாறுபட்ட கருத்துக்களையும் மோதல்களையும், விளைவைக் கருதாமல்



மக்களின் மூளை சுறுசுறுப்பாக வேலை செய்வதும் அவர்களுடைய அன்றாட வாழ்வு அடக்கமான முறையில் நடந்தேறுவதுமே அந்த நெகிழ்ச்சிக்கு மூலகாரணங்கள்.

மற்றும் பல அம்சங்களையும் நாம் வலியுறுத்தலாம். முதலாவதாக, நல்லொழுக்க, மத தர்மங்கள் குறித்து அமெரிக்கர்கள் கொண்டுள்ள அக்கறையையும், மனச் சாட்சிக்கு அவர்கள் அளிக்கும் மதிப்பையும் குறிப்பிடவேண்டும். எப்போதும் மனச்சாட்சி குறிக்கும் வழியிலேயே அவர்கள் நடக்கிறார்கள் என்று கூறவில்லை—அப்படிப் பார்க்கப்போனால் எந்த நாடுதான் அவ்வாறு செய்கிறது? ஆயினும் குற்றம் ஏதேனும் புரிந்துவிட்டால் அவர்கள் படும்பாடு சொல்லத்தரமில்லை. தங்கள் நடத்தை நெறியானதா இல்லையா என்ற ஐயமேகூட அவர்களை அல்லற்பட வைக்கிறது. இதனால் சில சமயங்களில் எதிர்பாராத பயன்கள் விளைகின்றன. ஹிரோஷிமாவில் அணுகுண்டு போட்டதையடுத்து ஜப்பானிய மக்களிடம் அவர்களுக்கு ஏற்பட்ட பரிவுப் பிரவாகத்தை இதற்கு உதாரணமாகக் கூறலாம். தங்கள் கையைப் பலப்படுத்திக் கொள்ளும் பொருட்டுப் பேயோடு நட்புக் கொள்வது உங்கள் அரசியல்வாதிகளுக்குக்கூடப் பிடிக்காத காரியம். இந்நாட்டு மக்களின் மனநிலையோ ஐயுற்று நையாண்டி செய்யும் மனப்பான்மையை வெறுக்கிறது; எதிலும் குணம் காணாமல் குற்றத்தையே கண்டுபிடிப்பது அதன் இயல்புக்கு அறவே முரணானது.

இந்நாட்டில் தங்குதடையற்றுச் சர்ச்சை செய்யும் பான்மை இதன் அடிப்படை இயல்பின் இரண்டாவது அம்சமாகும். கருத்து மாறுபடுவதற்கான உரிமையுடன் கூடியது இது. இந்த உரிமையின்றேல், சுதந்திர மக்கட் சமூகம் என்பதற்கு இடமேயில்லை. இங்கோ எந்தச் சரித்திர நிர்ப்பந்தமும் இதனை அதிக நாட்களுக்கு அடக்கியொடுக்க இயலாது. எங்கனும், அமெரிக்க சமுதாயத்தின் ஒவ்வொரு துறையிலும் ஆன்ம சோதனையும் சுயவிமர்சனமும் இடை

சீர்திருத்தப் புகும் முயற்சிகளையும் எப்போதும் புறக்கணித்துக் கொண்டேயிராமல் இருப்பது அரசாங்கப் பிரசார முறைக்கு நல்லது என்றே நான் இது சம்பந்தமாகக் கூற விரும்புகிறேன்.

உண்மையை அறி
விடாது நடந்துகொண்டே இருக்கின்றன. வெறும்
யும் ஆற்றல் இல்லாவிடில் இது இயலாத காரியம்.
பௌதிகப் பற்றுள்ளவர்களுக்கு இது என்றும் இயலாது.
கல்வித்துறையில் இலக்கியம், சரித்திரம் போன்றவற்றை
யும்*, கலைகள், தத்துவ சாஸ்திரம் முதலியவற்றையும் ஊக்கு
வித்து வளர்த்து அறிவாற்றலை இறுதி லட்சியமாக்குவதற்கு
நடந்துவரும் மாபெரும் போராட்டத்தை மூன்ருவது அம்ச
மாகக் கூறலாம். இந்தப் போராட்டத்தை சமூக சிந்தனைக்
குழுவினர் நன்கறிவர். உலகாயதப் போக்குடையது என்று
பழிக்கப்படும் இந்நாட்டில்தான் பேரிலக்கியப் பேராசிரியர்கள்
—பெரிய கல்லூரிகளில் மட்டுமின்றிச் சிறிய கல்லூரிகளிலும்—
தங்களிடம் ஒப்படைக்கப்பட்ட அறிவியல் பண்பாட்டை
நிலைநிறுத்துவதற்கு இணையற்ற பக்தி சிரத்தையுடன்
போராடி வருகிருர்கள். இங்கேதான் ஏதாவது ஒரு துறை
யில் மட்டும் புலமை பெற்று மற்றவற்றைப் புறக்கணித்து
விடுவதால் விளையக்கூடிய அபாயங்களையும், தொழிலியல்
நாகரிகத்துக்கு இயல்பான தொழில் நுட்ப மேலாதிக்கப்
போக்குக்களையும் சமாளிக்கச் சர்வகலாசாலைகளும், தொழில்
நுட்பக் கழகங்களும்கூடத் தீவிர முயற்சிகள் செய்து வருகின்
றன. இந்த அமெரிக்காவில்தான் ராபர்ட் எம். ஹட்சின்ஸ்
போன்ற சீர்திருத்தச் செம்மல் கடும் கண்டனக் குரலெழுப்பி,
அறிவியல் துறைகள் பலவும் ஒருங்கிணைந்து இயங்கும் அவசி
யத்தை அறிவுறுத்தியுள்ளார்—கல்லூரிகளில் அவருக்குற்ற
சிறப்பைப்பற்றிக் குறிப்பிடத் தேவையில்லாத அளவுக்குப்
பொதுமக்களிடையே பிரசித்தி பெற்றுள்ள அவர்தான்
இதுகாறும் நான் கூறிய பெருமுயற்சிகளைத் தூண்டியவர்.
அறிவு பெறுவதற்கான துடிப்பை, தாகத்தை நான்காவது
அம்சமாகக் குறிப்பிட வேண்டும். அமெரிக்காவெங்கிலும்
உள்ள இளைஞர்களிடையே ஆண்டுதோறும் நான் காணும்

* இவ்வகையில் அமெரிக்காவின் தலையாய அறிஞர்களுள் என்
பாராட்டுதலை முக்கியமாக இவர்களுக்குத் தெரிவிக்க விரும்பு
கிறேன்: மார்க் வான் டோரென், லேன் கூப்பர், விட்னி
ஜே. ஓட்ஸ், எர்வின் பனே:ப்ஸ்கி, ஹன்டிங்டன் கெயர்ன்ஸ், ஆர்.
பி. ப்ளாக்மர், ஃப்ரான்ஸிஸ் ஃபெர்குஸன், ஈ. பி. ஈ. பார்கர்ஹாஃப்.



இந்த ஆர்வமானது, அறிவின் பயனாக வாழ்க்கையில் பெறக்
கூடிய வசதிகளுக்காக மட்டுமின்றி மூளைக்கு மிக அவசியம்
என்ற உணர்விஞலும் மூண்டுள்ளது என்பது முக்கியமாகக்
கவனிக்கத்தக்கது. மக்கள் அனைவரிடையிலும்—படித்தவ
ரிடை மட்டுமின்றிப் படிக்காத பாமரரிடையிலும்—இந்த அறி
வுப்பசி நிலவுகிறது. மற்ற இடங்களில் போலவே இங்கும்
இது கல்வியினுலோ, ஆசிரியர்களினுலோ கிளறப்பட்டதல்ல.
(உண்மையில், இந்த அறிவுப் பசியை மாய்க்கவுமே கூட ஆசி
ரியர்கள் சில சமயங்களில் முனைவதாகவும் தோன்றுகிருர்கள்)
மனித இயற்கையின் இன்றியமையாத இந்த அறிவுத்தாகம்
அமெரிக்க மக்களிடையே விசேஷப் புத்துணர்ச்சியுடையதாக
வும், பேரளவிலும், மிக மிகத் தீவிரமாகவும் உள்ளது.

ஆன்மிக வாழ்வின்பாலுள்ள ஆழ்ந்த பற்று, ஐந்தாவ
தாகக் குறிப்பிடத்தக்க அம்சமாகும். மேன்மேலும் பெரும்
அளவில் புலப்பட்டுவரும் இதனைக் குறிப்பாக இளைஞர்களி
டையே காண்கிறோம். பலரைப் பொறுத்தவரையில் அவர்கள்
அறியாமலேயே இந்த நாட்டம் அவர்களிடம் விரிந்து வரு
கிறது; வாழ்க்கை நிலைமை, இடையருத கடுந்தொண்டு ஆகி
யவை காரணமாக இந்த நாட்டம் ஒடுங்கிக் கிடக்கிறது. இருப்
பினும் இந்த ஆர்வம் உள்ளது, உயிர்த்துடிப்புடன் இயங்கு
கிறது என்பதும், ஆன்மாக்களை இடைவிடாமல் தூண்டி வரு
கிறது என்பதும் மறுக்க முடியாத உண்மையாகும்.

பல வருடங்களாக இவ்வுண்மை பற்றி நன்கறிவேன். இரு
பதாண்டுகளுக்கு முன்பே 'செயலும் சிந்தனையும்' என்ற தலைப்
பில் நான் உருவாக்கிய பிரசங்கத்தில் * சிந்தனை சக்தி அமெ
ரிக்காவில் ஏராளமாகத் தேங்கியுள்ளது என்றும், சிந்தனை
வளப்பத்திற்கு இங்கு நிறைய சாத்தியக்கூறுகள் உண்டு என்
றும் உரைத்தேன். நம் முன் விரியும் செயல் துடிப்பு பலரைப்
பொறுத்த வரையில் நிராசை ஏக்கத்திலிருந்து விடுபடுவதற்கு
வழியாகவே உள்ளது என்றும், உள்ளூற ஊக்கும் சிந்தனையார்
வத்துக்கு அது திரையாகவும் இருக்கிறது என்றும் கூறினேன்.

* 1938-இல் அமெரிக்காவில் நான் புரிந்த இந்தப் பிரசங்கம்
பிற்பாடு 'அறிவியலும் அரசியலும்' என்னும் என் புத்தகத்தில்
ஏழாவது அத்தியாயமாக இடம் பெற்றது.

லட்சியாவேச வசப்படுவதென்னும் அமெரிக்கப் போக்கானது, மறைந்துள்ள இந்த ஆர்வத்தின் விளைவுதானெனக் கண்டேன். முடிவாக அப் பிரசங்கத்தில் கூறினேன் : "செயல் தத்துவம் அமெரிக்கரிடம் மட்டும் காணப்படும் ஒன்றன்று. ஐரோப்பிய கொள்கையும் அதுவே. ஐரோப்பாவின் மறுமலர்ச்சிக்கும் சமயச் சீர்திருத்தத்துக்கும் பிறகு அது உதித்தது. ஐரோப்பிய நாடுகளில் நிலவும் கருத்துக்களில் சிலவற்றைப் புதிய உலகமான அமெரிக்கா அளவுக்கதிகமான விசுவாசத்துடன் கடைப்பிடித்துக் கெடுதல் விளைக்கும் எல்லைவரை கொண்டு சென்றுவிட்டது என்பதொன்றுதான் நம்மைத் தப்பபிப்பிராயம் கொள்ளச் செய்யக்கூடும். சிந்தனாபூர்வமான செயல்முறையின் மதிப்பையும் உயர்வையும் பயனையும் அமெரிக்காவில் ஒரு சிலர் கண்டுகொண்டுவிட்டாலும்கூட நான் மேலே குறிப்பிட்ட சாத்தியக்கூறுகள் சிறிய அளவிலாகிலும் செயற்படத் தொடங்கிச் சிறிதுசிறிதாகப் பொது நியதி பூராவையுமே மாற்றிவிடும் என்றே நம்புகிறேன்."

நாம் இப்போது காண்பதைக் கருதுவோம்: டாம் மெர்டனின் நூல்கள் ஏராளமாக விற்பனையாகின்றன; ஆத்மிக வாழ்க்கை பற்றிய அரிய நூல்கள் பெருமளவில் பிரசுரிக்கப்படுவதோடு பலதரப்பட்ட மக்களால் பரவலாகப் படிக்கவும் படுகின்றன; கெத்ஸெமானி பூங்காவில் உள்ள சரணாலயத்தில் மட்டிலும் ஐரோப்பாவில் இருக்கும் எல்லாச் சரணாலயங்களையும்விடச் சிந்தனைப் பயிற்சியாளர் நிறைந்திருப்பதோடு அது மேலும் பல கிளைகளைத் திறக்க வேண்டிய நிலைமையும் ஏற்பட்டுள்ளது. அமைதியாகச் சிந்தித்து அறவழி காணும் பல்வேறு மடாலயங்களில் இட நெருக்கடி ஏற்பட்டு, மேற்கொண்டு சேர விழைவோரை மறுதளிக்கும் நிலை எழுந்திருக்கிறது.

* * *

அமெரிக்க வாழ்வியலின் அடிப்படையான சில அம்சங்களை மட்டுமே நான் சுட்டிக் காட்டியுள்ளேன். இதே ரீதியில் இன்னும் பலவற்றையும் நான் கூற முடியும். அமெரிக்காவின் உலகாயதம் என்று தூற்றப்படும் போக்கின் விதவிதமான—விசித்திரமானவையும் கூட—லட்சணங்கள் பற்றிய பட்டியலுக்கு முடிவே கிடையாது எனலாம்.



'மோபி டிக்,' 'ஸ்கார்லெட் லெட்டர்,' 'லுக் ஹோம்வர்ட், ஏஞ்ஜல்,' 'ரேகியம் ஃபார் எ நன்' ஆகிய கதைகளும், எட்கார் ஆலன் போ, எமிலி டிக்கின்ஸன், ஹார்ட் கிரேன், ஆலன் டேட், டி. எஸ். எலியட் (தம்மையும் மீறி அமெரிக்கராகவே அவர் இருந்துள்ளார்) போன்ற சான்றோர்களின் பலவகைப் படைப்புக்களும், பொதுவாக அமெரிக்க இலக்கியங்கள் யாவும் புறத்தின் நுட்பங்களைத் துருவி ஆராய்ந்த போதிலும், புறங்கடந்த அருவமான ஒரு பரம்பொருளைப் பற்றிய ஆய்வு அமெரிக்கர்களுடைய இரத்தத்தில் இடையறாது ஓடுகின்றது என்பதையும் காட்டுகின்றன. இலக்கியம் கண்ட மனிதன் திக்குத் திசை தெரியாமல் இடும்பை செறிந்த ஐம்புலச் சேற்றில் உழன்று இன்பத்தை நுகர முனைகின்றான். ஆயின் சொர்க்கம் அனைய எத்தகைய இன்ப வாழ்வுமே அவனுக்குத் திருப்தி நல்குவதில்லை.

லட்சியாவேச வசப்படுவதென்னும் அமெரிக்கப் போக்கானது,
மறைந்துள்ள இந்த ஆர்வத்தின் விளைவுதானெனக் கண்டேன்.
முடிவாக அப் பிரசங்கத்தில் கூறினேன் : "செயல் தத்துவம்
அமெரிக்கரிடம் மட்டும் காணப்படும் ஒன்றன்று. ஐரோப்பி
யக் கொள்கையும் அதுவே. ஐரோப்பாவின் மறுமலர்ச்சிக்கும்
சமயச் சீர்திருத்தத்துக்கும் பிறகு அது உதித்தது. ஐரோப்பிய
நாடுகளில் நிலவும் கருத்துக்களில் சிலவற்றைப் புதிய உலக
மான அமெரிக்கா அளவுக்கதிகமான விசுவாசத்துடன் கடைப்
பிடித்துக் கெடுதல் விளைக்கும் எல்லைவரை கொண்டு சென்று
விட்டது என்பதொன்றுதான் நம்மைத் தப்பபிப்பிராயம்
கொள்ளச் செய்யக்கூடும். சிந்தனாபூர்வமான செயல்முறை
யின் மதிப்பையும் உயர்வையும் பயனையும் அமெரிக்காவில் ஒரு
சிலர் கண்டுகொண்டுவிட்டாலும்கூட நான் மேலே குறிப்
பிட்ட சாத்தியக்கூறுகள் சிறிய அளவிலாகிலும் செயற்படத்
தொடங்கிச் சிறிதுசிறிதாகப் பொது நியதி பூராவையுமே
மாற்றிவிடும் என்றே நம்புகிறேன்."

நாம் இப்போது காண்பதைக் கருதுவோம்: டாம் மெர்ட
னின் நூல்கள் ஏராளமாக விற்பனையாகின்றன; ஆத்மிக
வாழ்க்கை பற்றிய அரிய நூல்கள் பெருமளவில் பிரசுரிக்கப்
படுவதோடு பலதரப்பட்ட மக்களால் பரவலாகப் படிக்கவும்
படுகின்றன; கெத்ஸெமானி பூங்காவில் உள்ள சரணாலயத்தில்
மட்டிலும் ஐரோப்பாவில் இருக்கும் எல்லாச் சரணாலயங்களை
யும்விடச் சிந்தனைப் பயிற்சியாளர் நிறைந்திருப்பதோடு அது
மேலும் பல கிளைகளைத் திறக்க வேண்டிய நிலைமையும் ஏற்பட்
டுள்ளது. அமைதியாகச் சிந்தித்து அறவழி காணும் பல்வேறு
மடாலயங்களில் இட நெருக்கடி ஏற்பட்டு, மேற்கொண்டு
சேர விழைவோரை மறுதளிக்கும் நிலை எழுந்திருக்கிறது.

* * *

அமெரிக்க வாழ்வியலின் அடிப்படையான சில அம்சங்
களை மட்டுமே நான் சுட்டிக் காட்டியுள்ளேன். இதே ரீதியில்
இன்னும் பலவற்றையும் நான் கூற முடியும். அமெரிக்காவின்
உலகாயதம் என்று தூற்றப்படும் போக்கின் விதவிதமான—
விசித்திரமானவையும் கூட—லட்சணங்கள் பற்றிய பட்டிய
லுக்கு முடிவே கிடையாது எனலாம்.



'மோபி டிக்,' 'ஸ்கார்லெட் லெட்டர்,' 'லுக் ஹோம்வர்ட்,
'ஏஞ்ஜல்,' 'ரேகியம் ஃபார் எ நன்' ஆகிய கதைகளும், எட்கார்
ஆலன் போ, எமிலி டிக்கின்ஸன், ஹார்ட் கிரேன், ஆலன்
டேட், டி. எஸ். எலியட் (தம்மையும் மீறி அமெரிக்கராகவே
அவர் இருந்துள்ளார்) போன்ற சான்றோர்களின் பலவகைப்
படைப்புக்களும், பொதுவாக அமெரிக்க இலக்கியங்கள்
யாவும் புறத்தின் நுட்பங்களைத் துருவி ஆராய்ந்த போதிலும்,
புறங்கடந்த அருவமான ஒரு பரம்பொருளைப் பற்றிய ஆய்வு
அமெரிக்கர்களுடைய இரத்தத்தில் இடையறாது ஓடுகின்றது
என்பதையும் காட்டுகின்றன. இலக்கியம் கண்ட மனி
தன் திக்குத் திசை தெரியாமல் இடும்பை செறிந்த ஐம்புலச்
சேற்றில் உழன்று இன்பத்தை நுகர முனைகின்றான். ஆயின்
சொர்க்கம் அனைய எத்தகைய இன்ப வாழ்வுமே அவனுக்குத்
திருப்தி நல்குவதில்லை.

# 5

## குற்றச்சாட்டுக்குரிய சில அம்சங்கள்

குற்றச்சாட்டுக்குரிய சில அம்சங்கள் பற்றி இப்போது ஆராய்வோம். அவற்றில் முதலாவதாக நான் குறிப்பிடப் போவது எவ்வகையிலும் ஒரு குறைபாடே அன்று. உண்மையில், அது ஆழ்ந்த மனிதத் தன்மையைக் காட்டும் உன்னதப் பண்பேயாகும்— தங்கள் நாடு பிறரால் நேசிக்கப்பட வேண்டும் என்பதில் அமெரிக்கருக்கு உள்ள ஆர்வத்தையே கூறுகிறேன். இப்பான்மை அவர்களுக்கு இன்றியமையாததும் கூட. (ஆங்கிலேயர் எவரிடமும் இத்தகைய பான்மையை நீங்கள் காண முடியாது. ஃபிரெஞ்சுக்காரர்களைப் பொறுத்தவரையில், அனைவரும் தங்களை நேசிப்பதாக அவர்கள் ஏற்கெனவே திடமாக நம்புவதால் இது விஷயத்தில் அவர்களுக்குக் கவலையே கிடையாது. ஆனால் தாங்கள் நினைப்பது தவறு என்பது தெரியவரும்போது அவர்கள் மிகுந்த அதிர்ச்சி அடைந்து விடுகிறார்கள்.) அமெரிக்கா நேசிக்கப்படவேண்டும் என்னும் இந்த விருப்பம், மனித சகோதரத்துவ உணர்ச்சியை ஏற்றுப் போற்ற எக்காலமும் ஆன்மா தயாராக இருப்பதையே குறிக்கிறது; இந்நாட்டின் பொது மனப்பான்மையில் இது மிகுந்த முக்கியப் பங்கு வகிக்கிறது என்றே கருதுகிறேன்.

விமர்சனத்திற்கு இடமில்லை என்று கருதக்கூடிய ஒரு தேசியச் சூழ்நிலையைக்கூட விமர்சனக் கண்கொண்டு நோக்கப் புகுவது பண்பிற் சிறந்த அமெரிக்கர்களின் ஒரு தனி ஆற்றலாகும். நாடு நேசிக்கப்படுவதோடு விமர்சனத்துக்கும் ஆளாகவேண்டும் என்பதே அவர்களுடைய நோக்கம். இதன் விளைவாக, இந்நாட்டின் தீய தன்மைகளைக் கடுமையாகக் கண்டிக்கும் எழுத்தாளர்களை ஒரு தனிப் பரிவுடனும், வருத்தம் தோய்ந்த பாராட்டுடனும் கருதுகிறார்கள். அவர்களுடைய கூற்றுக்கள் தங்கள் மனத்தைப் புண்படுத்தினாலும்கூட அவர்



களுடைய மனம் புண்படாத வகையில் அவர்கள் உதாசீனம் செய்யப்படுகிறார்கள். இந்நாட்டை வியந்து பாராட்டும் எழுத்தாளர்கள் நமக்கு இன்பமூட்டும் நண்பர்கள் என்ற பான்மையில் கருதப்பட்ட போதிலும் அறிவிலிகள் என்றே அவர்களை எண்ணுகிறோம். எனவே, தங்கள் தேசத்தினிடம் அமெரிக்கர் கொண்டுள்ள அன்பானது எதையும் விட்டுக்கொடுக்கும் பான்மை உடையதன்று; தயையின்றி தாக்கவும் முற்படும் தன்மையைக் கொண்டது; அதன் குறைபாடுகளை அவர்களால் சகிக்க முடிவதேயில்லை. ஃபிரெஞ்சுக்காரர்களும் இது போலவே நடந்து கொள்கின்ற போதிலும் தங்கள் சகோதர மக்களை வேடிக்கையாகவோ விஷமத்தனத்துடனோ குத்திக் காட்டாமல் அவர்களால் இருக்க முடிவதில்லை. ஆனால் அமெரிக்கர்களோ ஒழுக்க நெறியே போன்ற சோகத்துடன் தங்கள் நாட்டை அலசிவிடுகிறார்கள்.

* * *

இரண்டாவதாக, என் அன்பார்ந்த நண்பரொருவர் ஒரு நாள் கூறியது எனக்கு நினைவு வருகிறது; தம் சகோதரர்களைப்பற்றி, குறிப்பாக அமெரிக்க இளைஞர்களைப் பற்றிக் கூறுகையில் அவர் குறிப்பிட்டார், ''அவர்களுக்குப் பற்றுக்கோடு ஏதும் கிடையாது'' என்று.

ஐரோப்பாவில் மிக மிக இழிவான கயவனுக்குக்கூடப் பற்றுக்கோடு என்று ஒன்று இருக்கிறது; ஏதாவதொரு பண்டைப் பழக்கவழக்கத்தை, நன்மைக்கோ தீமைக்கோ, அவன் விடாப்பிடியாகப் பிடித்துக் கொள்ளலாம். இங்கோ தனி மனிதர்களின் வாழ்வில் ஓரளவு நிலையாமை இருக்கிறதென்றே எனக்குத் தோன்றுகிறது; எதுவும் எக்காலமும் நீடிக்கும் என்று எவராலும் உறுதியாகக் கூறமுடியவில்லை—அவர்கள் முடிக்க உறுதி கொண்டுள்ள பணியைப் பற்றி நான் கூறவில்லை; தங்கள் சொந்த வாழ்க்கை செல்லவேண்டிய திசை குறித்து அவர்கள் கொண்டுள்ள நோக்கத்தையே குறிப்பிடுகிறேன்.

இது காரணமாகத்தான் அமெரிக்க மனவியல்பின் இதர பொது அம்சங்களோடு—இவற்றுக்கு விலக்காகவும் பலர் உள்ளனர் என்பது மெய்தான்—விசித்திரமானதொரு பொறுமையின்மையையும் காண்கிறோம்; இதன் விளைவாகவே அவர்

கள் விரைவில் அதைரியம் அடைந்து விடுகிறார்கள். இவ்விஷ
யத்தை இன்னும் சற்று விரிவாகவே கூறுகிறேன். நாம் காணும்
பொறுமையின்மையை விசித்திரமானதென ஏற்கெனவேயே
குறிப்பிட்டேன்; ஃபிரெஞ்சு ஜனக்கூட்டங்களைவிட (உதாரண
மாக, ரயில் வண்டியில் ஏறக் காத்திருக்கும்போதோ, அல்லது
நவீன வாழ்க்கைமுறையின் பல்வேறு நியதிகளினால் அசௌ
கரியங்களுக்கு ஆளாகும்போதோ, அன்றி திட்டமிடப்பட்ட
காரியக் கிரமத்தினால் காலதாமதமாகும்போதோ) அமெரிக்க
ஜனத்திரள் ஒப்பிடமுடியாத அளவு பொறுமையுடனேயே
நடந்துகொள்வதால்தான் இவ்விதம் விசித்திரமானது என்
றேன். இந்நாட்டு ஆடவரும் பெண்டிரும் கஷ்ட நஷ்டங்களை
மிகுந்த துணிவுடன் சமாளிக்கப் புகுகிறார்கள்; பல சமயங்
களில் விந்தையானதொரு விரக்திப் போக்கை அவர்கள்
வெளிக்காட்டுகிறார்கள். நெருக்கடிக் காலங்களிலோ வியக்கத்
தக்க அளவு சகிப்புத் தன்மையை அவர்களிடம் பார்க்கிறோம்.
ஆனால் வாழ்க்கைப் போக்கில் அவர்களுக்குப் பொறுமை
கிடையாது.

பொதுவாகத் தங்கள் சொந்த வாழ்க்கையைக் குறித்து
அவர்களுக்குப் பொறுமை இல்லை. தாங்கள் மேற்கொண்
டுள்ள வேலையில் எளிதில் வெற்றி கிடைக்காமல் போகுமா
னால் அவர்கள் விரைவில் கலக்கமும் அதைரியமும் அடைந்து
விடுகின்றனர். முப்பது அல்லது நாற்பது வருடகாலம் மற்ற
வர்கள் அனைவராலும் புறக்கணித்து ஒதுக்கப்பட்டாலும் கூட
அளவற்ற பொறுமையுடன் ஃபிரெஞ்சு ஓவியர்—ஒரு
'ஸெஸான்' என்று வைத்துக் கொள்வோம்—தன் கருமமே
கண்ணாயிருக்கையில் அமெரிக்கக் கலைஞர்களும் சரி, ஓவியர்
களும் சரி, தங்கள் சிருஷ்டிகள் விரைவில் முடிந்து உடனடிப்
பலன் தரவேண்டும் என்பதில் ஆர்வமுடன் இருக்கிறார்கள்.
ஃபிரெஞ்சுக்காரரர்களின் இத்தகைய கடும் பிடிவாதம் உகந்த
தன்று என்று அமெரிக்க இளைஞர்கள் அச்சுறுவர். தங்கள்
சாதனைகளுக்கு விரைவில் பாராட்டுக் கிடைக்கப் பெறவில்லை
யெனில் தங்கள் திறனைப் பற்றித் தாங்களே சந்தேகப்படத்
தொடங்கி விடுகிறார்கள் அவர்கள்; வாழ்க்கையில் தாங்கள்
தோல்வி கண்டுவிட்டதாகவே தீர்மானித்து விடுகிறார்கள்.

* * *



மேற்கூறிய இரண்டாவது குறைபாட்டுடன் தொடர்பு
கொண்டதே மூன்றாவதாக நான் கூறப்போகும் அம்சம்.
வெற்றி நிச்சயம் என்பதே போல் வெளித்தோற்றத்தில் காட்
டிக் கொண்டாலும், உள்ளுக்குள் நிச்சயமின்றி ஐயுறுவ
தையே குறிப்பிடுகிறேன். அமெரிக்கச் சமூக சம்பிரதாய
நியதிகளை எப்படி அனைவரும் நிறைந்த நம்பிக்கையைப் புலப்
படுத்தி ஒளிர் நோக்குடன் காட்சியளிக்கின்றார்கள் எனினும்
இது ஒரு போலி வெளிப்பாடே என்பது என் கருத்து. உண்மை
யில் இது அவர்கள் உள்ளக் கிடக்கையில் எழும் கவலையையும்
ஐயத்தையும் மூடி மறைக்கிறது என்றே சொல்லலாம்.

தீமை என்று ஒன்று இல்லவே இல்லை என்ற கருத்தில்
செயலாற்றுவதாகத் தோன்றுகிறது. தீமையைப் புறக்கணிக்
கும் சித்தாந்தமொன்று ஒரு காலத்தில் இங்கு நிலவத்தான்
செய்தது, ஆனால் உலகப்போர் அதற்கு முடிவு கட்டிவிட்டது.
தீமை என்று ஒன்று உண்டு, மரணம் என்பது நிச்சயம்,
சைத்தானென்பவனும் உள்ளான் என்பதை யெல்லாம் இன்
றைய அமெரிக்க இளைஞர் அறிந்தேயிருக்கின்றனர். எப்படி
யும், நான் கூறும் பத்திர மின்மை உணர்வை இந்த ஞானம்
சற்றும் குறைப்பதில்லை.

பலர் உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் இந்த, அச்
சத்தை மன உளைச்சலை, அடக்கி வைக்கப்பட்டுள்ள கவலையை
நான் பாராட்டாமலில்லை. ஏனெனில், எவரும் தம்மைத்தாமே
ஏமாற்றிக் கொள்ளவில்லை, மனித வாழ்வில் மண்டியுள்ள
மகத்தான சிக்கல்களை அனைவரும் அறிந்தேயிருக்கின்றனர்
என்பதற்குத்தான் இவை சான்றுகளாகும். எனினும் இறுதி
யாகப் பார்க்குமிடத்து போதுமான உறுதியுடன், ஒருங்கே
இணைந்த அறிவுத் திண்மை இல்லாததாலேயே இவை ஏற்படு
கின்றனவென எண்ணுகிறேன்.

அது எப்படியிருந்தபோதிலும் சரி, இங்குள்ள மக்களுக்கு
அறிவு செறிந்த உறுதிப்பாடு அடிக்கடி தேவைப்படுகிறது;
பகுத்தறிவு நியதிகளைக் கொண்டு பரிசோதித்துப் பார்த்தோ,
அன்றி பிறரின் பாராட்டுக்கள் மூலமோ தாங்கள் செய்வது
சரி என்பதை ஐயமற அவர்கள் தெரிந்துகொள்ள வேண்டி
யிருக்கிறது. குறிப்பாக, தங்களுடைய லட்சியத்தை ஊக்கும்

ஆற்றல்களையும் நல்லெண்ணம், உதார குணம் ஆகிய பண்பு களின் வன்மையும் சார்ந்துள்ளது இந்தத் தன்னம்பிக்கை.

இது காரணமாகத்தான் நல்லெண்ணம் நிறைந்த அமெரிக்கரின் பெருமுயற்சிகளில் ஏதாவது குறையே கண்டு கூறுவதும், அவர்களுடைய நல்ல உத்தேசங்களை மதித்துப் பாராட்டாதிருப்பதுமான ஐரோப்பியரின் (ஆசியருடையவும் கூட) அநீதமான போக்கினுல் அமெரிக்காவின் ஆன்மாவே பாதிக்கப்படக்கூடும் என்கிறேன்.

* * *

தங்கள் இயல்புப்படி நடந்துகொள்ளத் தங்களுடைய இயற்கைச் சூழ்நிலை அமெரிக்கருக்கு அவசியமாக இருப்பதை அவர்களுடைய நான்காவது பலவீனமாகக் கூறலாம். இதனுல் தான் இங்கு நடப்பதற்கு வெகுவாக மாறுபட்டு வெளி நாடுகளில் அவர்கள் நடந்துகொள்கின்றனர் எனலாம். ஃபிரான்ஸிலும் இதாலியிலும் இதை நான் கண்டறிய முடிந்தது. பாரிஸிலுள்ள என் நண்பர் பலரும் இதே கருத்துக் கொண்டனர். இந்நாட்டில் அவர்கள் அறிந்திருந்த அமெரிக்கரில் அநேகர் ஐரோப்பாவில் முற்றிலும் மாற்றுராகவே அவர்களுக்குத் தோன்றினர்.

அயல் நாடுகளில் இருக்கும்போது அமெரிக்கரால் இன்பம் நுகர இயல்வதில்லை என்றே எண்ண வேண்டியிருக்கிறது. மற்ற மக்களைச் சந்திப்பதில் அச்சமும் கூச்சமும் அடைகின்றனர் அவர்கள். இதன் விளைவாகத்தான் அகம்பாவம் பிடித்தவர்கள்போல அவர்கள் காட்சியளிக்கின்றனர். அவர்களுடைய சமூக சுபாவமும், சரளப் போக்கும், உற்சாக இயல்புகளும் எங்கோ ஒளிந்துகொண்டு விடுகின்றன. தங்கள் தேசத்திலேயே இவற்றை அவர்கள் விட்டு வந்துவிட்டதாகக் காண்கிறது. இதிலிருந்து, வெளிநாடுகளில் தமக்குத்தாமே வேற்றுராகத் தோன்றுமளவுக்கு ஒவ்வொருவருக்கும் சொந்த தேசமும் இயற்கைச் சூழ்நிலையும் இன்றியமையாதவையாக இருக்கின்றன என்றே முடிவு கட்டும்படியாகிறது.

# 6

## இனப் பிரச்னை

நான் மிகவும் மதித்துப் போற்றும் பல கறுப்பரினப் பிரமுகர்களுடன் நட்புறவைத்தான் கண்டிருக்கிறேனே தவிர அமெரிக்காவில் இனப் பிரச்னையை என் சொந்த அனுபவத்தில் காணும் சந்தர்ப்பமேதும் எனக்குக் கிட்டியதில்லை. என் காதில் விழுந்த செய்திகளைக்கொண்டுதான் இதுபற்றி நான் அறிந்தேன்—ஏராளமாகவே காதில் விழுந்ததெனலாம். மேலும், சரித்திரத்திலும் சமூகத் துறையிலும் ஊன்றிவிட்ட பிரச்னை இது; எனவே, இதையொட்டிய சிக்கல்கள் அனைத்தையும் ஆராய இந்நூல் போதாது. இதனுல் தான் இனி நான் கூறவிருப்பவற்றை விரிவான ஆராய்ச்சி என்றல்லாமல் இதையொட்டிய சில சிந்தனைகளேயெனக் குறிப்பிட விரும்புகிறேன்.

மக்களுக்கும் சட்டத்துக்குமிடையே, அதாவது, வெள்ளையரில் பலரின் உணர்ச்சிகள், நடத்தை ஆகியவற்றுக்கும் சமஷ்டிச் சட்டத்திற்குமிடையே உள்ள மோதல்தான் அமெரிக்காவில் இனப் பிரச்னையைப் பொறுத்த வரையில் மிகப் பொதுப்படையான அம்சமாகும். உள்நாட்டுப் போர் மூளுமளவுக்கு ஜனுதிபதி ஆப்ரஹாம் லிங்கன் காலத்தில் அடிமை முறையை சமஷ்டி சர்க்கார் எதிர்த்தது போலவே இன்றும் தன்னைச் சார்ந்துள்ள சகல விஷயங்களிலும் எவ்வித இனப் பாகுபாடுமின்றி எல்லாப் பிரஜைகளிடையிலும் பூரண சமத்துவம் நிலவவேண்டுமென வலியுறுத்துகிறது, சமஷ்டிச் சட்ட அமைப்பு. எனவேதான் அதற்கும் மக்களுக்குமிடை பகிரங்க மோதல் ஏற்படும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஒரு வகைச் சோதனை சம்பவிக்கிறது.

மேலும், இருவகைப் பிரச்னைகளை வேறுபடுத்திப் பார்ப்பது பொருத்தமாக இருக்குமென எனக்குத் தோன்றுகிறது—அதாவது, மக்களின் சாதாரண உரிமைகள், இன ஒதுக்கல்

முறை ஆகியவற்றைப் பொறுத்த பிரச்னைகள் ஒரு வகை; தனி மனிதர்களிடையே நிலவும் உறவுகளில் காணும், இன வெறுப்பு சம்பந்தப்பட்டவை இன்னொரு வகை.

* * *

அடிமை முறையை மிகப் பண்டைக் காலந்தொட்டு அடிப்படையாகக் கொண்ட சமூக அமைப்பின் விளைவே தென் ராஜ்யங்களில் சமுதாய வாழ்க்கையின் எல்லா அம்சங்களிலும் சட்டத்தின் மூலம் பல்வேறு உருவங்களில் இன்னமும் நடைமுறையிலிருக்கிறது. இன ஒதுக்கல் முறை வெள்ளையர் மனத்தின் அடித்தளத்தில் உறைந்துவிட்ட தப்பபிப்பிராயத்தை மட்டுமின்றிப் பல தலைமுறைகளாக வெள்ளையர், நீக்ரோவரின் அன்றாட அலுவல்களையொட்டி அமைந்துவிட்ட பழக்க வழக்கங்களையும் இது பிரதிபலிக்கிறது. இந்த ஒதுக்கல் முறையின் வரையறைக்குள்ளேயே நீக்ரோவரின் நிலையை உயர்த்தவும். வெள்ளையரின் உயர் மனப்பான்மை குறித்த வழியில் இனநீதியை நோக்கி நீக்ரோவரை முன்னேற்றவும் கூட நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன-சமூகத் துறையில் நீக்ரோவர் இன்னும் போதிய பக்குவம் பெறவில்லையென்றே தொடர்ந்து கருதப்படவேண்டும் என்னும் வெள்ளையர் நினைப்பு மட்டுமல்லாமல் நீக்ரோவரும் தங்களை இவ்வாறே எண்ணிக் கொள்வதும் இதற்குக் காரணம் என்பது கவனிக்கத் தகுந்தது.

கறுப்பு இனத்தவரைப் பொறுத்த தம் கடமைகளை உணர்ந்திருந்தபோதும் வட்டார வழக்கங்களுக்குக் கட்டுப்பட்டே நடந்துகொள்ள நேரும் பல நல்லெண்ணக்காரர்கள் தெற்கு ராஜ்யங்களில் எதிர்ப்படும் சிரமங்களை அனுதாபத்துடனேயே எண்ணிப் பார்ப்பர். மேலும், உள்நாட்டுப் போருக்குமுன் அடிமை முறை அமுலிலிருந்தபோது நடந்ததுபோலவே, வயதுப்பக்குவம் பெறுவதால் சூழும் பொறுப்புக்களைவிட மேற்கூறிய நிலையில் பல நீக்ரோக் குடும்பங்கள் அதிக அளவு மகிழ்ச்சியுடன் (கவலையின்றி) வாழ்க்கை நடத்த வாய்ப்பு ஏற்படுகிறது. எனினும் இப்பிரச்னையானது இன்பவாழ்க்கை சம்பந்தப் பட்டதல்ல,



மனித உரிமையைச் சார்ந்தது! தவிர்க்க முடியாததும் கூட.

சில உள்ளூர் சூழ்நிலைகள் தடையாக இயங்கிய போதிலும் நீண்ட இடைக் காலத்திற்குப் பிறகு சட்டபூர்வமான ஒதுக்கல் முறை அறவே அகலும் என்பதில் எனக்கு ஐயமில்லை. சமஷ்டிச் சட்டங்கள், தலைமை உயர்நீதி மன்றத்தின் (ஸுப்ரீம் கோர்ட்டின்) தீர்ப்புக்கள் ஆகிய இரட்டை நிர்ப்பந்தத்தினாலும், தெற்கு ராஜ்யங்களில் மக்கள் மிக்க நிதானம் பொருந்திய கண்ணியத்துடன், தங்களை அர்ப்பணித்துக் கொண்டிருப்பதாலும், நீக்ரோவர் நடத்தும் போராட்டத்தின் பயனாகவுமே இது நடந்தேறும். இந்தச் சந்தர்ப்பத்தில் மான்ட்காமரி, அலபாமா ஆகிய இடங்களிலுள்ள கறுப்பருக்கும், அவர்களுடைய ஆன்மீகத் தலைவரான பூஜ்யர் மார்ட்டின் லூதர் கிங்குக்கும் என் பாராட்டுக்களைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். 1956-இல் தாங்கள் நடத்திய பிரஸித்தமான மோட்டார் பஸ் பகிஷ்காரம் மூலம் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த உதாரணம் வகுத்திருக்கிறார்கள் அவர்கள்—காந்திஜியின் அஹிம்ஸை முறைகளை மேலைநாடுகளிலும் கடைப்பிடிக்கத் தோது உண்டு என்பதைக் குறிக்கும் வகையில் அமெரிக்கா இதுவரை கண்டிராத அரியதொரு உதாரணம் அது.

* * *

தனிமனித உறவுபாடுகளில் இனவேற்றுமை பாராட்டப்படுவதைப் பொறுத்த இரண்டாவது வகைப் பிரச்னைகள் சம்பந்தப் பட்டவரையில் அவை தெற்கு ராஜ்யங்களுக்கு மட்டும் பொருந்துபவையல்ல: அதிக அளவிலோ குறைந்த அளவிலோ நாட்டின் எல்லாப் பகுதிகளையும் பற்றியவை என்பதைக் குறிப்பிடவேண்டும். ‘மானுஸ்’ இனத்தாருடன் உறவாடிய அமெரிக்கச் சிப்பாய்களுக்குப் பொதுவாக நீக்ரோ இனத்தினிடமோ, அல்லது உலகெங்கிலுமுள்ள நீக்ரோக்களிடமோ வெறுப்பேதும் இல்லை; எனினும் தங்கள் சொந்த தேச நீக்ரோக்களிடம் அவ்வித வெறுப்பு உணர்ச்சி வன்மையாக இருந்தது என்கிறார், மார்கரெட் மீடு அம்மை. சமூகக் குழுவுக்குள் பிணக்கு, போட்டிகளின் விளைவு இத்தகைய

வேற்ருரெனத் தாங்கள் கருது
உணர்ச்சி. தங்கள் சமூகத்தில் வேற்ருரெனத் தாங்கள் கருது
வோர் புகுந்துவிட்டதாக அவர்கள் நினைக்கின்றனர். இப்ப
டிப்பட்ட சந்தர்ப்பம் கிடைத்தால் மனித இதயத்திலுள்ள
தீமைக் குணங்கள் தலைவிரித்தாடக் கேட்பானேன்!

தெற்கு ராஜ்யங்களில் மட்டுமின்றி வடக்கிலும் நீக்ரோக்
குடியேற்றம் மிகுதியாகவுள்ள ஒவ்வொரு இடத்திலும்,
குறிப்பாக அதிக அளவு தொழில் மயமாகிவிட்ட இடங்களி
லெல்லாம் வெள்ளையரிடையே நீக்ரோவர்பால் விரோதம்
மலிந்திருப்பதைக் காணலாம். அச்சம் ஒருபால் உயர்வு
மனப்பான்மையால் எழுந்த அலட்சியம் வேறொருபால், மற்ற
வர்களைச் சிறுமைப்படுத்தித் தொல்லை கொடுப்பதில் காணும்
மகிழ்ச்சி ஆகிய உணர்ச்சிகளினுல் உருவெடுத்தது இந்த
விரோதம். இவற்ருேடு, படுநாசம் விளைவிக்கவும் கொடுமைப்
படுத்தவும் மனித மனத்திலுள்ள உள்ளுணர்வுகள் தட்டி
யெழுப்பப்படுவதற்கான தோதும் ஆங்காங்கு சேர்ந்து கொள்
கிறது. சிகாகோவின் புறநகர்களில் தான் சில வருடங்களுக்கு
முன் வெள்ளையர் பகுதிகளில் நீக்ரோக் குடும்பங்கள் குடிபுகு
வதைத் தடுக்கக் கடும் வன்முறை கையாளப்பட்டது என்பது
நினைவுரத் தக்கது. கறுப்பு இனத்தவரைக் கட்டோடு விலக்
கும் உண்டிச் சாலைகள், கழகங்கள், கடற்கரை உல்லாச
விடுதிகள் ஆகியவை பற்றியோ, மக்களில் கல்வியும் வசதியும்
வாய்க்கப்பெற்ற தரத்தினரிடையே இனவேற்றுமை தலைவிரித்
தாடும் 'முறையான' என்று கருதப்படும் வகைகள் பற்றியோ
நான் கூற முற்படவில்லை. கறுப்பு இனத்தவரைப் பொறுத்து
மட்டுமின்றி யூதர்களும், சில சமயங்களில் ஐரிஷ்காரர்களும்
கூட இந்த ஒதுக்கலுக்கு ஆளாகின்றனர்.

* * *

மனவேதனை தரும் இப்போக்குகளெல்வாம் சிற்சில
சமயம் முற்றிப்போய், கசையடி கொடுத்துத் தோலுரிப்பது
போன்ற அருவருக்கத்தக்க செயல்களில் முடிகின்றன. சட்ட
பூர்வ ஒதுக்கல் முறையைவிட இத்தகைய நடவடிக்கைகளுக்கு
முடிவு கட்ட இந்நாட்டுக்கு அதிக காலம் பிடிக்கவும் கூடும்.
எனினும் எப்படியும் முடிவு கட்டியே தீரும்; ஏனெனில் அவ்
வாறு செய்ய இது உறுதி பூண்டுள்ளது.



இந்நாட்டைப் பீடித்திருக்கும் பிணிகளே இவை. இதன்
இயல்பான உணர்ச்சிக்கு முற்றிலும் புறம்பானவை. இந்
நாட்டு மக்களிடம் இயல்பாகப் படிந்துள்ள மனித சகோதரத்
துவ உணர்ச்சிக்கும், இங்கு ஒருவரோடொருவர் ஒட்டி வாழ்
வதற்கு அஸ்திவாரங்களான ஆதாரக் கருத்துக்களுக்குமே
கூட முரணுனவை. ஒழுக்க ரீதியாகச் சாக்குக் கண்டுபிடிக்
கும் முயற்சியாகச் சிலர் நீக்ரோவரைத் தாழ்ந்தோரே என்று
வலியுறுத்துவது உண்மையாயினும் இனக் கோட்பாடெனக்
கூறத்தக்கதாக இங்கு ஏதுமே கிடையாது. இனவேற்றுமை
உணர்வுக்கு இரையாகுவோர்கூட அதைப்பற்றிப் பொது
வாகப் பெருமை அடித்துக் கொள்வதில்லை; அது குறித்துச்
சங்கடப்படவே செய்கிருர்கள்—தங்களோடு பிறவியிலேயே
ஒட்டிவிட்ட நிலை அது, வேற்றுமை காட்டுவதைத் தவிர்க்க
இயலாது என்றே அவர்கள் கருதுகிருர்கள். தங்களுடைய
விரோதப் பான்மையை விளக்கவோ, நியாயமானதென
நிலைநாட்டவோ முடியாது என்பதை உள்ளத்தின் ஆழத்தில்
உணர்ந்திருக்கின்றனர் அவர்கள். எனவே தான் இயற்கை
யின் நியதி என்பதாக மர்மமானதொரு தவிர்க்க முடியாதத்
தன்மையைத் திணிக்கின்றனர் அதன் மீது.

விரும்பினுலும் சரி, விரும்பாவிடினும் சரி, நீக்ரோ
வர் இந்நாட்டின் இணைந்தவொரு பகுதியினராகவே இருக்
கின்றனர்—போர்க் காலத்தில் மற்றப் பிரஜைகளைப்
போலவே அவர்களும் தங்கள் உயிரைப் பணயம்
வைக்கக் கேட்கப்படுகின்றனர். 'இணைவது' என்பதன்
மூலம் உண்மை வாழ்க்கையில் ஏற்கெனவே அவ்வாறு
இருப்பினும் சமுதாய ரீதியாகவும் கலாசார ரீதியாக
வும் ஒன்றுபடுகின்றனர். "சரித்திரத்தில் கண்டுள்ள எந்த
இனத்தவரையும்விடக் கலாசார, கல்வி, சமூகத் துறைகளில்
குறுகிய காலத்தில் அதிக முன்னேற்றத்தை நீக்ரோவர்
எய்தியுள்ளனர்" என்று ஜே. பி. கிரெமெல்லியன் கூறியிருப்
பது கவனிக்கத் தகுந்தது. சமுதாயத்தில் பொறுப்புள்ள
பதவிகளை வகிக்கும் படித்த நீக்ரோவர் எண்ணிக்கை எந்த
அளவுக்கு அதிகரிக்கிறதோ, அந்த அளவுக்குப் பூரண
இணைப்பை நோக்கி முன்னேற்றமும் தானக வேகம் பெறுவது
திண்ணம்.

அநீதி, அவமானம், சமநீதியாக வற்புறுத்தப்படும் துன்ப
நிலை ஆகியவை அமெரிக்கரின் இயல்புக்கு மாறுனவை;
தங்களுக்குப் புறம்பான இப்படிப்பட்ட தன்மைகளோடு
நீக்ரோவர் பால் தாங்கள் காட்டும் வேற்றுமைக்கு முற்றுப்
புள்ளி வைக்க அமெரிக்கர் உறுதி பூண்டிருப்பதாகச் சற்றுமுன்
கூறினேன் அல்லவா ? இதைச் சார்ந்த விஷயத்தில் தெளி
வானதும் உறுதியானதுமானதொரு நிலையை எப்போதும்
மேற்கொள்ளும்படி இந்நாட்டின் சமஷ்டி அரசாங்கச் சட்ட
மன்ற, நிர்வாகப் பிரிவுகளை இடையருது தூண்டிக் கொண்
டிருக்கும் நடைமுறையை அந்தக் கொள்கைக்கு ஓர் அறிகுறி
யாகக் கொள்ளலாம்; இப்பிரிவுகள் எவ்வளவு தான் மாற்றி
யமைக்கப்பட்ட போதிலும் இந்த உந்துதல் குன்ருமல் நீடிக்
கிறது. பொதுமக்கள் இது விஷயத்தில் மேன்மேலும் விழிப்
படைந்து வந்திருப்பதையும், நாட்டின் முதுகெலும்பு எனத்
தக்க முறையில் நல்லோரான பிரஜைகள் தாமாகக் கூடி
அமைத்துக்கொண்டுள்ள குழுக்கள் உறுதியுடனும் சுறு சுறுப்
புடனும் செயல்படுவதையும் மற்ருெரு நல்லறிகுறியாகக் கருத
லாம். இறுதியாக, ஆத்ம சக்தி மூலம் உள்ளத்தின் ஆழத்தில்
மாறுதல்கள் நேர்ந்தாலன்றி மனித இயல்பின் மூலை முடுக்கு
களில் ஊன்றிவிட்ட உணர்ச்சிகளையும் வெறிகளையும் ஐயமற
வெற்றி கொள்வது என்பது இயலாத காரியம். இவ்வகையில்
மத ஸ்தாபனங்களின் பங்கும் பொறுப்பும் மகத்தானவை.
நீக்ரோப் பிரச்னை சம்பந்தப்பட்ட வரையில் கத்தோலிக்கர்,
பிராடெஸ்டெண்டுகள் ஆகிய இரு சமயப் பிரிவினரும் விவிலிய
நூல் குறித்த வழியைப் பின்பற்ருமல் முன்பு அச்சம் கொண்டு
வாளாவிருந்ததை மன்னிக்கவியலாது. மதாலயங்களில்
நீக்ரோவருக்கெனத் தனிப் பகுதிகள் ஏற்படுத்தப்பட்டதும்,
மற்ற மதச் சடங்குகளிலும் ஒதுக்கல் முறை கடைப்பிடிக்கப்
பட்டதும் சகிக்கவொண்ணு அதிர்ச்சி தரும் நடைமுறைக
ளாகும். நல்லவேளையாக இவையெல்லாம் விரைவாக மாறி
வருகின்றன. லூயிஸியானுவில் இன சமத்துவத்தை ஆதரித்து
ஆர்ச்பிஷப் 'ரம்மல்' அவர்கள் அளவற்ற உறுதியுடன் இருப்
பது முக்கியத்துவம் வாய்ந்தது. உண்மையில், ஒதுக்கல்
முறையையும் இனவேற்றுமையையும் எதிர்த்து நடக்கும்
போராட்டத்தில் இன்று ப்ராடெஸ்டெண்ட், கத்தோலிக்கக்



குருமார்கள், இம்மியும் பின்வாங்க முடியாத பங்கு வகிக்கின்
றனர். இவ்வகையில் கடந்த முப்பதாண்டுகளுக்கும் மேலாக
பூஜ்யர் ஜான் லா ஃபார்க் புரிந்து வந்துள்ள பணிக்காக ஒவ்
வொரு கத்தோலிக்கரும் (கத்தோலிக்கரல்லாத பலரும்கூட)
அவருக்குக் கடமைப்பட்டுள்ளார்; அவருடைய விவேகமும்
தீரமும் செறிந்த இடையருத முயற்சியினுல் இவ்விஷயத்தில்
பொது மக்கள் உணர்ச்சி புத்தொளி பெற்று விளங்குகிறது.
அவருடன் நெடுநாளாப் பழகி வந்திருப்பவன் நான்; அவரை
வியந்து பாராட்டும் பலருள் நான் ஒருவன். அவரைப் போலவே
ஆதர்சம் பெற்ற மற்ருெரு பாதிரியாரால் சமீபத்தில் வெளி
யிடப்பட்ட 'தென் ராஜ்யப் பாதிரியொருவரின் குறிப்புக்கள்'
(தி ஜெர்னல் ஆஃப் எ ஸதர்ன் பாஸ்டர்) என்ற புத்தகத்தி
லுள்ள இந்த வாக்கியம் கிறிஸ்தவ மனச்சாட்சியுடைய அனை
வருக்கும் பொருந்துவதாகும் : "நீக்ரோக்களை நம்முடன்
பூரணமாக இணைத்துக் கொள்வதில் கத்தோலிக்கராகிய நாம்
உறுதியுடன் முன்னேறவேண்டும்; கிறிஸ்தவ சமய சமூகத்தில்
நம் சகோதரராகவும், மற்றெல்லா சமுதாயத் துறைகளிலும்
நம்மைப் போலவே ஆண்டவனின் மைந்தர்களாகவும் அவர்
களை வரவேற்கவேண்டும்." *

* * *

---

* தாம் எழுதிய இந்நூலில் மற்ருேரிடத்தில் க்ரெமிலியின் கூறு
கிருர் : "பகுத்தறிவுக் கேற்றவையில்லாத வகையில்
மனிதனிடமுள்ள அம்சங்களை நாம் புரிந்துகொள்ளவேண்டும்;
தீவிரக் கிறிஸ்தவ தர்மமே இந்த அம்சங்களை ஒழித்துக்கட்ட
வல்லது."

இன்ஞெரு இடத்தில் அவர் குறிப்பிடுகிருர் : "லூயிஸியானு
வுக்கும் வர்ஜீனியாவுக்கும் இடையிலுள்ள இப்பகுதியில் பத்து
முதல் பதினைந்து லட்சம் வரை கத்தோலிக்கர் உள்ளனர்.
இவர்களில் பாதிப் பேருக்குமேல், அதாவது எட்டு லட்சம்
பேர் தெற்கு லூயிஸியானுவிலேயே வாழ்கின்றனர். எனவே இங்கு
எம்முறை பின்பற்றப்படுகிறதோ அது—நீதியோ அநீதியோ,
கிறிஸ்தவ அன்போ, இனவேற்றுமையோ—எதுவாயினும் தெற்குப்
பகுதியை மட்டுமின்றி நாடு முழுவதையும், ஏன் உலகத்தையே
கூடப் பாதிக்கும்."

சுருங்கக் கூறுமிடத்து, அமெரிக்காவில் இனப் பிரச்னை யைப் பொறுத்தவரையில் தங்களுக் கெதிராகவே தாங்கள் விடாப்பிடியாக மக்கள் போராடி வருவதைத்தான் காண் கிறோம். அதாவது, தங்கள் சொந்த மக்களிலேயே பெரும் பகுதியினருக்கு எதிராகவும், அவர்களிடம் பண்டைக்காலந் தொட்டு படிந்துவிட்ட தீமைகளுக்கு எதிராகவும், மனித உணர்ச்சியிலுள்ள தீயகுணங்களுக்கு எதிராகவும் இந்நாடு போராடுகிறது. தன் உணர்ச்சிக் கருவுக்கே புறம்பான தீய போக்குக்களிலிருந்து தன்னை மீட்டுக்கொள்ளவும், தான் நம்பு பவையும் தன்னைத் தோற்றுவித்தவையுமான கொள்கைகள், கோட்பாடுகளின் தரத்திற் கேற்பத் தன் நடைமுறை முழுவ தையும் உயர்த்திக் கொள்ளவும் தான் இவ்வாறு இது அரும் பாடுபடுகிறது.

அமெரிக்காவை உறுத்தும் முள்ளாக உள்ளது நீக்ரோப் பிரச்னை. இந்த முள்ளினுல் ஏற்பட்டுள்ள புண் குறித்து இந் நாடு அல்லது இதன் சமுதாயம் நடந்துகொள்ளும் முறையும், சகலவிதமான ஸ்தலச் சிக்கல்களுக்கிடை அகப்பட்டுத் தட்டித் தடுமாறினுலும் இடையருமலும், அனைவரைப் பொறுத்தும் நீதி, நேர்மையுடனும் முன்னேறுவதானது மரியாதைக் குரியது; மனிதருக்குரித்தான குறைபாடுகளுக்குட்பட்டு மாட்சி மிகுந்த காட்சியுமாகும் இது.

# 7

## ஆண் - பெண் உறவு

அமெரிக்காவில் இனப் பிரச்னை போலவே ஆண்-பெண் பால் பிரச்னையும் சிக்கலுடையதாகவே உள்ளது என்பதில் ஐயமில்லை. ஒரு உளவியல் அறிஞர், ஒரு மானிட வரலாற்று வல்லுனர், ஒரு சமூகவியல் பண்டிதர், ஒரு தத்துவ சாஸ்திரி ஆகியோர்போன்ற நிபுணர்கள் கொண்டதொரு விரிவான ஆராய்ச்சிக்குப்பின் எழுதிய நூலொன்றே இவ்விஷயத்தைச் சற்று விளக்க முடியும். ஆனுல் அவ்விளக்கம் பயனுடையதாக இருக்க அந்த வல்லுனர் அனைவரும் உண்மையிலேயே தத்துவ ஞான உணர்ச்சியால் உந்தப்பட்டவர்களாக இருத்தல் வேண்டும்.

என்னைப் பொறுத்தவரையில், இனப்பிரச்னை போலவே இதுவும் குறுகியதொரு அத்தியாயத்திற்குள் முழுமையாக விவாதிக்க முடியாததொரு விஷயமே என்பதை இப்போதே கூறி விடுகிறேன். எனினும் இப்பிரச்னை இருக்கத்தான் இருக் கிறது. எனவே, இது சம்பந்தமாக நான் காண நேர்ந்த சில வற்றைப்பற்றி அப்போதைக்கப்போது தோன்றிய கருத்துக் களை சம்பாஷணை ரீதியில் எடுத்துரைப்பது இப்பிரச்சினைக்குப் பொருத்தமற்றதாகாது என்றே கருதுகிறேன். இது சம்பந்த மாக நான் கூற விரும்பும் முதல் விஷயம் மனித குலத்தை எப் போதும் தொல்லைப்படுத்தித் துன்புறுத்தும் பிரச்னைகளை அமெ ரிக்கர் அணுகும் முறையைப் பற்றியதாகும். எதனையும் உள்ளது உள்ளபடியே தீரமுடன் சமாளிக்கப் புகவும், விபரீத மான முறையில் சிக்கறுப்பதும் உள்பட அனைத்தையும் சரி செய்வதற்கான வழிவகை காணவும் அமெரிக்கருக்குள்ள விருப்பத்தின் விளைவே இம்முறை என்று எனக்குத் தோன்று கிறது. இளைஞர்கள் சம்பந்தப்பட்ட வரையில் (எதனையும் 'விடாமல் தொடர வேண்டும்' என்னும் முறை இவர்கள் கண்களில் சமூக நியதிக்குரிய மதிப்பைப் பெற்றிருப்பதை ஒரு

கூறலாம்) ஐரோப்பியர் அணுகுமளவு அத் உதாரணமாகக் கூறலாம்) ஐரோப்பியர் அணுகுமளவு அத் துணை தீர்க்கமாக அல்லாவிடினும் சமூக ஒழுக்க நெறியைப் பொறுத்துப் பகிரங்கமாக அங்கீகரிக்கப்பட்ட விதிகள், பழக்க வழக்கங்களுடன் இன்னும் நன்கு பிணைந்த வகையிலேயே அவர்கள் அணுகும் முறை இருப்பதாகத் தோன்றுகிறது. ஆனால் அதே சமயத்தில் ஐரோப்பியரைவிட பண்பற்ற முறையிலேயே, சில சமயங்களில் மிருகங்களைப் போல கரவற்ற வகையில்கூட, அமெரிக்க. இளைஞர் அணுகும்முறை உள்ளது என்பதையும் கூறவேண்டும். எனினும் இறுதி விளைவு ஐரோப்பியர் அணுகும் முறையால் ஏற்படுவதைவிடச் சிறந்ததாக இல்லையாயினும் இழிவாக இல்லை என்பது மட்டில் நிச்சயம். மேலும், ஆண் பெண் ஒழுக்கத்தைச் சார்ந்த வரை யில் ஐரோப்பாவில் சாதாரணமாக நிலவும் தரத்துக்கு ஏறக் குறைய ஏற்பவே அமெரிக்காவிலும் உள்ளது என்று கூறுவ தானது இரு சாராருக்குமே, மனித இயல்புக்கே, பெருமை யளிப்பதாகாது என்றே எண்ணுகிறேன்.

ஆயினும் மக்களின் அன்றாட ஒழுக்க நடத்தையுடன் எவ்வ வகையிலும் சம்பந்தப்பட்டவையல்ல, என் சிந்தனைகள்; மாருக, அவர்களுடைய சிந்தனைப் போக்கையே பொறுத்தவை அவை. இந்த நோக்கிலிருந்து பார்ப்போமானால் ஆண்-பெண் உறவில் மேன்மேலும் அதிக அக்கறை காட்டுவது தற்கால மேற்கத்திய உலகில் பொதுவான போக்காக இருப்பினும் இந் நாட்டில் அது தனி வடிவங்களை எடுக்கிறது என்று தோன்றக் கூடும். நாகரிகம் மலிந்த, அல்லது இலக்கியச் சுவையில் திளைக்கும் சில ஐரோப்பிய வட்டாரங்களைவிட (அமெரிக்கரின் அடிப்படையான நல்லெண்ணம் காரணமாக) இப் போக்கு கள் இழிதன்மை குறைந்தனவாக இருப்பினும் (புள்ளி விவரங் கள் 'விஞ்ஞான முறை', போதனை முறையின் பரந்த செல் வாக்கு ஆகியவற்றில் அமெரிக்கரின் திடநம்பிக்கை காரண மாக) முட்டாள்தனமாகவும் காண்கின்றன. எனவே, படித்த பிரஜைகளின் மனோபாவத்தில் ஆண்-பெண் உறவு சம்பந்த மாக விசித்திரமானதொரு கவலைச் சுமை வளர்ந்து வருகிற தெனலாம்; இன்னும் துலக்கமாகக் கூறவேண்டுமானால், ஆண்-பெண் உறவு சம்பந்தமான ஆராய்ச்சியின் விளைவாக உள்ளார்ந்த பயபக்தியினாலும் ஒருவகை தனி ஆர்வம் ஏற்



பட்டுவருகிறது. ப்யூரிட்டன்கள் என்னும் வரட்டுத் தூய்மை வாதிகளின் பிடி உதறியெறியப் பட்டதும் ஆண்-பெண் உறவு நிலையை உன்னதமும் கவர்ச்சியும் கூடியதொரு களமா கக் கண்டுகொண்டு விட்டதைப்போலவே அமெரிக்கரைப் பற்றி எண்ணச் செய்கிறது இது; அந்தக் களத்தில் பாடுபட்டு ஆராய்ந்தால் நம்மைப் பற்றி இதுவரை தெரியாதிருந்த பல முக்கிய விஷயங்களை அறிந்து கொள்ளலாம்; அதன் மூலம் நம் வாழ்வில் அபார அபிவிருத்திகளும் காணலாம் என்று அவர்கள் நினைப்பதாகவே தோன்றுகிறது.

விளம்பரக்காரர்கள் கவர்ந்திழுக்கக் கையாளும் அறி வற்ற இனவுணர்ச்சி முறைகளைப் பற்றி நான் இங்குக் குறிப் பிடப் போவதில்லை. அவற்றைவிடப் பாலுறவில் புதிதாகப் பிறந்துள்ள சிரத்தையுடன் மற்றொரு கருத்து சேர்வதால் ஏற் படும் விளைவே அதிமுக்கியமானதாக எனக்குப் படுகிறது. அனைத்தும், குறிப்பாக மனித உறவுகள் எல்லாமே, போத னைக்குரிய விஷயங்கள் என்ற நினைப்பு ஒரு புறமும், அவைய னைத்தும் ஆழமற்ற முறையில் பகுத்தறியும் வியாக்யானங்க ளுக்கும், 'விஞ்ஞானம்' என்று கருதப்படும் முறைக்கும் உரியவை என்ற எண்ணம் இன்னொரு புறம் கலந்து உருவான கருத்தேயாகும் இது—இந்த விஞ்ஞான முறைப்படி நம் புலன் களாலோ அன்றி, கருவிகளாலோ அளந்தறிந்து மதிப் பிடக் கூடியவை மட்டுமே முக்கியமானவையென நினைக்கப் படுகிறது.

எனவேதான் மனித அன்பு சம்பந்தப்பட்ட எல்லாப் பெரிய பிரச்னைகளையும் வெறும் பாலுறவைப் பொறுத்தவை யாகக் கருதிவிடும் பொதுப் போக்குக் காணப்படுகிறது. இந்தப் போக்கானது பண்புள்ள பலரை, உயரிய ஜீவதத்துவ, சமூக தர்ம நியதிகளுக்குப் பாலுறவை உட்படுத்துமாறு கூறப்படும் எந்த யோசனையையும் மதத்தை யொட்டிய குறுகிய எண்ணம் அல்லது, வறட்டுத் தூய்மை வாதத்தின் விளைவு என்றே எண்ணத் தூண்டுகிறது. அதே சமயத்தில் 'வாழ்வின் நிகழ்ச்சிகளைச் சார்ந்த சமயப் பற்றுக்குரிய ஒரு பக்தி சிரத்தை வளர்ந்திருப்பதையும் காணலாம். இந்தச் சிரத்தை நாசத்தன்மை படைத்ததென்றே நான் நினைக் கிறேன். நவீன மனிதனுக்கு பாலுறவு பற்றிய உண்மையான

போதனை (மனிதன் சம்பந்தப்பட்ட சகல விஷயங்களையும் பொறுத்த விரிவான அறிவூட்டல் திட்டத்துடன் இணைந்த வகையில்) மிக மிக அவசியமே. ஆனால் இங்கோ அதற்கு மாறாக மட்டரகமான முறையில் அமைந்த பாமரரஞ்சகமான விஞ்ஞானமும் வெறும் உணர்ச்சி வேகமுமே கூடியதொன்று, பாற்கல்வி என்ற பெயரில் போதிக்கப்படுவதையும், அதோடு ஒளிவு மறைவு ஏதுமின்றித் தீவிரமான முறையில் நல்லவை நாடப்படுவதையும் காண்கிறோம். பாலுறவில் பேரின்பம் துய்க்கும் நுட்பங்களை ஆர்வமுடன் செவிமடுக்கும் தந்தையருக்கும் தாய்மாருக்கும் திறமைமிக்க வைத்தியர்கள் தாராளமாக எச்சரிக்கையும் ரட்சக மனோபாவமும் கூடிக் கலந்திய முறையில் விளக்குகிறார்கள். ஆண்களின் ஆர்வத்துடிப்புகளை தூண்டுவதற்கும் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருப்பதற்கும் பெண்கள் கடைப்பிடிப்பதற்கான சிறந்த முறைகளைக் கௌரவம் வாய்ந்த ஆசிரியைகளைக் கொண்டு இளம் பெண்களுக்கு எடுத்தோதும் வகையில் அமைந்துள்ளது, பள்ளிப் பாடத்திட்டமும்; புத்தக ஞானமின்றி வேறேதும் படைத்திராத கபடமற்ற இந்தப் பெண்கள், ஆச்சரியப்படத்தக்க வகையில் துணிவும் தந்திரமும் உடையவர்களாகித் தக்க யுவரை காதலித்துக் கலியாணம் செய்துகொண்டு இன்பமாக வாழவே இவ்வேற்பாடு.

இந் நாட்டு மக்களின் உணர்ச்சியை பொதுவாகக் கருதுமிடத்து, இவையெல்லாம் வெளிப்படையாகத் தெரிகின்றனவேயன்றி உண்மை இயல்பைச் சுட்டுவதல்ல. ஆயினும் பாலுறவில் எப்படிப் பேரின்பம் காண்பது என்பது குறித்து ஜீவதத்துவ சாஸ்திரம் மூலமும் உளவியல் வாயிலாகவும் கணக்கற்றவர்கள் போதித்தும் படித்தும் வருவது விந்தையான காட்சியே என்பதை மறுப்பதற்கில்லை. வரட்டுத் தூய்மைவாதம் அல்லது அதற்கு எதிரிடையான போக்கு ஆகிய இரண்டின் தளைகளுமில்லாமல் வாழ்வின் தொடக்கத்திலிருந்தே இயற்கை தானாகப் புலப்படுத்தி வந்திருக்கும் பிற விஷயங்களுடன் சேர்த்துப் பார்க்கும்போது இது விசித்திரமாகவே தோன்றுகிறது.

* * *



இந்நாட்டில் நான் நேசிப்பவை எவை என்பதை விளக்குவதே என் பிரதான நோக்கமாக இருந்தபடியால் இந்த அத்தியாயமும், இதற்கு முந்தைய அத்தியாயமும் நான் முதலில் போட்ட திட்டத்தில் இடம் பெற்றிருக்கவில்லை. இரண்டு காரணங்களுக்காகவே இவற்றை இப்போது சேர்த்துள்ளேன். முதற்காரணம்; என் அன்புக்குரிய வாசகரே! நீங்களும், மக்களின் மனப்போக்குகளும் தான் என்னை இவற்றை எழுதத் தூண்டியதாகக் கூறலாம். என் பொருளுக்குப் புறம்பானவையாகப் பாவிக்கப்பட்டாலும்கூட அமெரிக்க அரங்கில் கலக்கமூட்டும் அம்சங்களைப் பற்றி எழுதாமல் இருந்தேனாகில் வேண்டுமென்றே அவற்றை மறைத்தவனாகத் தோன்றுவேன்; அல்லது, நான் உண்மையிலேயே உள்ளதைவிடத் தாழ்வான அறிவிலியாகக் கருதப்படுவேன்.

இரண்டாவது காரணம், சற்றுச் சிறந்தது. உண்மையில் இப்பிரச்னையின் பல்வேறு அம்சங்கள் நான் கூறப்புகுந்த பொருளுக்குப் புறம்பானவையேயல்ல என்ற கருத்துத்தான் அது. ஒரு மனிதனையோ அல்லது நாட்டையோ நாம் நேசிக்கும்பட்சத்தில் மனிதவியல்பை யொட்டிய துயர்களை அவனிடமோ அல்லது அதனிடமோ புகுத்தும் விஷயங்களைப் பார்த்தும், அவற்றை அவனோ அல்லது அதுவோ சீர்படுத்தப் புகும் முறையைக் கவனித்தும்தான் நாம் நேசிப்பதற்குரிய காரணங்களை முழுமையாகக் கண்டுகொள்ள முடிகிறது. ஆண்டவனின் சாம்ராஜ்யத்தில் மட்டுமே சைத்தானுக்கு இடமில்லை. இவ்வுலகில், ஒவ்வொரு நாட்டிலும் அவனுக்கு இடம் இருக்கவே இருக்கிறது. இதனை ஒரு நாடு விரும்புகிறதா இல்லையா, தீமையைப் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறதா, அன்றித் தவிர்க்க விழைகிறதா என்பதே கேள்வி.

நான் அதனிடம் நேசிக்காத அம்சம் எதற்காகவும் அமெரிக்காவிடம் அன்பு செலுத்தவில்லை என்பதை நிச்சயமாகக் கொள்ளலாம். ஆயினும், ஒளிக்க முயல்வதற்கு முற்றிலும் மாறாகத் தன் சொந்தத் தீய அம்சங்களை வெளிக் காட்டுவதில் அது கடைப்பிடிக்கும் தீவிரமும், அவற்றை அது ஒப்புக்கொள்வதும், பகிரங்கமாகக் காட்டுவதும், அவற்றின் கொடுந்தன்மை குறித்துத் தெரிய வந்ததும் தீரமுடன் அதை எதிர்த்

துப் போராடுவதுமாகிய அமெரிக்கவியல்புகள் அனைத்திலும்
அதனை இன்னும் அதிக அளவில் என்னை நேசிக்கத் தூண்டுவது
அதன் உள்ளார்ந்த மனிதாபிமானப் பண்பேயாகும்.

இந்த அத்தியாயத்தின் பொருள்பற்றியும் நல்லெண்ணத்
துடன் என்றும் இந்நாட்டின் பாலுறவைப் பொறுத்துத்
தற்போது கண்மூடித்தனமாகக் கொண்டிருக்கும் அதன்
மோகத்தையும் பொறுத்தவரையில்தான் சற்றுமுன் குறிப்
பிட்ட இரண்டு நிலைமைகளில் முதலாவதான அதாவது
வெளிப்படையாக ஒப்புக்கொள்ளும் நிலைமையிலேயே அமெ
ரிக்கர் இன்னமும் உள்ளனர் எனலாம். பிழையிலிருந்து
மீட்சி பெறுவதற்கான முயற்சியும் போராட்டமும் கூடிய
இரண்டாவது நிலைமை ஏற்பட்டே தீரும். மேற்கூறிய
காமவேட்கை ஏற்படுவதற்கு ஓரளவு பொறுப்பாளிகளான
உளவியல் நிபுணர்களுக்கு நாட்டின் மன ஆரோக்கியத்துக்கு
அது விளைக்கக் கூடிய பெருந்தீங்கு பற்றி புள்ளி விவரங்கள்
மூலமும், சிறந்த பகுத்தறிவு வாயிலாகவும்கூட உணர்த்தப்
படுமானால் அவர்களே அதற்கெதிரான போராட்ட முன்ன
ணியில் நிற்பரென்பது நிச்சயம்.

# 8

## அன்பும் தோழமை உணர்வும்

அமெரிக்கரின் அன்பை நினைக்கும்பொழுது ஃபிரான்ஸ் தனது பெருமையை இழந்த பயங்கரமான அந்த மாதங்களில் எங்கள் சிறிய கூட்டத்தை (அதாவது, நான், என் மனைவி, என் சகோதரி ஆகியோர் அடங்கிய குடும்பத்தை) நியூயார்க்கில் உள்ள எங்கள் அமெரிக்க நண்பர்கள் எவ்வளவு மரியாதையுடனும் தயாள சித்தையுடனும் வரவேற்றனர் என்பதும், தங்கள் அன்பு மூலம் எங்களுக்கு ஆறுதல் அளிக்க எத்தனை முயன்றனர் என்பதும் மட்டுமின்றி-முற்றிலும் முகமறியாதவர்கள்கூட எங்கள் நெஞ்சத்தை நெகிழச் செய்யும் முறையில் எங்கெங்கும் காட்டிய பரிவும் எனக்கு ஞாபகம் வருகிறது— வாடகை மோட்டார் வண்டிகளிலிருந்து நாங்கள் இறங்கிய போது 'ஃபிரான்ஸ் வாழ்க' என்று வாழ்த்தினர், பல மோட்டாரோட்டிகள்; நாங்கள் ஃபிரெஞ்சுக்காரர்கள் என்பது தெரிந்ததும் பணம் வாங்கிக்கொள்ள மறுத்தார் பூங்கொத்து விற்கும் ஒருவர்; ஃபிரெஞ்சு ராணுவம் தோல்வி பெற்றதைத் தெரிவித்த தலைப்புக்கள் வெளிவந்தபோதெல்லாம் (அநேகமாக அன்றாடம் அவ்வாறு வெளிவந்து கொண்டு தான் இருந்தன) பத்திரிகையைப் பத்திரமாக ஜேபியில் மறைத்துக்கொண்டார், நாங்கள் தங்கியிருந்த ஓட்டலில் இயந்திர ஏணிக்குப் பொறுப்பாகவிருந்த நீக்ரோவர். இவையெல்லாம் அற்ப விஷயங்களாகத் தோன்றலாம். எனினும் ஒருவன் துயருற்ற வேளையில் இம்மாதிரிச் சிறிய விஷயங்கள் மூலமும் விசித்திரமான வகையில் ஆறுதல் கிட்டுகிறது அநேகருக்கு. அக்காலத்தில் நியூயார்க் வீதிகளில் இத்தகைய அன்பனுவங்களைப் பெற நாங்கள் தவறியதே கிடையாது.

* * *

இப்பொழுது இன்னும் சில குறிப்பான கருத்தெழுச்சிகளைப் பற்றிக் கூறப்போகிறேன். அவற்றில் முதலாவதாக நான் கூற விரும்புவது, ஐரோப்பாவிலும் இந்நாட்டிலும் முற்றிலும் மாறுன இருவகை நியதிகள் பொதுப்படையாக நிலவுகின்றன என்பதாகும்.

ஐரோப்பியர், முக்கியமாக, ஃபிரெஞ்சுக்காரர்களின், அறிவாற்றலுக்கே அனைத்திலும் அதிக மதிப்புக் கொடுக்கிறுர்கள்—நல்லியல்பையும்விட அதையே அதிகமாக மதிக்கிறுர்கள் என்று நினைக்கிறேன். இது ஆத்மாவின் உள்ளியல்பைப் பொறுத்த பிரச்னையாக இருக்குமானுல் அமெரிக்கர்களிடம் உள்ள அளவு ஐரோப்பியர்களிடமும் நல்ல தன்மைகள் இருக்கின்றன என்பதில் எனக்கு ஐயமில்லை. தெய்வத்தினிடம் பக்தியையும், அண்டை அயலாரிடம் அன்பையும் மற்றனைத்தையும்விட மதித்த மகான்கள் பலர் ஐரோப்பாவில் இருந்திருக்கின்றனர்; இன்றும் அவ்வாறு பலர் உள்ளனர். தங்களிடமுள்ள குறைபாடுகளை வெளிக்காட்டுவதில் ஃபிரெஞ்சுக்காரர்கள் பிரியப்படுகின்றனர் என்றுல் அது அத்தீய அம்சங்களை உதறித் தள்ளும் பொருட்டேயாகும்; இவ்வகையில் தங்களுள் பொதிந்துள்ள கருத்து செல்வமாம் நற்பண்புகளை மூடி மறைத்துக் கொள்கிறுர்கள்.

எனினும் முற்றிலும் வேறுன விஷயத்தைப் பற்றியே இப்போது நான் பேசுகிறேன். மக்கள் தம் மனத்திற் கொண்டிருப்பவையும், அன்றுட வாழ்க்கை முறையிலும் சமூக உறவிலும் உபயோகிப்பவையுமான குண வேறுபாடுகளைப் பற்றியே கூறுகிறேன்.

ஐரோப்பாவில், குறிப்பாக ஃபிரான்ஸிஸ் 'நல்லவன்' என்பவன் பேதை, அனுபவமற்ற ஏமாளி என்றே கருதப்படுகிறுன். அறிவுடைமைக்கு, கொடுமையும் வன்மமும் இன்றியமையாத பான்மையென அங்குக் கருதப்படுகின்றது. எனவே இங்கிருந்து ஐரோப்பாவுக்கு நீங்கள் திரும்பும் பட்சத்தில் குளவிக்கூடொன்றில் காலடி வைத்துவிட்டது போலவே முதலெடுப்பில் தோன்றும். ஏனெனில், எல்லாப் புறங்களிலும் உங்களைக் குளவிகள் தாக்கிக் கொட்டும். (பாரிஸில் வசிக்கும் அமெரிக்கரொருவர் தம் நண்பருக்கு இதையொட்டி எழுதியகடிதம் என் நினைவுக்கு வருகிறது. "பல்லாண்டு



களுக்குப் பிறகு என்னை இந்நாட்டவரில் ஒருவனுகவே ஏற்கப்பட்டு ஒரு ஃபிரெஞ்சு குடிமக்கள் போலவே நடத்தப்படுகிறேன்; (தம் நாட்டினன் என்று கருதப்பட்ட உரிமையில்) இன்று என் காவற்காரரும். போலீஸ்காரரொருவரும், தபால் சிப்பந்திகளும் என்மீது சுடுமொழிகளை உபயோகித்தனர்; இரு கலை விமர்சகர்களும் என்னைக் கண்டித்தனர்" என்று அக்கடிதத்தில் பெருமையுடன் அவர் எழுதியுள்ளார் !)

இவ்வித மனப்போக்கினுல் ஓரளவு நன்மையும் உள்ளது. வன்மையான அறிவாற்றல் போட்டிக்கு ஆளாக்குகிறது இது; அனைவரிலும் அதிகத் தகுதி பெற்றவர் எவரோ அவரே தலை கொடுத்து நிலைப்பர் என்னும் இயற்கை நியதி ஐரோப்பியக் கலாசாரத்தில் பெரும் பங்கு வகிக்கிறது. இதில் ஓரளவு உண்மையும்கூட உண்டு—எனெனில், மேலும் அறிவுக் கெட்டும் நற்குணங்களும், மனித உணர்ச்சியில் இயல்பாயமைந்த நற்குணங்களும் இசைந்து இயங்குவதில்லை என்பது உண்மைதான். ஆனுல் அனைவருமே அறிவாற்றல் மிகுந்தவர்கள், அது காரணமாக பொருமையுடனும் தாக்கும் பான்மையுடனும் நடந்து கொள்ள உரிமை பெற்றவர்கள் என்று நினைப்பதில் தான் தவறு இருக்கிறது.

குணங்களின் தராதரத்தை இந்நாட்டினர் சீர்தூக்கிப் பார்க்கும்வகை இதற்கு நேர்மாறுனது. அமெரிக்கர் சீர்தூக்கிப் பார்க்கும் வகையில், நம்பிக்கைப் பொறுப்பு, நல்ல எண்ணம், விசுவாசம், உதார குணம் முதலிய நல்லியல்புகளே முதலிடம் பெறுகின்றன. இதனுல்தான் அமெரிக்கரின் பரிவுத் தன்மை பிற நாட்டாருக்குப் பளிச்செனத் தெரிகிறது. எல்லோருடனும் இவர்கள் தோழமை கொண்டு சமமாகப் பழகுகிறுர்கள். இது ஏன்? அனைவரும் மனிதர், சக மனிதர் என்ற சாதாரணக் காரணத்தால்தான். தங்களிடம் உதவியும் அனுதாபமும்—சில சமயங்களில் மிகுந்த முன்யோசனையுடன் கூடிய தாராள கவனமும்—பிறர் பெறுவதற்கு அவர்கள் மனிதர் என்ற இந்த அருகதை போதுமானதாக இருக்கிறது, அமெரிக்கருக்கு. இந்நாட்டில் அடியெடுத்து வைத்ததும் இதையொட்டிய நூதனமான, மறக்கவே முடியாத மனவமைதி வாய்க்கப் பெறுகிறீர்கள். கவலையின்றி மூச்சுவிட ஆரம்பிக்கிறீர்கள். அறிவாற்

றல் மீது வஞ்சமின்றியே இவ்வளவும் நடக்கிறது என்பது குறுப்பிடத் தக்கது.

*　　*　　*

நியூ கினியாவிலுள்ள 'மானுஸ்' மக்களைப்பற்றி ஏற்கென வேயே ஒரு முறை குறிப்பிட்டுள்ளேன். காட்டுமிராண்டிக ளாக இருந்த நிலையிலிருந்து இருபத்தைந்து ஆண்டுகளுக்குள் நாகரிக நிலைக்கு முன்னேறிவிட்ட இவர்களைப்பற்றி மற்று மொரு முறை ஓரளவுகருத விரும்புகிறேன்; இரண்டாவது உலகப்போரின்போது இவர்களுடைய தீவு வழியாகச் சுமார் பத்து லட்சம் அமெரிக்கர் சென்றதால் இதில் ஏற்பட்ட விளைவுகளையும் மதிப்பிட விழைகிறேன். இந்த மனித வர லாற்று அதிசயம் சம்பந்தமாக இவ்வகையில் பிரஸித்த நிபுண ரான 'மார்கரெட் மீடு' அம்மையார் தாம் எழுதிய 'பழைய வாழ்வு மறைந்து புதிய வாழ்வு' (நியூ லைவ்ஸ் ஃபார் ஓல்ட்) என்னும் நூலில் குறிப்பிட்டுள்ள சில பகுதிகளைப் பார்ப் போம்: "மானஸ் மக்கள் பிரதேசத்தில் புகுந்து புறப்பட்ட சுமார் பத்து லட்சம் அமெரிக்கர்களும் தனிமுறையில் பொறுக்கி யெடுக்கப்பட்டவர்கள் என்றோ, தங்கள் நாட்ட வரில் மற்றவரைவிட எவ்வகையிலும் நடத்தையிற் சிறந்தவர் களென்றோ உதாரண புருஷர்கள் என்றோ நினைக்க இடமில்லை. எனினும் அவர்கள் இனம் அல்லது வர்க்க பேதமேதும் அற்ற முறையிலும், மற்றவர்களையும் மனிதராக மதித்து சகஜமாக வும் பழகுவதைக் காணும் அனுபவம் அம்மானுஸ்மக்களுக்குக் கிட்டியது" தங்களை "தனி மனிதர்களாக, சகோதரர்கள் போலவே அமெரிக்கர் மதித்து நடந்துகொண்டனர்" என்று மானுஸ் மக்கள் தம்மிடம் கூறியதாக அவர் குறிப்பிடுகிறார்.

"உழைத்துக் களைத்து இளைஞராக இருக்கும்போதே இறப்பதற்கு மாறாக வயோதிக தசை வரையில் மனிதர் வாழும் பொருட்டுத்தான் இயந்திரங்கள் மூலம் வேலைகளை முடிப்பதில் அமெரிக்கர்கள் நம்பிக்கை கொண்டுள்ளனர்" என்றும் மானுஸ் மக்கள் அவரிடம் கூறினராம். "ஒவ்வொரு மனிதருடைய வாழ்வும் ஆரோக்கியமும் மிகப் பெரிதும் பாராட்டத்தக்கவை; இவற்றைக் காக்கும்பொருட்டு எவ் வளவு செல்வத்தையும், ஆற்றலையும், காலத்தையும் வேண்டு



மானாலும் தியாகம் செய்யலாம் என்று அமெரிக்கர் கருதுவ தாக மானுஸ் மக்கள் கூறினர்...'எந்தப் பொருளையும் ஈடு செய்யலாம், செலவிடலாம்; ஆனால் மனிதர் மறைவை மட்டும் ஈடு செய்யவியலாது' என்பதை அமெரிக்கரிடமிருந்து நாங்கள் தெரிந்துகொண்டோம்...மனிதன் என்ற ஒன்று மட்டுமே முக்கியத்துவம் வாய்ந்தது என்பதையும் அவர்களி டமிருந்தே கற்றறிந்தோம் என்றெல்லாம் தம்மிடம் மானுஸ் மக்கள் கூறியதாக 'மீடு' அம்மை தெரிவிக்கிறார்.

இவற்றிலிருந்து, அமெரிக்கரின் உலகாயதப் போக்குபற் றிக்கோஷிக்கும் ஐரோப்பியரைவிட மானுஸ் மக்கள் அறிவில் சிறந்தவர்கள் என்று நாம் முடிவு கட்டிவிடத் தேவையில்லை. மாறாக, தங்கள் தீவில் இருந்தவாறே அமெரிக்கர்கள் தங்கள் சொந்த நாட்டில் நடந்துகொள்ளும் முறையை நேரிடக் காணும் அரிய வாய்ப்பு அவர்களுக்குக் கிடைத்ததெனக் கூற லாம். அவர்களிடையே சென்ற பத்து லட்சம் அமெரிக்கர் களும் வெளிநாடொன்றில் பழகும் அமெரிக்கர்களாக இருக்க வில்லை; அமெரிக்காவையே தங்களுடன் அவர்கள் எடுத்துச் சென்று விட்டனர்—அத்தகையதொரு நடமாடும் அமெரிக்கா வாகவே இருந்தது அமெரிக்க ராணுவம்.

*　　*　　*

நான் குறிப்பிட்ட மேற்கூறிய தராதர நியதியின் முக்கிய மான பயனாக இங்குப் பொதுப்படையாக நிலவும் ஒரு பரிவுப் பண்பைப் பார்க்கிறோம். அனைவரிடமும் அன்பாக, எல்லையே அற்றதாகக் காண்கிறது அது. ஆனால் இதன் விளைவாக, அல்லல்கள், பூசல்கள் ஆகியவற்றுடன் கூடிய நெருங்கிய நட்புறவும், அதன் பயனான அளவளாவலும் வளர்வதற்கு வாய்ப்பு குறைந்துவிட்டதாகத் தோன்றுகிறது. (மேலும், என் மனைவியிடம் ஒரு பெண்மணி கூறியதுபோல உடல் பற்றியோ ஆத்மா பற்றியோ பேசுவது நாகரிகமல்ல என்று இங்கு உண்மையிலேயே கருதப்படுமாயின் உரையாடுதல் சிரமம் மிகுந்ததாகத்தான் இருக்கும்.) இதன் விளைவாகத் தான் பரவலான பரிவுக்கும், மும்முரமான சமூக வாழ்க்கைக் கும் இடையே தனிமையால் தவிப்பவர்களையும் காண்கிறோம். அனைவரிடமும் அன்பைக் குறிக்கும் தாராள மனத்துக்கும்,

நெருங்கிய நட்புறவுக்குத் தேவைப்படும் குறுகிய மனத்துக்கு மிடையில் இருக்கும் ஒருவகை முரண்பாடே இதற்குக் காரணம் போலும்.

இவ்விஷயத்தை உங்கள்முன் வைப்பதோடு நிறுத்திக் கொள்கிறேன். ஏன், எப்படி என்பது எனக்குத் தெரியா தாயினும் இதில் ஏதோ சுவை இருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது.

* * *

இந்த அத்தியாயத்தில் நான் இறுதியாகக் குறிப்பிட விரும்புவது, பரஸ்பர சகிப்புத் தன்மையையும், தோழமை உணர்ச்சியையும் பற்றியதாகும். ஆயின், இனப் பிரச்னை எழும்போது பயங்கரமான நரவாரப் பான்மை இந்த நல்லு ணர்ச்சிக்கு ஊறு விளைவிக்கிறது. எனினும் ஏற்கெனவேயே நான் குறிப்பிட்டதுபோல இனவேற்றுமையானது அமெரிக்க வாழ்க்கை முறையின் ஆதாரக் கோட்பாடுகளுக்கும், அதன் அகவியல் ஆர்வங்களுக்கும் முற்றிலும் பொருத்தமற்றது. ஆகவே தான் அதை ஒழித்துக்கட்ட முற்பட்டுள்ளது இந் நாடு.

அறிவுத்துறையில் சகிப்புத் தன்மையின்மை சகோதர மக்களின் சமயச் சார்பில் மெய்ப்பொருள் கொள்கை இவை களை புறக்கணித்து விடுவது அமெரிக்க வாழ்க்கையின் மூலக் கருத்துக்கு உலைவைக்கக் கூடியதாகும், ஆயினும் அமெரிக்க நல்லுணர்ச்சி இத் தீய விளைவைத் தவிர்க்கத்தக்கது. தூய்மை வாதிகளின் காலத்தில் நியூ இங்கிலாந்தில் நிலவிய பண் பாட்டுவகை பற்றிப் பேசுகையில், மதத் துறையில் சகிப்புத் தன்மையின்மை, தனித்து நிற்பதுபோல் கற்பனை செய்து கொள்வது, கையாலாகாமல் துடிப்பது ஆகிய மூவ்வகை உணர்ச்சிகளின் மீதும் அது தொடர்ந்து வெற்றி கண்டதாக பால் எல்மர் மோர் என்ற சான்றோர் கூறினார். ஆனால் இவை யெல்லாம் கடந்துபோனவையே. மனித இயல்பின் உள்ளு ணர்வுகளில் ஊன்றியுள்ள அபாயப் போக்குக்கள் என்றும் இருக்கத்தான் இருக்கும். உதாரணமாக, சிலுவையை எரிக் கும் சடங்குடன் கூடிய 'க்யூக்ளக்ஸ் கிளான்' இயக்கம் இன்ன மும் தலைகாட்டி வருகிறது; தீயிட்டு எரிப்பதை அது நிறுத்திய



பாடில்லை. எனினும் எவ்விதமான பிணக்கு இருந்த போதிலும் அச்சமும் ஆத்திரமும் ஆங்காங்கு கிளர்ந்தபோதிலும் அமெரிக் கப் பொது மனோபாவமும் சரி, சட்டமுறையும் சரி, மாறு பட்ட கருத்துக் கொள்வோரைப் பொறுத்து, வன்முறை, வலுக்கட்டாயம், வசை அல்லது அச்சுறுத்தல் கையாளப் படுவதைக் கண்டித்துத் தடுத்தே வருகின்றன. முற்றிலும் மாறுபட்ட தேசிய, சமூக, சமய அடிப்படைகளிலிருந்து தோன்றிய பரம்பரைகளைக் கொண்டதாக அமெரிக்கச் சமுதாயம் அமைந்திருப்பதால் இங்குப் பரஸ்பர சகிப்புத் தன்மை அறவே இன்றியமையாததாகும். இத்தகைய சகிப் புத் தன்மை இங்கு இல்லையேல் எங்கும் சண்டையும் பூசலு மாகவே இருக்கும்.

இவ்வாறு சரித்திர பூர்வ அவசியத்தினால் ஏற்பட்ட சகிப் புத் தன்மை நாகரிக வளர்ச்சிக்கு மதிப்பரிய ஆதாயமாகிவிட் டது. மக்கள் பரஸ்பர மரியாதையுடனும் சகிப்புத்தன்மை யுடனும் சேர்ந்து வாழ நேர்ந்திருப்பதன் மூலம் இவ்வித ஆதாயம் கிடைத்துள்ளது. மக்கள் தோழமை உணர்வின் எல்லையற்ற முக்கியத்துவத்தை நன்குணர்ந்து இயங்கும் நாடு உலகிலே அமெரிக்கா ஒன்றுதான் எனலாம்.

இது போன்ற மகத்தானதொரு சாதனையும் கூடச் சில சமயங்களில் தவறான முறையில் புரிந்துக் கொள்ளப்படலாம் என்பதையும் நான் கூற விரும்புகிறேன். அன்பு ஒன்றே அனைத்தும் ஆகிவிடாது. சற்று முன் நான் குறிப்பிட்டது போல இங்கு அறிவாற்றல் மீது நல்லியல்போ, தோழமை உணர்வோ வன்மம் தீர்ப்பதில்லை. ஆயினும் இவ்வாறு நேரு வதற்கு இடமில்லாமலில்லை. குறிப்பாக உயர்தரப் பள்ளிக் கல்வி முறையில் இதற்கு இடமிருப்பதாகவே கருதுகிறேன். அங்கு அறிவுக் கூர்மையும், பெருக்கமும் மிகுந்த அளவில் படைத்த ஆசிரியர்கள் மிதமிஞ்சிய அன்பு காட்ட விழைகிறார் கள். அனைவரும் சமமான அளவு சந்தோஷமும் வெற்றியும் பெறச் செய்வதே அவர்களுக்குப் பெருநோக்கமாக உள்ளது. மாணவ, மாணவிகளிடை எத்தகைய திறன் இருப்பினும் அதனை அபிவிருத்தி செய்தும், எவ்வகை சமூகத்துறையில் அவர்களுக்கு நாட்டம் இருப்பினும் அதை ஊக்கி வளர்த்தும் அனைவரிடையிலும் மகிழ்ச்சி நிலவச் செய்ய அவர்கள் முனை

கிறார்கள் — இதனால் மெய்யான பொதுப்படைக் கலாசாரத்துக்கும், இயைந்தியங்கும் ஞானத்தின் அடிப்படைகளுக்கும் என்ன பெருநஷ்டம் ஏற்படினும் அவர்கள் பொருட்படுத்துவதில்லை.

பொதுப்படை அம்சங்களை இப்போது பார்ப்போம்: வளர்ந்தியங்கும் சமுதாய உணர்வின் பயனாக இங்கு விளங்கும் அறிவுத்துறை ஐரோப்பிய நிலையிலிருந்து ஓரளவு மாறுபட்டிருக்கக் காண்கிறேன். அதாவது, கட்டுக்கோப்புடன் அமைந்த அறிவாற்றல் முயற்சிகளும், நாட்டில் நடக்கும் பொதுப்படையான அறிவுத்துறைக் கூட்டுப் பணிகளும்; பெருங்கால அறிவாற்றல் அறுவடைக்கான ஆயத்தங்களும், ஆராய்ச்சித்துறையின் பொதுமுன்னேற்றமும் ஐரோப்பாவைவிட இங்கு அதிக சாத்தியக் கூறுகள் உடையவையாக உள்ளன. நாட்டில் என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்வதன் பொருட்டு பண்டிதர்களுக்கும், பொதுவாகப் படித்தவர்களுக்கும், மற்றும் விஞ்ஞானிகளுக்கும் மேன்மேலும் பற்பல துறைகளில் அறிவை வளர்ப்பது இன்றியமையாதது.

ஆனால் ஒரு சிலருக்கு மட்டுமே சாத்யமான படைப்புத் தொழில் சம்பந்தப்பட்ட வரையில் ஐரோப்பாவைவிட இங்குப் பிரதிகூலமான சூழ்நிலையே உள்ளது என்பேன். காரணம், தனிப்பட்டதும் தீவிரமானதுமான விடாமுயற்சி தவிர அத்தனை சிரமத்துக்கும் ஏற்றதாக இறுதிப் பயன் இருக்குமா என்பது எவருக்கும் தெரியாததலால் அதிக ஈடுபாடும் இதற்கு அவசியமாகும். சமூகத்திலிருந்து தனி மனிதரைப் பிரித்து வைக்கும் எம்முயற்சியும் இங்கு வெகுவாக வெறுக்கப்படுவது இதற்கொரு காரணம் எனலாம்.

குறிப்பாக கலைத்துறைகளில் மற்றவர்களை எஞ்சித்திகழ வேண்டுமென்ற கருத்துடையோர் மனத்தில் எழும் பயத்தைப் பற்றி என் சிந்தனை ஓடுகிறது.

எந்தவொரு மானில ஆசிரியனையும் விடத்தாம் சிறந்தவர்கள் என்று காட்டிக் கொள்ளக்கூடாது என்பதில் குறியாயிருக்கின்றனர், பல அமெரிக்கப் பேராசிரியர்கள். மாண்புடைய அறிவின் பெருமிதம், ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்கும் தன்மையையும் சமூக ஈடுபாடுகளின் போக்கையும் பாதிக்குமன்றோ ? மேலும், மற்றவர்கள்பால் பொறுமையை



யும், போட்டியையும் பூசலையும் தூண்டுவதற்குச் சந்தர்ப்பம் அளிப்பதைவிடச் சாமானிய புத்தியுடன் நினைத்து நிற்பதே உகந்ததல்லவா ?

பொது உரிமை உணர்ச்சிகளை மிதமிஞ்சிப் போற்றுவது குறித்து நையாண்டி செய்வதில் ஒரு தனி மகிழ்ச்சியுண்டு தான். எனினும் அறிவியல் வாழ்வைப் பொறுத்த வரையில் (தற்சமயம் இந்த நோக்கிலிருந்துதான் அனைத்தையும் ஆராய்கிறேன்) இந்த மிதமிஞ்சிப் போற்றும்பான்மை கல்வி மட்டாரங்களில் இருப்பதும், அதன் கீழ் மட்டங்களிலுங்கூட நிலவுவதும் உண்மை. இன்னும் பொதுப்படையாகக் கூறுவதாயின், அமெரிக்க அறிவியல் வாழ்க்கைக்கும் ஐரோப்பிய அறிவியல் வாழ்க்கைக்குமிடையே ஒருவகை வேற்றுமை உள்ளது; எத்தன்மைகள் ஒன்றுக்குப் பலவீனமாகவுள்ளனவோ அவையே மற்றொன்றுக்குப் பலம் படைத்த அம்சங்களாக இருக்கின்றன; எனினும் முழு மொத்தமாகப் பார்க்குமிடத்து இவ்விரண்டும் ஒரே தரமுடையவையே. மேலும் முழுவளர்ச்சி அடைந்திருப்பதன் பயனாக அமெரிக்க அறிவியல் வாழ்க்கையினால் எந்தச் சமயத்திலும் புதுப்புதுத் துறைகளில் எதிர்பாராத முறையில் வல்லமைக் காட்ட முடிகிறது. இலக்கியம், சரித்திரம், தத்துவ ஞானம் போன்றவற்றிலும் சிரத்தை திரும்பலாம். கற்பனை சிருஷ்டி சம்பந்தப்பட்ட வரையில் அமெரிக்க நாவலாசிரியர்களும், கவிஞர்களும் விமர்சகர்களும் நவீன இலக்கியத்தின் மகத்தான சாதனைகள் பல வற்றுக்கும் மிக நுண்ணிய ஆராய்ச்சிகளுக்கும் காரணகர்த்தாக்களாக இருந்திருக்கிறார்கள் என்பது கவனத்திற்குரியது.

எனக்குத் தனி ஆர்வமுள்ள தத்துவ சாஸ்திரத்துறையை நான் மறக்காதிருப்பது இயற்கையேயன்றோ? உள்நாட்டுப் போரையடுத்துப் பொதுவாக வளர்ச்சிகண்ட காலத்தில் மாபெரும் மேதைகளுக்குரிய பாராட்டுக்களை அமெரிக்க தத்துவ வித்தகர்கள் பெற்றதற்குத் தெளிவான சான்றுகளாக 'சார்லஸ் ஸாண்டெர்ஸ்,' 'பர்ஸ்,' 'ஜோஸியா ராய்ஸ்,' 'வில்லியம் ஜேம்ஸ்,' 'ஜான் டூயி' ஆகியோரின் பெயர்களைத் தாம் சமீபத்தில் எழுதிய கட்டுரையொன்றில் மார்ட்டிமர் ஆட்லர் குறிப்பிட்டது மெத்தச் சரியே. (என்னதான் முரண்பட்ட

கருத்துக்களை கொண்டவையாக இருப்பினும் விருப்பு—
வெறுப்பற்ற முறையில் அமையவேண்டும் என்னும் ஆர்வத்
துடனும், வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்தையும்
பொறுத்து அக்கறையுடனும் எழுதப்பட்ட) அவர்களுடைய
நூல்கள், ஸ்தூலக் கருத்துக்களை அமெரிக்கர்கள் வெறுக்கிறுர்
கள், அவர்களால் விருப்பு—வெறுப்பின்றி நீடித்துச் சிந்தனை
செய்யவியலாது என்று இந்நாடுபற்றி அறியாத பலரால்
இன்னமும் நிலவும் கருத்து எவ்வளவு தவருனது என்பதை
நன்கு காட்டுகின்றன.

வெளிநாடுகளில், முக்கியமாக ஐரோப்பாவில் பிறந்த
அறிவியல் ஓட்டங்களையே இப்பணி இன்னமும் பெருமளவுக்
குச் சார்ந்திருக்கிறது என்பதில் ஐயமில்லை; எனினும் உண்மை
யான சிருஷ்டி வேலையேயாகும் இது. ஏனெனில், அமெரிக்க
ஒழுக்க, கலாசாரப் பகைப்புலத்தில் பரீட்சித்துச் சோதனை
செய்து, திருத்திப் புதுப்பித்தபின், மூல சித்தாந்தங்களாக
உருப்பெற வேண்டிய ஏராளத் தத்துவக் கருத்துக்கள் வெளி
யாக இது வகை செய்கிறது. ஆகவேதான், ஹெர்பெர்ட்ஷ்
னீடர் குறிப்பிட்டதுபோல, தற்காலத் தலைமுறையினரால்
அமெரிக்கத் தத்துவஞானத் துறையில் முற்றிலும் புதிய
தொரு அத்தியாயம் இப்போது எழுதப்பட்டு வருகிறது என
லாம். அறுதியிட்டுக் கூறும் அனைத்தையும் எதிர்த்தும்,
மனித புத்திக்குப் பொருத்தமான ஒரே ஞானம் விஞ்ஞானம்
தான் என்ற சித்தாந்தத்தை மறுத்தும் வாதாடும்
தத்துவ ஞானக்கழகம் ஒன்றும், தத்துவ ஞான
சஞ்சிகையொன்றும் இங்கு ஏற்பட்டிருப்பது சாமானிய
யச் சாதனையல்ல. ''தத்துவ ஞானம் சம்பந்தப்பட்டவரை
யில் அமெரிக்கா தன் தனி முடிவை நிலைப்படுத்தியுள்ளது
என்பது மறுக்கமுடியாதது. ஐரோப்பாவில் பழங்காலந்
தொட்டுத் தத்துவ சாஸ்திரத்தில் ஊறி வந்திருக்கும் நாடு
களுடன் ஒப்பிடுங்கால் நாம் பின்னடைந்திருப்பதற்குக் கார
ணம் பொதுமக்கள் போதிய அளவு சிரத்தை கொண்டு பங்
கெடுக்காமலும் நாட்டின் அறிவியல், அரசியல் துறைகளில்
தத்துவ ஞானம் தகுந்த அளவு இடம் பெருதிருப்பதேயாம்.
இருப்பினும் இந்தக் குறைபாடுகளும்கூட உரிய காலத்தில்



நீக்கப்பட்டுவிடுவது நிச்சயம்'' என்று மார்ட்டிமர் ஆல்டர்
கூறியுள்ளது மீண்டும் சாலவும் பொருத்தமே.

* * *

தற்போதைக்கு அமெரிக்கரின் நடைமுறையில் அவ்வள
வாக மகிழ்ச்சி அளிக்காததொரு அம்சம், அறிஞர்களைக்குறித்து
குறிப்பாக கலைஞர்களைப் பொறுத்துப் பொதுஜன மனோபா
வத்தின் போக்காகும். ஃபிரான்ஸில் மன்னரை போல் திகழ்
கின்றனர் கலைஞர்கள்; அவர்களுடைய நடவடிக்கைகளிலும்,
தேசிய விவகாரங்கள் குறித்து ஒரு பெரும் நாவலாசிரியர் அல்
லது சைத்ரிகர் தெரிவிக்கும் கருத்துக்களிலும் மக்கள் மிகுந்த
அக்கறை காட்டுகிறுர்கள். இங்கோ பிரபலமாகவுள்ள தொழி
லதிபர்களைவிட அவர்களுடைய கருத்துக்களுக்குக் குறைந்த
மதிப்பே அளிக்கப்படுகிறது. அதோடன்றி அக்கருத்துக்கள்
ஓரளவு ஐயத்தைக்கூடக் கிளப்புவதாகக் காண்கின்றன. இது
கவலை தரத்தக்க நிலை என்பது வெள்ளிடை. கலைஞருக்கும்
அவருடைய படைப்புக்களைக் காண்பவருக்குமிடையே எங்கு
நுணுக்கமான தொடர்பு தேவையோ அங்கு அது இல்லை.
தேர்ந்த ரஸிகர்கள் கொண்ட சிறிய குழுவோடு நிற்கக் கூடிய
தல்ல அந்த உறவுபாடு. பொதுஜன அளவுக்கு அல்லாவிடி
னும் அந்தச் சிறிய குழுவின் வட்டத்துக்கு அது வியாபிக்க
வேண்டும். இவ்வாறு அணுக்க உறவு பரவவேண்டிய அத்
தனை 'விஷயம் தெரிந்த மக்கள் குழு' என்று நாம் வழங்கலாம்.
ரஸிகர்களைப் பொறுத்தவரையில் கலைகளிடம் அவர்களுடைய
அபிமானமும், ருசியும் இங்கு உன்னத அளவை எய்தியுள்ளன.
(இது விஷயத்தில் தனிப்பட்ட முறையில் சேகரிப்பவர்கள்
பகுத்தறிவுடன் தேர்ந்தெடுத்து இந்நாட்டுக்குக் கொண்டு
வந்துள்ள இணையற்ற நவீனகால ஓவியங்களை நினைத்துப்
பார்த்தால் போதுமானது.) மற்றெந்த இடத்தையும்
போலவே இங்கும் பொதுமக்களின் ருசி மட்டமாக இருப்பினும்
உண்மை மதிப்பைப் புரிந்துகொள்ள ஒரு ஆர்வமும் இருக்
கிறது; இதைச் சரிவர ஊக்கி வளர்த்தால் ஆச்சரியகரமான
பயன் விளையக்கூடும். நான் முக்கியமாகச் சிரத்தை கொண்
டுள்ள அறிவுத் தேற்றம் வாய்ந்த மக்களின் நிலை என்ன ?—
கலைஞர்களிடம் அவர்கள் எதிர்பார்ப்பது தங்களுக்கு உண்மை

யான அறிவியல் மகிழ்ச்சியே. பொதுவாக நன்காராய்ந்து மதிப்பிடுபவர்களே அவர்கள். ஆயினும் உண்டிச்சாலைகளில் தங்களுக்கு உணவு தயாரிக்கும் சமையற்காரர்களிடம் அவர்களுக்கு எவ்வளவு அக்கறை உண்டோ அவ்வளவுதான் ஓவியர் அல்லது எழுந்தாளர்களின் ஆக்க முயற்சிகள் குறித்தும் அவர்கள் கொண்டிருக்கிறார்கள் என்றே நான் நினைக்கவேண்டியிருக்கிறது. அந்த உணவைப் போலவே கலைச் சிருஷ்டிகளையும் அவர்கள் அனுபவித்து மகிழ்கிறார்கள், ஆனால் கலை, கவிதை துறைகளில் கலைஞரின் தேட்டமும் கண்டுபிடிப்புக்களும், படைக்குங்கால் அவர்பட்ட அவதியும் கலைஞர்கள், ரஸிகர்கள் ஆகியோரை மட்டுமே கொண்ட சிறிய உலகுக்கு வெளியே வேறெவருடைய உள்ளத்தையும் கிளறுவதில்லை.

இடைமிடைத்துப் புகுத்திய விஷயங்களைக் கடந்து நான் சுட்டிக் காட்ட விரும்பிய பிரதான விஷயத்துக்கு மீண்டும் வருகிறேன்—பரஸ்பர சகிப்புத்தன்மையின் தேவைகளைப் பொறுத்துத் தவறானதொரு எண்ணம் இருக்கக்கூடுமென எனக்குத் தோன்றுகிறது; அவசியம் அறிந்துணர வேண்டிய விஷயம் இது என்பதே என் கருத்து.

எந்த உண்மையையும் அசைக்க முடியாத அளவு நிலையானது என்று எண்ணாமல் இருப்பதும், எக்கூற்றையும் உறுதியுடன் பற்றிக் கொள்ளாமல் இருப்பதும் சகிப்புத் தன்மைக்கும், சமாதான சக வாழ்வுக்கும் இன்றியமையாதவை என்றெண்ணும் சிலரைச் சில சமயங்களில் நாம் சந்திக்க நேர்கிறது. உண்மையில் இத்தகையவர்கள் தாம் மற்றவர்களை விட சகிப்புத்தன்மை குறைவாக உள்ளவர்கள் என்பதே என் கருத்து. ஏனெனில், சந்தர்ப்ப வசத்தினால் ஏதாவதொன்றை அசைக்க முடியாத உண்மை என்று இவர்கள் நம்ப நேரும் பட்சத்தில், அதே காரணத்தினால் மற்றவர்கள் மீது தங்கள் நம்பிக்கையை வலுக்கட்டாயமாகத் திணிக்கும் நிர்ப்பந்தத்திற்கு ஆளாவார்கள். இத்தகைய பிடிவாதப் பான்மையின் விளைவு உண்மையுடன் தொடர்பைத் துண்டித்துக் கொள்வதுதான். உண்மையையோ நியாயத்தையோ யாராவது கண்டறிந்தாலோ, அல்லது கண்டறிந்து விட்டதாகக் கூறினாலோ, அவர் நல்ல பிரஜை அல்ல என்று சாதிக்கிறார்கள்; "உண்மைக் கருத்தெனினும் தன்னுடையதற்கு மாறானதொரு கருத்து,



இருக்கக்கூடுமென்பதை அவரால் ஒப்புக்கொள்ள இயலாது, அவ்வாறு அவரிடம் எதிர்பார்க்கவும் முடியாது" என்று அதற்கு இவர்கள் காரணம் கூறுகிறார்கள்.

சத்தியம் எது, தர்மம் எது என்பதை அறிந்தவன் அல்லது அறிந்தவன் என்று தன்னைப் பாராட்டிக் கொள்பவன், மாற்றுக் கருத்தொன்று இருத்தலும் கூடும் என்பதை ஒப்புக் கொள்ள இயலாமல் தனது கருத்தைப் பிறர் மீது திணிக்கப் புகுவனாயின், புத்திசாலி என்ற கொள்கைக்கே அளப்பறும் தீங்கு விளைவிப்பதாகும். ஆனால், உண்மையைக் கருதுமிடத்து யாதொரு வலுக்கட்டாயமன்றி தானறிந்த உண்மையைப் பகுத்தறிவு மூலம் விளக்கித் தன் வழிக்குப் பிறரைத் திருப்ப முனைவதே உகந்ததாகும். விஞ்ஞானம், தத்துவ ஞானம் அல்லது சமயம் ஆகிய துறைகளைப் பற்றிக் கருதுங்கால், 'பான்டியஸ் பைலேட்' ஐயுற்றதே, போல "எது உண்மை?" என்று உசாவுபவன், சகிப்புத் தன்மையற்றவன், மனித குலத்தையே காட்டிக் கொடுப்பவன் எனலாம். அதாவது, ஒரு உண்மை குறித்து, அல்லது தான் உண்மையெனக் கருதும் ஒன்று குறித்துத் திடமாகவும் முழுமையாகவும் தனக்கு நம்பிக்கை இருப்பினும் அதை மறுக்கப் பிறருக்கு உரிமை உண்டென்பதை எவன் ஒப்புக்கொள்கிறானோ அவனே மெய்யான பொறுப்புடையவன் மற்றவர்கள் தன் கருத்தை மறுப்பதற்கு இடந்தருவதன்றி அவர்கள் தம் கருத்தை எடுத்துரைக்கவும் அவன் அனுமதிக்க வேண்டும். ஏனெனில் அவர்களும் தங்களுக்குத் தோன்றிய வழிகளில் உண்மையைக் கண்டறியத்தான் விழைகிறார்களேயன்றி அதனின்று விலகியோடவில்லை. அவர்களிடமுள்ள மனிதத் தன்மையையும் மனிதருக்குரிய கௌரவத்தையும் மட்டுமின்றி தான் பற்றுக்கொண்ட உண்மையை என்றாவது ஒரு நாள் காணக்கூடிய வகையில் அவர்களிடமுள்ள அறிவு, மனச்சாட்சியையும் அவன் மதிப்பது அவசியமாகிறது.

"உண்மை எது?" என்றபிரச்னையையொட்டி நான் மேலே கண்டித்துள்ள கருத்துக்கள் அமெரிக்கரிடையே எழுந்தவையல்ல; 'கீல்ஸென்' என்பவரால் விதி முறையாகத் தொகுக்கப்பட்டவை அவை. இந்நாட்டில் அவை பற்றி அடிக்கடி பேசப்படுகின்றன. ஆனால் ஊன்றிய கருத்துடன் பேசப்படுவதில்லை;

நடைமுறையில் அவை அனுசரிக்கப்பட வேண்டிய அளவு முக்கியத்துவமுடையவை என்ற நோக்கத்துடன் அல்ல. உண்மையில் சகிப்புத்தன்மையோடு பணிவும் இழையோடுகிறது என்று மக்கள் நினைக்கிறார்கள். இது சாலவும் பொறுத்தமென்பதில் ஐயமில்லை.

எனினும் பரஸ்பர சகிப்புத்தன்மைக்கு ஐயப்பாடும் அறிவியல் அச்சமும் அவசியமே என்பதை உணர்வது பயனற்றதல்லவென நான் நினைக்கவில்லை. அறியாமை ஒன்றுதான் நம்மைப் பணிவுடையோராக்குகிறது என்றும், நாம் அறிவு வரம்பினுள் இன்னும் புலனாகாமல் இருப்பவை குறித்து நமக்கு அறிவூட்டுவதும் அதுவே என்றும் நான் நம்புகிறேன். ஒருவகையில் நம் அறியாமையைக் குறித்து ஏக்கம் கொள்வது விவேகமேயாகும். ஆனால் விஷயமறிந்தவர்களின் அறியாமையை அண்டுவதால்தான் பயனுண்டே தவிர இன்னும் இருளிலேயே உழல்பவர்களின் அறியாமையை அணுகுவதில் அர்த்தமில்லை.

# இரண்டாவது பகுதி

## 9

## புண்பட்ட ஆன்மாக்கள்

அடுத்த மூன்று அத்தியாயங்களையும் நான் ஒரே கட்டுக் கோப்புக்கு உட்படுத்த விரும்புகிறேன். ஏனெனில், புலனாகும் புறச் சின்னங்களால் அவை சுட்டிக் காட்டப்படுகின்றபோதிலும் ஒரு பாரமார்த்திகமான பொருள் அவற்றில் சுரந்து நிற்கிறது. பொதுவாக யாரும் அறியாத வகையிலும், எவர் கவனத்தையும் ஈர்க்க முடியாத அளவுக்கு மிகச் சாதாரணமான முறையிலும் மறைந்து கிடக்கும் ஓர் உள் உணர்ச்சியை அவை குறிக்கின்றன. கிறிஸ்தவ சமயப் பற்றிலிருந்து பிறந்த இந்த உணர்ச்சி; மக்களின் அடிமனத்தில் எப்போதோ பதிந்த வேத நூலைப்பற்றிய நினைவின் பணிவான குரலே இது என எனக்குத் தோன்றுகிறது. தற்கால வாழ்க்கை முறையைக் கவிந்து கொண்டிருக்கும் வன்முறை, இரக்கமின்மை ஆகியவற்றாலாகிய திரைக்குப் பின்னால், இந்நாட்டினரின் ஆத்மாவின் ஆழத்தில் நுட்பமான இந்தப் பழைய கிறிஸ்தவ தர்மத்தின் சாயை படிந்திருப்பதாகவே நினைக்கிறேன். இதையொட்டி என் முதற் சிந்தனைகளை "புண்பட்ட ஆன்மாக்கள் நாங்கள்" என்ற தலைப்பில் தொகுப்பது பொருந்தும். உள்ளார்ந்த மரியாதையும் அன்பும் நான் பாராட்டும் ஓர் அமெரிக்கப் பெருமகனார் ஒருவரால் பல வருடங்களுக்கு முன் என்னிடம் கூறப்பட்ட இச்செம்மொழிகள் பசுமரத்தாணி போல் என் மனத்தில் பதிந்துவிட்டன. முன்னோர் அனுபவிக்க நேர்ந்த இன்னல்களையும் துயரங்களையும் குறித்துக் கூறப்பட்டவை இவை. வெறுப்புக்காளாகித் துன்புறுத்தப்பட்டனர் அவர்கள்; தங்கள் சந்ததியினருக்கு ஆன்மீகப் பிதுரார்ஜிதமாக அவர்கள் விட்டுச் சென்ற அந்தத் துயர நினைவையே இவ்வார்த்தைகள் சுட்டுகின்றன. இன்றைய அமெரிக்கரின்

முன்னோர்கள் தங்கள் மத நம்பிக்கைகள் காரணமாகத் துரத்தி வேட்டையாடப்பட்டனர்; நம் நாட்டு மக்கள் இனத்தினாலேயே திரஸ்கரிக்கப்பட்டவர்கள் அவர்கள்; அல்லது அவதியினாலும் ஏழ்மையினாலும் அவர்கள் சிறுமைக்கு இலக்கானார்கள் என்பவற்றையெல்லாம் அந்த அருமொழிகள் ஞாபக மூட்டுகின்றன.

இந்தச் சந்தர்ப்பத்தில், இந்நாட்டின்வாழ்வில் குடியேற்ற நிலைமை வாக்கிய அடிப்படை அம்சத்தின் மறைபொருளை நாம் வாசித்துணரவியலுமென நினைக்கிறேன். ஒவ்வோர் ஆண்டும் ஒவ்வொரு நாளும் ஏராளமான ஆடவரும் பெண்டிரும் உலகின் எல்லாப் பகுதிகளிலுமிருந்தும் அமெரிக்காவுக்கு வந்த வண்ணமாக இருக்கின்றனர். எல்லாவிதக் கலாசார மரபுகளையும் சார்ந்த இவர்கள், கீழ்த்திசை நாடுகளில் நிலவிய தீநெறியின் கொடுமைகளாலும், ஏழ்மையாலும் இடுப்பொடிந்தவர்களாக இங்கு வந்து குழுமுகின்றனர். தங்களிடம் எஞ்சியுள்ள சக்தி முழுவதையும் தங்களை ஏற்கும் வாய்ப்புமிக்க இந்நாட்டின் பொதுப்பணியில் ஈடுபடுத்தப் புகுகிறார்கள். தாங்கள் அனுபவித்த அல்லல்களைத் தங்கள் குழந்தைகளிடம் கூறி நினைவிலிருத்துவரெனினும் தங்கள் புதிய தேசிய உணர்ச்சியின் விளைவான இளமைத் துடிப்புமிக்க ஆற்றல், நம்பிக்கை, நடவடிக்கைகள் ஆகியவற்றில் பங்கு கொள்ள விழைகிறார்கள். சுருங்கக் கூறின், இன்ப நாட்டத்தில் அவர்கள் விழைபவர்களாவர்.

இவ்வாறாக புதுப்புதுத் தலைமுறைகள் இங்கு இடையறாது குடியேறுகின்றன. இந்த முதல் தலைமுறையினரையும், அடிநாளில் இங்கு முதன் முதலில் குடியேறிய மக்களையும் சமூகவியல் அடிப்படையிலிருந்து கருதிப் பார்க்கும்போது, பல துரதிருஷ்டசாலிகள் பட்ட சிரமங்களும், விடுத்த கண்ணீரும் தான் இந்தப் புதிய உலகை வளப்படுத்தின, இன்னமும் இடையின்றித் தொடரும் இவை இப்புத்துலகாம் அமெரிக்காவின் மகோன்னத நிலைமைக்கு அடிகோலுகின்றன என்றே கூறலாம்.

மனிதகுலக் குழந்தைகளின் இகவாழ்வைப் பொறுத்தவரையில் இக்கண்ணீர் விழலாவதில்லை என்பதே தேர்ந்த முடிவு. இந்நாட்டின் தனிச் சிறப்புக்குச் சான்று இது என்



பதே என் கருத்து. இதன் செல்வம், செல்வாக்குக்குப் பின் மறைந்துள்ள மர்மமும் இதுவேயாம். துன்புறுத்தலுக்காளாகிய துரதிருஷ்டசாலிகள் அனுபவித்த அல்லல்களும், பெருக்கிய கண்ணீரும் மனித விதிகதியை மேம்படுத்தி, வாழ்க்கையைச் சகிக்கக் கூடியதாக்குவதற்கான இடையறாத முயற்சியாகப் பரிணமிக்கின்றன; வருங்கால நலனுக்கு நம்பிக்கையூட்டுவதாகவும் ஆக்கப்பணியாகவும் அவை உருமாறிவிடுகின்றன.

ஏழை எளியோர் அனுபவிக்க நேர்ந்த அல்லல்கள் இவ்வாறு புதுப் பலமாகவும் புது நம்பிக்கையாகவும் உருமாறியதிலிருந்து நாம் அறிவதென்ன?—கிறிஸ்தவ தர்மம் லௌகிக, சமூக, அரசியல் துறைகளிலும் ஊடுருவிச் செயல்படுத்துவதன் பயனே இது என்பதன்றி வேறென்ன பொருள் கொள்ளமுடியும்? கிறிஸ்தவ வேதநூலின் நிழலிலன்றி இத்தகைய மாற்றம் நடந்தேறுவதற்கில்லை; இவ்விதம் நடப்பதாலேயே மனித சரித்திரத்தில் இது பொருள் உடையதாகிறது.

* * *

இங்கு நான் விளக்கப் புகுந்திருக்கும் "புண்பட்ட ஆன்மாக்கள் நாங்கள்" என்னும் வாக்கியம், சமயத்தன்மையிலான புண்களையே குறிக்கின்றன என்பேன். ஏனெனில், கருணை கொள்ளும்படி மனித ஆன்மாவைத் தூண்டும் புண்கள் சமயச் சார்புடையதாகவே இருக்கமுடியும். அமெரிக்காவின் கூட்டு மனோபாவத்தில் வேரூன்றியுள்ள தயைக்கும் அனுதாபத்துக்கும், அவதிப்படுவோர் அனைவரையும் பொறுத்துத் தங்களுக்குப் பொறுப்பு உண்டு என்னும் உணர்வுக்கும் இவ்வாக்கியம் ஆழ்ந்ததொரு காரணமாக அமைகிறது என்றும் கருதுகிறேன்; சாதாரணச் செயல்முறைக்கும் சம்பாஷணைக்கும் காரணமாகவுள்ள உலகாயத நலன்கள், அனுகூலங்கள் ஆகியவற்றுக்காகக் கடுமையாகவும் கொடுமையான முறையிலும் நடக்கும் வேட்டையின் அகத்திணையில் புதைந்துள்ளன, இவ்வுணர்வுகளெல்லாம் வேதநூலைப் பற்றிப் பெரும்பாலும் நினைக்கவே நினைக்காத மக்களின் அடி மனத்தில் சூழ்ந்துள்ள இந்த வேதக்கனல் பற்றி யாரும் பேசுவதில்லை. ஆன்மாவின் அந்தரங்கவாழ்வில் ஆழப் பதிந்ததால், மனிதவியல்பின் சகலவித சாதாரண சுயநல விருப்பங்களாலும் அக்கறைகளாலும் இது மறைக்கப்பட்

டுள்ளது. எனினும் இது இருக்கத்தான் செய்கிறது. அதோ டன்றி, நாட்டின் மிகப் பெரும்பாலோரிடை சுறுசுறுப்பாகச் செயற்படவும் செய்கிறது. ஏழ்மை மண்டியுள்ள இவ்வுல கில் வேதநூல் போதித்த சகோதர அன்பின் சாயை மக்க ளிடை செயற்படுவதைவிட மதிப்புடையது வேறென்ன இருக்கமுடியும் ? அமெரிக்கரின் ரத்தத்தில் இந்த அன்பின் சாரம் கலந்துள்ளது என்பது குறித்து ஐயத்திற்கே இடமில்லை.

* * *

இந்நாட்டுக் குடியேற்றத்தைச் சார்ந்த ஆன்மீக முக்கியத் துவத்தைப் பற்றிச் சற்றுமுன் கூறினேன். நாட்டின் ஜனத் தொகை பெருக்கத்திற்கேற்றவாறு இந்தக் குடியேற்றத்தினுல் ஏற்படும் பிரச்னைகள் மேன்மேலும் கடினமாகலாம். எனினும் இங்குப் பயனுள்ள வாழ்வு நடத்தும்பொருட்டு வரவேற்கப் படும் ஏழை எளியோரின் குடியேற்றத்தினுல் கிட்டும் இணை யற்ற பலமும் சுறுசுறுப்பும் அமெரிக்க நாகரிகத்துக்கு ஆக்க மளிக்கும் வற்ருத ஊற்றுகளாகும்; அவை என்றென்றும் தொடர்ந்து வளமூட்டுமென நம்புவோம். ஏழைகளின் கஷ் டங்களும் கண்ணீருமாகிய இந்த ஊற்றுக்கள் அமெரிக்க வரழ் வியல் என்னும்வெள்ளத்தில் கலந்து மனிதசக்தியாக மலராது போகுமானுல் தன் ஆன்மீக மகிமைக்கு அவசியமானதொரு அம்சத்தை அமெரிக்கா இழந்ததாகிவிடும்.

இறுதியாக, நான் இதுவரை கூறியிருப்பவற்றிலிருந்து, இந்நாடு பெரும்பாலும் நடுத்தர மக்களே வசிக்கும் நாடாக இருப்பினும் 'பூர்ஷ்வா' அதாவது பண்பற்ற நடுத்தர மக்க ளாய் வாழும் நாடாக ஏன் இல்லை என்பது விளங்கியிருக்கும். இதற்கு சமூகவியலையொட்டி மற்ருெரு அடிப்படைக் காரண மும் உண்டு; அதைப் பற்றிப் பிறகு கூறுகிறேன். இப்போது நான் கூறுவது இப்பிரச்னையின் ஆன்மிக அம்சத்தைப் பொறுத்து மட்டுமே; அதாவது, இதன் ஆன்மாவிலுள்ள பழைய புண்ணைப் பற்றியேதான்.

இதனுல்தான் உங்களிடை கொள்ளைக்காரர்களும், தில்லு முல்லுக்காரர்களும், மற்றும் திரிசமம் செய்யும் வக்கீல்கள், பணக்காரர்கள் போன்ருேர் இருப்பினும் 'பூர்ஷ்வா' இனம் என்பது இல்லாதது இந்நாட்டின் நல்ல அதிருஷ்டமாகும்.

# 10

## புன்முறுவல் ஒரு சின்னம்

"கவிதையுணர்ச்சியற்ற வாழ்க்கை அவலமே" என்று சாற்றினுள் ஆவீலா ஞானப் பெண்மணி தெரீஸா. இந்த முதுரைக்குத் தனியொரு முக்கியத்துவத்தைக் காண்கிறேன். ஏனெனில், இந்நாட்டில் காட்சியளிக்கும் பொருளாதாரத் துறை அபிவிருத்திகள் அனைத்துக்கும் பின் ஒளியாக வாழ்க் கையை ஓரளவு பயனுற்றதாகச் செய்தற்பொருட்டு நிலை யான ஒரு பெருமுயற்சி நடக்கிறது என்பது என்கருத்து. ஆனுல் இன்றுள்ள நிலவரம் குறித்துப் பெரு நம்பிக்கையைக் குறிப்பதாக இம்முயற்சிக்குப் பொருளாகாது; நிலைமையை மாற்றியேயாக வேண்டும் என்பது உணரப்பட்டுள்ளதைத் தான் இது குறிக்கும்.

இது நிற்க, என் சொந்தச் சிந்தனைப் போக்கைத் தொடர்ந்து ஆராய்வோம்; இந்நிலையிலிருந்து நோக்கும் போது அமெரிக்கா உலகாயத வசப்பட்டிருப்பதாகவும், மனித தன்மையற்ற தொழில் நுட்ப மேலாதிக்கம் தலைவிரித்தாடுவ தாகவும் கூறப்படும் குற்றச்சாட்டுக்கள் அநீதமானவை யாகவே தோன்றுகின்றன. உலகின் பிற பகுதிகளைப் போலவே இங்கும் தொழிலியல் நாகரிகத்தினடிமையாக உலகாயதப் போக்குடைய தொழில் நுட்ப மேலாதிக்கத்துக்கு இரையாகச் சபலம் எழ இடமிருக்கிறது என்பது மெய்தான். மற்ற நாடுகளைவிட அதிக அளவில் தொழில் மயமாகியிருப் பது காரணமாக இந்தச் சபலத்துக்கு இலக்காகும் அபாயம் இந்நாட்டைப் பொறுத்தவரையில் அதிகமாக இருக்கிறது என்றே முதலெடுப்பில் தோன்றுகிறது. ஆனுல் உண்மை யிலோ, மனிதனுக்கு நன்மை பயப்பதும் நம் ஒவ்வொருவரிட மும் பொதிந்துள்ள பணிவு நிறைந்த மானுட மாண்பை உயர்த்துவதுமே அமெரிக்க முயற்சியின் நோக்கமாக அடிநாளி லிருந்தே இருந்து வந்திருப்பதால் இந்தச் சபலத்தின் மீது

வெற்றிகொள்ளும் வாய்ப்புக்கள் இங்குப் பல இருக்கின்றன எனலாம்.

செல்வம் செழித்து இன்நறவு மாந்தித் திளைக்கும் ஐரோப்பியப் 'பெரிய மனிதர்'கள் சிலர், வசதிகள் குறைந்த இந்நாட்டு மக்களில் பெரும்பாலோர் குளியல் தொட்டிகள், குளிர்ச்சிப் பெட்டிகள், பாத்திரம் கழுவும் கருவிகள், சலவை இயந்திரங்கள், சமையல் உபகரணங்கள், தூசி உறிஞ்சிகள் போன்ற பற்பல சாதனங்களைப் பயன்படுத்துவதை எள்ளி நகையாடுவது எளிதாக இருக்கலாம். (இவற்றை நையாண்டி செய்யும் இந்த ஐரோப்பியர்களே இந்தச் சாதனங்களை இயன்ற அளவு விரைவாக வாங்க முற்படுகின்றனர் என்பதும் இங்குக் கவனத்திற்குரியது!) உண்மையில் இந்த உபகரணங்கள் அனைத்தும் பொதுமக்கள் சமுதாயத்தின் வாழ்க்கைத் துறையிலும் பெருஞ்சுமைகளைக் குறைப்பதற்கே பெரிதும் பயன்படுபவையாகும்; அன்றாட வாழ்க்கையிலுள்ள அலுப்பூட்டும் அலுவல்களுக்கு அடிமைப்பட்டுக் கிடக்கும் மனிதனை விடுவிப்பதற்கே இவையனைத்தும் படைக்கப்பட்டுள்ளன எனலாம். மேலும், வாச வசதியைப் பொறுத்த அபிவிருத்திகளெல்லாம் மனிதனுக்கும், அவனுடைய குடும்ப வாழ்க்கைக்கும் இன்னும் தரமான ஒழுக்கச் சூழ்நிலையை இவை தோற்றுவிக்கின்றன. பொதுவாக, பெரும்பாலான மக்களைப் பொறுத்த அபிவிருத்திகள் அனைத்துமே மனிதனின் உள் மனத்தில் திரும்பவும் சுதந்திர உணர்வொன்றைத் தூண்டும் தன்மையை உடையன என்று கூறலாம்.

உதாரணமாக, மலிவான விலைக்குக் கிடைக்கும் ஆடைகளைக் கொண்டே இங்குப் பெண்மணிகளால் நேர்த்தியாக உடுத்தி அழகுற இயல்கிறது. தம் உடை காரணமாக வெட்கித் தலைகுனிய நேராதிருப்பது பெண்டிருக்கு எவ்வளவு முக்கியம் என்பதைக் கூறத் தேவையில்லை—அழகுணர்ச்சி காரணமாக மட்டுமின்றி நெறியுணர்வைப் பொறுத்தும் இத்தகைய நேர்த்தி முக்கியத்துவம் பெறுகிறது.

வாழ்க்கை ஓரளவு செம்மையாக அமையவேண்டும் என்னும் ஆர்வத்தை அமெரிக்கர்களின் புன்சிரிப்பு நெட்டத் தெளிவாகப் புலப்படுத்தும்.

அமெரிக்க வீதிகளில் எண்ணிறந்த மலர்ந்த முகங்களை



நீங்கள் காணலாம். முன்பின் அறியாத அன்னேரின் இன்முகம் உங்களை அன்பு வெள்ளத்தில் ஆழ்த்துவது திண்ணம். இவ்வாறு அனைவரிடமும் பொலியும் பரிவில் பெரியதொரு பிரமையும் கலந்திருக்கிறது என்பது மெய்தான்; சமயச் சடங்கில் நமக்கு ஏற்படும் பிரமைக்கு ஒப்பாகும் எனலாம். சிறு நகரமொன்றில் பல் வைத்தியரொருவரிடம் நான் தொடர்பு கொண்டிருந்தேன். அந்த வைத்தியரிடம் பணியாற்றிய தாதிமார் புன்முறுவல் பூத்துச் சிகிச்சைக்கு வருவோர்பால் நம்பிக்கை யூட்டுவதில் செவ்வனே பண்பட்டிருப்பதைக் கண்டு அவர்கள் திகைத்து வியப்பது திண்ணம்.

இறுதியாக அத்தகைய இனிய புன்னகையும், தூய வெண்ணுடையும் துலங்கிக் காட்சியளிக்கும் தெய்வகன்னியோ போன்ற அம்மங்கையர்க்கிடையே உயிர் போவதும் பேரின்பமேயெனவும் தோன்றும். மரண பயம் குறித்துக் கவலையே எழாது. "வீணுகப் பீதியுற்று நடுக்குறுதீர்கள்; மரணம் அப்படி ஒன்றும் பெரிய விஷயமல்ல. உடலைத் தளர்த்தி ஓய்வு கொள்ளுங்கள். பின்னர் மரணச் சடங்கு விடுதியின் மாசு மருவற்ற தூய்மையையும், ஆனந்தத்தையும் நீங்கள் அனுபவிப்பது உறுதி. உங்கள் சடலத்தைச் சுற்றி நண்பர்கள் நின்றவாறு அளவளாவுவதை நீங்கள் கேட்கலாம்" என்றெல்லாம் அவர்கள் கூறுவதைப் போலத் தோன்றியது—இறுதியில்; மரணம் பற்றிய கிறிஸ்தவக் கருத்து என் மனத்திலிருந்து அகலாதிருக்கும் பொருட்டு அங்கிருந்து வந்துவிட்டேன்.

* * *

மற்ருெரு சந்தர்ப்பத்தின் ஞாபகமும் வருகிறது : 1940 - இல் வாஷிங்டனில் நான் இருந்தபோது ஃபிரான்சின் மீது ஜெர்மானியர் படையெடுப்பு பற்றிய முதற்செய்தி வந்தது. அதனுல் சொந்தப் பிரச்னைகள் சுமையாகக் குவிந்து தனிமையில் தவித்துக் கவலையில் மூழ்கியிருந்த சமயம் அது. இம்மனவேதனைக்கிடையே ஊன் அருந்த ஒரு சிறிய உண்டிச்சாலைக்குள் சென்றேன். நான் முன்பின் அறியாத ஒரு பெண்மணி அங்கே எனக்கு உண்டி பரிமாறும் போது, அமெரிக்க மக்களுக்கு வழக்கமான இனிய புன்னகையுடன் என்னை உபசரித்தாள். அந்தப் பரிவுத் தோற்றம் ஒரு வெளிவேஷமே என்று

லும் அதில் மன ஆறுதல் கண்டேன். அது ஒருபண்பின் அறி குறி மட்டுமேயன்றி ஆழ்ந்த அன்புணர்ச்சியின் வெளிப்பா டென்று என்பதை நான் நன்கறிவேன்.

திடுமென அந்த புறச்சின்னத்தின் பொருளைப் புரிந்து கொண்டேன். 'பொதுவான மனித குல முன்னேற்றத்தில் நாமும் பங்குகொண்டுள்ளோம், அனைவரும் சகோதரரே' என்ற பொதுவான, அடிப்படையான, ஆழமான உணர்வு இந் நாடெங்கிலும் நிலவுகிறது; அதுவே இந்தப் புன்னகைக்கு ஆதாரப்பான்மை என்பதைத் தெரிந்து கொண்டேன். தைரி யம் குன்றி, அனாதையாகி விட்டோம் என்று அவதிப்படுவது வாழ்க்கையில் விளையும் வெறும் ஒரு சிறு சம்பவமே என்பதை உணர்ந்தேன். வாழ்க்கையென்பது நிராசையான ஒன்றன்று என்று கருதக்கூடிய வகையில் அந்நாள் எனக்கு உதவிய அந்தப் பெண்மணிக்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக் கிறேன்.

அமெரிக்கரின் வெளிப்படையான அந்த இன்முறுவலின் ஆழத்தில், மனிதனிடம் அனுதாபமும், வாழ்க்கை ஓரளவா வது இனிது அமைய வேண்டும் என்ற விருப்பமும் விரவியுள்ளன—இந்த உணர்ச்சி கிறித்தவ அறநூல் போதனை யின் விளைவே எனலாம். நவீன நாகரிகத்தின் இயந்திரகதி யின் நிர்ப்பந்தத்துக்கு இரையாக மறுக்கும் மனித ஆத்மாவின் முறைமுகப் பரிகாரத்தின் அறிகுறியாகவே இந்தப் புன்னகை யைக் கருத வேண்டும்.

# 11

## அமெரிக்க யாத்திரை

இந்நாட்டில் விசித்திரமானதொரு முரண்பாட்டைக் காணலாம். உலகினிடமும் அது அளிக்கும் நல்வாய்ப்புக்களி லும் அமெரிக்கரைப் போல் ஈடுபாடு உடையவர்கள் வேறில்லை; உலகில் உழைத்து, அதனை உருமாற்ற விழைவதில் வெறும் இன்ப நுகர்ச்சிக்காகவன்றி அதனை அபிவிருத்தி செய்யவே அவர்கள் இவ்விதம் முற்படுகின்றனர் எனலாம்) அவர்களைப் போல் ஆர்வமுடையவர்கள் எவரும் கிடையாது. அன்றியும் அவர்களிடம் விந்தையான ஒரு பற்றற்ற தன்மை யின் அருமையையும் பார்க்கிறோம்.

கனவொன்றினுல் உந்தப்பட்டுப் புனித யாத்திரை யொன்றை மேற்கொண்டிருப்பவர்கள் போலவே அவர்கள் நம் நாட்டிலேயே நம்மைக் கருதுகிறார்கள். ஓரிடத்திலும் நிலைக்காமல் எப்போதும் ஓடியாடுபவர்கள் அவர்கள்—புதுப் புதுத் துறைகளில் நாட்டங்கொண்டு ஈடுபடுவதால் ஏற்படும் நஷ்டங்களைப் பற்றிச் சிறிதும் கருத்தில் கொள்ளார். போர் முடிந்த பிறகு அல்லல்களுக்கு இனி இடந்தரலாகாது என்ற நோக்கம் வளர்ந்து வந்தது உண்மையே எனினும் அமைதி யுற்ற வாழ்க்கையில் நிலைத்து விட்டார்கள் என்று கருதுவதற் கில்லை. அந்நிலை இன்னும் தொலைவில் தான் இருக்கிறது.

அங்கு மலிந்திருக்கும் சிறு மரவீடுகள், நான் குறிப்பிடும் ஆத்மிக திருஷ்டிக்கு அறிகுறியாய்த் திகழ்கின்றன. அந்த வீடுகள் சில ஆண்டுகளில் மறைந்துவிடும் சிற்றறைகள் போன்றவையே. "சொந்த நாட்டில் வசிப்பது போலன்றி ஏதோ கூடாரங்களில் தங்குபவர்கள் போல" என்று ஞானி யார்பால் கூறியது நினைவுக்கு வரும்.

தொண்ணூற்றொன்பது வருடங்களுக்குக் குத்தகைக்கு விடப்பட்ட மனையின் மீதே ராக்ஃபெல்லர் நிலயம் எழும்பி யுள்ளது என்பது நீங்கள் அறிந்ததே. எனவே, பாலைவனங்

களில் அமைந்துள்ள கூடாரங்களின் நிலையில்தான் விண்ணை முட்டி ஓங்கி நிற்கும் நியூயார்க் நகரக் கட்டடங்களும் உள்ளன; நெடுங்காலப் போக்கில் இவை மறைவதும் திண்ணமே. எகிப்து தேச பிரமிடுகளுடனும், அவற்றை எழுப்பிய ஃபாரோ மன்னர்களின் செருக்கோடும் ஒப்பிடும் போது இவை எம்மாத்திரம் ?

இப்போது நியூயார்க் எங்கிலும் பல வீடுகளை இடித்துத் தள்ளிப் புதிய புதிய கட்டடங்களை அமெரிக்கர்கள் நிர்மாணித்து வருகிறார்கள். எனவே, நியூயார்க் நகரம் மீண்டும் உருமாற்ற கட்டத்தில் உள்ளதெனலாம்.

நம் நிலைமையை உயர்த்திச் செம்மை படுத்திக் கொள்ள வேண்டுமென்பது பாய்ந்தோடும் காலத்தைச் சார்ந்ததென்றும், இங்கு நிலவும் அனைத்தின் மீதும் ஆணை செலுத்துவது காலமேயாகும் என்றும் கருதுவது வியவகாரரீதியில் விளக்கந் தருவதாகும். அந்தச் செம்மைப்படுத்தும் வகையையும் கால மாறுதலையும் வந்தித்து வழிபடும் பான்மை எழுதலும் கூடும். இதன் விளைவாக, வரன் முறைச் சிறப்பு ஏதொன்றின் மீதும் ஓர் அருவருப்பு எழுதலோடன்றியும் நிரந்தரமாய் அருள்புரியும் லோகாதீதமான ஒன்று இல்லவேயில்லை என்ற கருத்து உருவாதலும் கூடும்.

இது நான் இதுகாறும் குறிப்பிட்டுவந்துள்ள உன் திருஷ்டியின் சீரழிவையே குறிக்கும். ஆனாலோ, அமெரிக்கருடைய திருஷ்டியின் உண்மையான இயல்பு கிறிஸ்தவ தர்மத்துக்குரிய பற்றற்ற தன்மையைக் காட்டுவதாகவே நான் கருதுகிறேன். இவ்வுலகப் பொருள்கள் நிலையற்றவை என்னும் கிறிஸ்தவ சமயக் கருத்தையே அது பிரதிபலிப்பதாக நினைக்கிறேன்—மேலும் சிறப்பானவை தோன்ற வேண்டுமானால் இப்போதுள்ளவை மறைந்தேயாக வேண்டும் அல்லவா ? எனவே செம்மைப்படுத்துதல் நிலையற்ற தன்மை என்ற இவ்வுணர்வு கிறிஸ்தவ அறநூல் போதனையை ஆதாரமாகக் கொண்டு, லௌகிக நடவடிக்கைகளையும் அது ஊடுருவி நிற்கிறது என்பது தெளிவு.

# 12

## அமெரிக்கப் பணிவு

தன்னிடம் தான் மிகப் பெரிய மோட்டார் கார் இருக்கிறது, அல்லது தான் ஈடுபட்டிருக்கும் தொழில் துறைதான் உலகிலேயே மிகச் சிறந்தது என்றெல்லாம் பெருமையடித்துக் கொள்ளும் போக்குடையவன் அமெரிக்கன் என்னும் பொதுக் கருத்து முற்றிலும் தவறானது என்பது என்னுடைய அபிப்பிராயம். அமெரிக்க மாணவர்களுடன் நான் பழகியதிலிருந்து இதற்கு நேர் எதிரான இயல்புடையவர்கள் அவர்கள் என்பது எனக்குத் தெரியவந்துள்ளது. அவர்களுடைய பணிவுப் பான்மை என் மனத்தை மிகவும் கவர்ந்துள்ளது. ஒரு குறிப்பிட்ட துறையில் எல்லா நிபுணர்களின் பல்வேறு கருத்துக்களையும் அறியும் வரையில் தங்கள் சொந்த அபிப்பிராயத்துக்குச் சில சமயங்கள் அவர்கள் சொற்ப மதிப்பே அளித்தது என்னை ஆச்சரியப் படக்கூட வைத்திருக்கிறது.

என் சகாக்களுடன் ஏற்பட்ட அனுபவத்திலிருந்தும் இதே முடிவுக்குத்தான் வந்திருக்கிறேன். பிரின்ஸ்டனிலுள்ள பட்டதாரிப் பள்ளியில் என் தலையாய மாணாக்கர்களில் ஒருவராக ஒரு ஜெஸூயிட் பாதிரியார் இருந்தார். ஆரம்பத்தில் அவரைக் கண்டு அந்தப்பள்ளி ஆசிரியர்கள் எவ்வளவு பயந்தார்களோ, அதே அளவு பயம் அவர்களிடம் அவருக்கும் இருந்தது. 'தாமஸ் அக்வினஸ்' பற்றிய (மிகச் சிறந்ததொரு) ஆராய்ச்சியுரை எழுதி ஜெஸூயிட் பாதிரியாரொருவர் பிரின்ஸ்டன் பள்ளியில் தத்துவஞானத் துறையில் டாக்டர் பட்டம் பெற்றது அதுவே முதல் முறையென நினைக்கிறேன். அவருக்கும் என் ஆசிரியர்களுக்குமிடையே பரஸ்பர மரியாதை விரைவில் வளர்ந்தது. என்னுடைய நெருங்கிய நண்பர்களிலொருவரான ஒரு பேராசிரியர் ஒரு நாள் என்னிடம் கூறினார் : "உங்கள் ஜெஸூயிட் பாதிரியாரை எனக்கு மிகமிகப் பிடித்திருக்கிறது. அவருடன் பேசுவதில் மிகுந்த மகிழ்ச்சி

காண்கிறேன். அவருடைய சிந்தனைப் போக்கு உண்மை
யிலேயே அமெரிக்கருடையதைப் போன்று உள்ளது. எல்லாக்
கேள்விகளுக்கும் விடை தெரிந்தவராக அவர் தம்மைக் காட்
டிக் கொள்வதில்லை. "எனக்குத் தெரியாது" என்றும் அவரால்
கூறமுடிகிறது..."

தன்னிறைவிலும் எதையும் அடித்துக் கூறுவதிலும் உள்ள
அவநம்பிக்கை "அமெரிக்கரின் பொதுவான மனவியல்பு என்
பதை இறுதியில் உணர்ந்தேன். ஐரோப்பிய மக்களைப் பற்றிச்
சிறிதே அறிந்த இந்த நாட்டினர் சிலர், அவர்களைக் கடுமை
யான வெறுப்புடன் இகழ்வதை இன்றும் காணலாம். நான்
இந்தச் சொற்பொழிவுகளில் விளக்கும் என் சிந்தனைகள்
சரியானவையென்றால், இவ்வாறு கண்டிப்பதன் மூலம் இவர்
கள் (இத்தகையோரின் தொகை பெரும்பாலும் குறைந்து
வருகிறதென்றே நினைக்கிறேன்) அமெரிக்க இயல்புக்கு
விரோதமான மனப்போக்கையே காட்டுபவராவர். உண்மை
யில், வாழ்க்கை நிகழ்ச்சிகளிலும் பிரத்யட்ச நிலை குறித்தும்
அமெரிக்கரிடம் இயல்பான ஒரு பணிவைக் காண்கிறோம்—இது
உன்னதமான ஒழுக்க சீலத்துக்கும், வன்மை மிக்க ஆற்றலுக்
கும் சான்றாகும்.

உலகில் மலிந்துள்ள சிக்கல்களை உணர்ந்திருப்பதாலேயே
இத்தன்மை தோன்றுவதாகக் கருதுகிறேன். நம் கருத்துக்கு
எட்டாத வகையில் வாழ்க்கையின் போக்கு சலித்துக் கொண்
டிருப்பதும், நம் முடிவுகளை முடிந்த முடிவுகளாக்க முடியாத
படிக்கு நம் கண்ணுக்குப் புலனாகும் பிரத்யட்ச நிலையின்
பல்வேறு அம்சங்களும் இவ்வுணர்வுக்கு ஊற்றுக்கள் எனலாம்
எனவேதான் ஒரு விஷயத்தைக் குறித்து திடமான ஒரு முடி
வுக்கு வருமுன்பே விவேகமுள்ள எச்சரிக்கை தேவைப்படு
கிறது. திட்டம் பற்றிய வரைபடங்கள் இன்றியமையாததென
வற்புறுத்தப்படுகிறது. பூர்வாங்க நடவடிக்கைகளில் (ஐரோப்
பியர்களை எரிச்சலுடன் திகைக்கவைக்கும்) தாமதத்துக்கும்
இதுதான் காரணம். ஆனால் வேலையைத் தொடங்கிவிட்
டாலோ மிதமிஞ்சிய தைரியத்தையும் பார்க்கிறோம்; இடை
யறாத மாறுதல்களையும் புதுப்பித்தலையும், சரித்திரப் போக்குக்
கேற்ப இணங்கி கொடுக்கும் பான்மையையும் காண்கிறோம்.

பரிசோதனை முறையைக் கையாண்டு ஒரு செயலில் ஈடு



படும் இந்தப் பான்மை அமெரிக்கரின் பணிவுத் தன்மையைச்
சுட்டுவதாகும். முடிவெடுக்குமுன் சகல விவரங்களையும்,
எல்லாக் கருத்துக்களையும் திரட்டுவது இவ்வழிக்கு அவசியமா
கிறது—ஆனால் இவ்விதம் செய்யப்படும் முடிவுகூடத் தற்காலிக
மானதுதான்.

ஒரு கருத்து சரியாக இருக்குமானால் அதை அடையும்
பொருட்டு எண்ணற்ற தொல்லைகளுக்கு ஆளாகும் நிலைமை
தவிர்க்கப்பட்டு விடுகிறதெனக் கொள்ளலாம். (இதனால்
தான் சொந்தமான ஒரு முடிவைப் பின்பற்றி எதையும்
தொடங்குகிறார் ஃபிரெஞ்சுக்காரர்.) ஆனால் அம் முடிவு சரி
யானதாக இருப்பது அவசியம். அது தவறாக இருந்தாலோ
எல்லையில்லாத் தொல்லை ஏற்படும். ஆகவேதான் செயல் முறை
களிலே சித்தாந்தமாக ஒரு கொள்கையில் தக்க ஐயப்பாடு எழு
வது பொருத்தமே. பெரும்பாலும் புதிய உண்மைகளைக் கண்டு
பிடிப்பது புத்தியை மயக்குறுத்தும் நவீனத்தின் விளைவாக
யிருத்தல் கூடும். அவ்வுண்மைகள் இந்நவீனத்துக்கு இரையாக
வும் நேரலாம்.

இந் நாட்டில் லட்சியவாதத்தினால் எழும் ஐயப்பாடு,
பணிவுப் பான்மையின் விளைவே, உள்ளத்தை உள்ளவாறு
உணர்தல், அதை வளமுறச் செய்தல் இவற்றின் முன் பணிவு
எழுதல் இயல்பேயன்றோ? இக்கருத்து அநுபவ வாதத்தில்
பிறந்ததன்று.

எனினும் இதில் ஒரு குறைபாடும் உண்டு. வெறும்
அநுபவத்தால் தேர்ந்த முடிவுகள் மீது சார்புகொண்டு பாகு
பாடு செய்து பார்க்கும் நோக்கங்களின் மீது அச்சம் எழலாம்.
பகுத்தறிவின் விளைவாகத் தேர்ந்த புதுக்கருத்துக்களின்பால்
எழும் இத்தகைய அச்சம் பரவுமானால் அறிவியல் ஆக்கத்
துறையை இழிவுபடுத்தக் கூடும். உதாரணமாக, விஞ்ஞானத்
துறையில் ஆதாரபூர்வமான புதிய கண்டுபிடிப்புக்களுக்கு
ஊறுவிளைக்கக்கூடும்—ஏற்கனவே தேர்ந்து வந்த முடிவுகளைப்
புது முனைகளில் ஈடுபடுத்துவதைப் பற்றி இங்கு நான் கூற
வில்லை.

மனிதன் தன் வாழ்வை நடத்துவதற்கு அத்தியாவசிய
மானவையான பகுத்தறிந்து தேர்ந்து ஆழ்ந்து வேரூன்றிய
நம்பிக்கைகளுக்கும் இதனால் இழுக்கு நேரக்கூடும்.

முக்கியமாக, நீதி, சுதந்திரம், சமத்துவம், மனித உரிமை கள் ஆகிய சுதந்தர மக்களின் தார்மிக அடிப்படைகளெல்லாம் வெறும் உணர்ச்சி சம்பந்தப்பட்டவையாகவோ, தேசிய பண்பாடுகளாகவோ, அன்றி சூழ்நிலைக்கேற்ற மாறுதல்களா கவோ தான் ஆகுமேயல்லாமல் பகுத்தறிவு கொண்டு தேர்ந்து வந்த சுட்டுணர்வின் சிறப்புக்களாக மாட்டா. அப்போது இந்த தார்மிகக் கொள்கைகள் ஒவ்வொருபணியிலும் இயங்கும் அக ஆற்றலையிழந்து ஒன்றையொன்று ஆதரித்து அமைந்த உள்ளுறை அநுபவங்களாக மட்டும் நிற்கும். அன்றியும், எல்லோருக்கும் புரியும் வகையில் கருத்துப் பரிமாற்றத் தன்மையையும் இழந்துவிடும். மற்ற நாட்டினரின் மனத்தில் பதிவதற்கான சக்தியும் குன்றிவிடும். கருத்துக்களுக்கே உரித் தானது, பிறருக்கு ஒளி காட்டி, வழி காட்டி மனத்தைத் திருப்பும் சக்தி—அதுவும் அகன்று விடும்.

இந்தக் கட்டத்தில் மிக முக்கியமானதொரு விஷயம் பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். அதாவது மனிதர் களிடையே மெய்யான கருத்துப் பரிவர்த்தனைக்குத் தகுந்த தொரு கொள்கை—அறிவு முறையில் அமைந்த கருத்து வெளியீடு என்று இதனைக் கூறுவது இன்னும் பொருத்த மானது. அதுவும், சிறிதும் ஐயமற்ற ஒரு தத்துவ திருஷ்டி யும் இன்றியமையாதவை என்பதையே காட்டுகிறேன்.

ஏனெனில் கருத்துக்கள் வாயிலாகத்தான் மற்றவர்களு டன் நாம் தொடர்பு கொள்கிறோம். அன்றாட வாழ்க்கையில் நாம் சாதித்துள்ளவையும் கண்டுபிடித்துள்ளவையும் கருத்துக் கள் மூலமாகத்தான் பிறருக்கு மட்டுமின்றி நமக்கும் தெரிய வருகின்றன.

நான் இதுகாறும் கூறிவந்துள்ள அவநம்பிக்கையில், கோட்பாடுகளைப் பொறுத்து அளவுக்கதிகமான அடக்கத்தில்* பேரபாயம் இன்னொன்று உண்டு. அறிவுத் துறையில் தனித்து நிற்க நேரக்கூடிய ஆபத்தைத்தான் கூறுகிறேன். அமெரிக்கா வின் பிரத்யட்ச நிலையையும், அமெரிக்க மக்களின் அபார

* இன்னொரு தீங்குக்கும் இந்தப் பணிவுப்பான்மை ஓரளவு காரணமென எனக்குத் தோன்றுகிறது. ஒரு துறையில் தனி வல்லமை உள்ளவர்களுக்கு மட்டுமே சிந்திக்க உரிமை உண்டு



சாதனைகளையும் பிறருக்கு எட்டவொட்டாத நிலை ஏற்பட்டு விடக்கூடும் என்பதைத்தான் குறிப்பிடுகிறேன். உண்மையான நடைமுறைக்கும், லட்சியவாதத்திற்கும், தத்துவத்திற்கு மிடையே யாதொரு தொடர்புமின்றி சுவர்களை எழுப்புவது போலாகுமன்றோ ?

என்னும் கருத்தைத்தான் குறிப்பிடுகிறேன். (ஜெர்மனியிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டு, மேன்மேலும் பரவிவரும்) இக்கருத்தின் படி, தம் துறைக்கு அப்பாற்பட்டதான எதையும் அறிந்துகொள்ள எத்தனைக்கெத்தனை அந்த நிபுணர்கள் விரும்புவதில்லையோ அந்த அளவுக்கு அவர்கள் அதிகத் திறமை உள்ளவர்கள், அதிக நம் பிக்கைக்கு உரியவர்கள் என்று முடிவு செய்யப்படுகிறது !)

## 13

# தெளிவான தத்துவசாத்திர நோக்கு

சிறிதும் ஐயமற்று விளக்கும் ஒரு தத்துவ திருஷ்டியின் தேவையைத் தனிப்பொருள் வாய்ந்த ஓர் உதாரணத்தைக் கொண்டு விளக்க முற்படுகிறேன். சமூகத்துறையில் இந் நாட்டின் சாதனைகள், கண்டுபிடிப்புக்கள் ஆகியவற்றைச் சார்ந்த உதாரணமே அது. மிக்க சரித்திர முக்கியத்துவம் பெற்ற பெருநிகழ்ச்சியொன்றை—வரையறுத்துப் பாகுபாடு செய்யாத அமெரிக்க முறை' அடைந்துள்ள அபார வெற்றியையே கூறுகிறேன். அதாவது, கடந்த அரை நூற்றாண்டில் இந்நாட்டின் பொருளாதார அமைப்பில் ஏற்பட்டுள்ள மாறுதலைத்தான் குறிப்பிடுகிறேன்.

ஐரோப்பாவிலிருந்து வரன்முறையாக இந்நாடு பெற்ற தொழில் துறையில் ஓங்கிவந்த முறை இன்று அடையாளமே தெரியாத வகையில் இங்கு மாறிவிட்டது. புதிய பொருளாதார அமைப்புக்கள் அதன் இடத்தைப் பிடித்துக்கொண்டு விட்டன. நிலையற்ற தன்மையில் இன்னமும் அவை உருவாகிக் கொண்டிருக்கும் கட்டத்திலேயே இருப்பினும் முதலாளித் துவத்தையும், ஸோஷலிஸத்தையும் கடந்தகாலக் கொள்கைகளாகிவிட்டன. பத்தொன்பதாவது நூற்றாண்டில் இருந்த சமூகச் சூழ்நிலை, பொது மனப்போக்கு ஆகியவற்றுக்கு முற்றிலும் மாறான முறையில் சுயேச்சையான தொழில் முயற்சியும், தனியார் உடைமைத் தத்துவமும் இன்று செயற்படுகின்றன.

இது சம்பந்தமாக, மிக்க முக்கியத்துவம் வாய்ந்த இரு விஷயங்களைக் குறிப்பிடவேண்டும் : கீட்டுக் கோப்பான ரீதியில் தொழிலாளர் வர்க்கம் வளம்பெற்றது ஒன்று; தொழில், நிர்வாகத் துறைகள் சிறந்துவரும் வகை இன்னொன்று.

* * *



ஒழுங்கு முறையில் உருவாகிய பாட்டாளிவர்க்கத்தின் வளர்ச்சியைப் பற்றி முதலில் கருதுவோம்.

தொழிற்புரட்சியை யொட்டித் துயர் மலிந்திருந்ததில் ஐரோப்பாவில் தொழிலாளரின் நிலை இருந்ததுபோலத் தாழ்வாகத்தான் நூறாண்டுகளுக்கு முன்பு மட்டுமின்றி இந்த நூற்றாண்டின் ஆரம்பத்திலும் அமெரிக்கப் பாட்டாளிகளின் நிலையும் இருந்தது. பாட்டாளி வர்க்கத்தின் கொடுமைநிலை பற்றிய கார்ல் மார்க்ஸின் வர்ணனை அதற்குப் பொருத்தமாக இருந்தது. வீணில் தியாகம் செய்யப்பட நேர்ந்தவர்களும், இன்று மறக்கப்பட்டு விட்டவர்களுமான தொழிற்சங்கமுறை ஸ்தாபகர்கள் பல இன்னல்களுக்கு இலக்காகி இடிந்தனர்; சில சமயங்களில் அவர்களுடைய சக ஊழியர்களே ஊறு விளைத்தனர்.

உழைப்பாளிகள் சீரான வகையில் ஒன்றுதிரள்வதை முளையிலேயே நசுக்கிவிடுவதற்கு எல்லா வகையான வரன்முறைகளுக்கும் ஈவிரக்கமற்ற கொடுமைகளுக்கும் உள்ளான போராட்டங்கள் இந்த இருபதாவது நூற்றாண்டின் ஆரம்ப வருடங்களிலும் தொடர்ந்தும் நடந்துகொண்டிருந்தன; தன்னலமற்ற தைரியமே, அந்தக் கடும் போராட்டங்களில் வெற்றி கைகூடியது. (நெடுநாள் நீடித்து இறுதியில் வெற்றியுடன் முடிந்த நிலக்கரித் தொழிலாளர் வேலை நிறுத்தத்தை யொட்டி 1903-இல் தமது பிரசித்தமான 'தெய்விக உரிமை'க் கடிதத்தை ஜார்ஜ் எஃப் பேயர்[1] எழுதினர்; 1914-இல் லட்லோ படுகொலை[2] நடந்தது.)

---

1. "கிளர்ச்சி புரியும் தொழிலாளர் தலைவர்களாலன்றி ஆண்டவனின் எல்லையற்ற அறிவருளால் இந்நாட்டின் ஆஸ்தி நலன்களை ஆளும் பொறுப்புப் பெற்றுள்ள கிறிஸ்தவ தர்மவழித் தோன்றல்களாலேயே உழைப்பாளியின் உரிமையும் நலன்களும் பேணிக் காக்கப்பெறும்" என்று ஃபிலடெல்ஃபியா அண்ட் ரீடிங் கம்பெனியின் அதிபரான 'பேர்' அக்கடிதத்தில் கூறினார்.

இறுதியில் ஜனாதிபதி தியோடர் ரூஸ்வெல்ட் தலையிட்டு சுரங்கச் சொந்தக்காரர்களை விட்டுக் கொடுக்க வைத்ததாலேயே அந்த வேலை நிறுத்தம் வெற்றி பெற்றது.

2. கலரடோ மாவட்டத்தைச் சேர்ந்த லட்லோ சுரங்கங்களில் வேலை நிறுத்தமொன்று மூண்டபோது "தொழிற்சங்கத்துடன்

*சமூகநலச் சட்டங்களை இயற்றும் துறையில் ஏற்பட்ட முன்னேற்றமும்—தொழிலாளருக்கு அடிப்படையான முக்கியத்துவம் உடைய பல உரிமைகளை வழங்கிய இச்சட்டங்களின் சிகரமெனலாம், 1935-இல் இயற்றப்பட்ட தேசியத் தொழிலுறவுகள் சட்டத்தை—தொழிலாளரும் அவர்களுடைய*

---

தம்மாலியன்ற எல்லா வழிகளிலும் நிர்வாகத்தினர் போராடினர். துப்புத் துலக்கும் பால்ட்வின்—ஃபெல்ட்ஸ் ஏஜென்ஸியைச் சேர்ந்தோரைத் தருவித்து, தொழிலாளர்கள் மீது அவர்களை ஏவிவிட்டனர்; கவசமோட்டாரொன்றில் அவர்கள் ஏறிக்கொண்டு, கண்ணிற்பட்ட வேலை நிறுத்தக்காரர்களைச் சுட்டுத்தள்ளினர். தொழிலாளர் தலைவர்கள் மீது தடையுத்தரவுகளும் குற்றச்சாட்டுகளும் பொழிய வைத்தனர். கம்பெனிக்குச் சொந்தமான விடுதிகளிலிருந்து தொழிலாளர்களையும், அவர்களுடைய குடும்பங்களையும் வெளியேற்றிக் கலராடோவின் கடுங்குளிரில் விறைக்கவைத்தனர். இந்த நிர்ப்பந்த வெளியேற்றத்தைச் சமாளிக்கும் பொருட்டுக் கூடாரங்களைத் தொழிற்சங்கம் அமைத்தது; அவற்றில் நூற்றுக்கணக்கான தொழிலாளர் குடும்பங்கள் அடைக்கலம் பெற்றன.

''நெருக்கடி முற்றவே, மேஜர் பாட்ரிக் ஹாம்ராக் என்பவரைத் தலைவராகக்கொண்ட படையொன்று வரவழைக்கப்பட்டது. 1914-ம் ஆண்டு ஏப்ரல் 20-ம் தேதியன்று அதிகாலையில் அந்தக் கூடாரவாசிகள் காலையுணவு கொள்ளவிருந்த தருணத்தில் அந்தப்படை அவர்களைத் தாக்கியது. மறுநாளைய 'நியூயார்க் டைம்ஸ்' பத்திரிகை அதுபற்றிப் பின்வருமாறு கூறியது : ''தொழில்துறைப் போராட்டச் சரித்திரத்திலேயே ஈடற்ற பயங்கரங்கள் நிகழ்ந்துள்ளன இங்கே. கொள்ளி வைக்கப்பட்டதால் மலைபோலச் சாம்பல் குவிந்துள்ள லட்லோ முகாமில், துப்பாக்கிக் குண்டுகளிலிருந்து தங்களைக் காத்துக்கொள்ளப் பதுங்கிய குழிகளில் பெண்டிரும் பாலரும் தீ வாய்ப்பட்டு விட்டிற் பூச்சிகளைப்போலக் கூட்டம் கூட்டமாக மடிந்தனர். இன்று பிற்பகல் தோண்டப்பட்ட இத்தகைய குழிகளிலொன்றில் பத்து பாலர், இரு பெண்டிரின் சடலங்கள் காணப்பட்டன.

அமெரிக்கத் தொழிலாளர் இயக்கத்தின் பொருட்டு இன்னும் அநேகரும் உயிரிழந்துள்ளனர். பொய்க்குற்றம் சுமத்தப்பட்டு 1887-இல் சிகாகோவில் தூக்கிலிடப்பட்ட ஹேமார்க்கெட் தியாகிகள், 1874-ஆம் ஆண்டு ஜனவரி 13-ஆம் தேதியன்று நியூயார்க்



*தலைவர்களும் இணங்கிக் கொடுக்க முற்பட்டதும் இந்த மாறுதல் ஏற்படச் செய்வதில் முக்கியப் பங்கு வகித்தன. இப்போதோ, அமெரிக்கத் தொழிலாளரின் சராசரி வாழ்க்கைத் தரம் உலகிலேயே உயர்ந்ததாக இருக்கிறது; அவர்களில் பெரும்பாலோர் கண்ணியமாக வாழ வகை செய்கிறது அது.*

*சமூக நல அபிவிருத்திக்காகச் சொந்த நிலையங்கள், ஆஸ்பத்திரிகள், பத்திரிகைகள் — ரேடியோ நிலையங்கள் போன்ற வெகுஜனத் தொடர்புச் சாதனங்கள் முதலியவற்றை நிர்வகிக்குமளவுக்கு அமெரிக்கத் தொழிலாளர் இயக்கம் இன்று வலிமை பெற்றுவிட்டது. பெரிய கூட்டு ஸ்தாபனங்களுக்குச் சமமான பலமும், அவற்றை வழிக்குக் கொண்டு வர முடியுமென்ற திடநம்பிக்கையும் உடையதாக அது உள்ளது. மேலும், உற்பத்திக்கு ஊறு விளைக்காத வகையிலேயே மேம்பட்ட ஊழியநிலைகளைப் பெற முயல்வது தான் அதன் மேலிடத்தாரின் கொள்கையாக இருக்கிறது. ஏனென்றால், அதன் பொறுப்புக்களும் மேன்மேலும் அதிகரித்து வருவதாலும், தொழிலாளர் ஊதியத்தில் தானாகப் பிடிக்கப்படும் தொகையே அதற்கு ஆதாரமாகையாலும் பெருந்தொழில் வளர்ந்தோங்கப் பாட்டாளி வர்க்கம் எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியமாகப் பெருந் தொழில்களும் பாட்டாளி வர்க்க பலத்தைப் பொறுத்து உள்ளதாகக் காண்கிறது. அமெரிக்கத் தொழிலாளர் இயக்கத்தில் பல உட்பூசல்களும் மோதல்களும் உள்ளன என்பது உண்மைதான் சில தொழிற்சங்கங்களில் கடினமான துப்புரவு வேலை இன்னும் முடிவுறவில்லை என்பதும் மெய்தான். பல்கிப் படர்ந்து பெரிதாவதாலும், ஸ்தாபன ரீதியில் அமைவதாலும் சாதாரணமாக ஏற்படும்*

---

நகரிலுள்ள டாம்ப்கின்ஸ் சதுக்கத்தில் மூண்ட கலவரத்தில் குதிரைப் போலீஸாரால் மிதிபட்டு இறந்த பாலர், பெண்டிர் அடங்கலான பலர், 1915-இல் ஸால்ட் லேக் ஸிடியில் அநியாயக் குற்றச்சாட்டுக்கு ஆளாகி சுடப்பட்ட ஜோஹில்—பல பாட்டுகளைப் புனைந்தவரான இவரைப்பற்றியும் பாட்டு இயற்றப்பட்டதோடு, இவருடைய அஸ்தியை இந்நாட்டிலும் அயல்நாடுகளிலும் அநேக இடங்களில் சிறிய உறையிலிட்டுத் தூவினர்—இப்படிப் பலரை உதாரணங்களாகக் கூறலாம்.

குறைபாடுகள் அதிலும் தோன்றக்கூடும் என்பதும் வாஸ்த
வமே. இருப்பினும், இடையருமல் வளர்ந்துவரும் அதன் பல
மும் பொறுப்பு உணர்ச்சியும், நாகரிகத்தையொட்டியபொதுப்
பிரச்னைகளில் அதற்கு ஏற்பட்டுவரும் அக்கறையும் சேர்ந்து
இந்நாட்டின் சரித்திரத்தில் மட்டுமின்றி மனிதகுலத்தின் சரித்
திரத்திலேயே அதனை மிக முக்கிய சக்திகளிலொன்ருக்கும்
நாள் அதிதூரத்திலில்லையென நாம் திடமாகக் கொள்ளலாம்.

* * *

தொழில், நிர்வாகத் துறைகளின் வளர்ச்சியை இப்போது
ஆராய்வோம். அமெரிக்கப் பாட்டாளி வர்க்கத்தின் துரித
மான வெற்றியின் முன்னேற்றத்தைவிட இது ஒருவகையில்
அதிக ஆச்சரியம் அளிக்கக்கூடியது. ஏனெனில், முதலாளி
வர்க்க அமைப்பிலேயே மாற்றத்தைப் பொறுத்ததாகும் இது.
முற்றிலும் அமெரிக்க ரீதியிலான நிகழ்ச்சியே இதுவும். பெரும்
கூட்டு ஸ்தாபனங்கள் வளர்ந்தோங்கிய அதே சமயத்தில்
ஆழ்ந்த உள்மாற்றங்களுக்கும் அவை இலக்கானதுதான் இதில்
முக்கியமாகக் கவனம் பெறும் விஷயம். எனவேதான் 1951
இல் "கார்னிங் கண்ணுடித் தொழிற்சாலை" ஸ்தாபனத்திஞல்
கூட்டப்பட்ட மகாநாடொன்று பற்றி 'ஸெயின்ட் லூயி
போஸ்ட் டிஸ்பாட்ச்' என்னும் பத்திரிகையில் ரால்ஃப் காக்
லான் இவ்வாறு கூறினர் : "நான் இளைஞனுக இருந்தபோது
'உயிர்த்துடிப்பு அற்ற கூட்டு ஸ்தாபனம்' என்னும் பதம் சகஜ
மாக இருந்தது...என் வாழ்நாளிலேயே இவ்வகையில் பெரு
மாற்றத்தைக் கண்டுவிட்டேன். கூட்டு ஸ்தாபனங்கள் உயி
ரோட்டம் பெற்றுவிட்டதாகக் கூறமுடியுமோ முடியாதோ,
அறிவாற்றல் பெற்றுவிட்டன என்பது உறுதி."[1] கூட்டாக

1. தமது 'மகத்தான மாறுதல் (தி பிக் சேஞ்ச்) என்னும் புத்த
கத்தில் ஃப்ரெடெரிக் லூயி ஆலென் இவ்வாறு மேற்கோள் காட்டி
புள்ளார் : "அடால்ஃப் பெர்லி எழுதுகிருர் : 'பெரும் கூட்டு
ஸ்தாபனங்களுக்கு மனச்சாட்சி என்று ஒன்று உள்ளதாகவே, அவ்
வாறு இல்லாவிடினும் அரசாங்க மனச்சாட்சியின் கட்டளைகளை
அவை ஏற்பதாகவே தோன்றுகிறது. கூட்டுச் சக்திக்கு உட்பட
நேரும் தனி மனிதர்களால் தேவைப்பட்டபோது உரிமையாகப் பயன்



உருவாக்கப்பட்டு நிர்வகிக்கப்படும் இந்தப் பெரும் ஸ்தாபனங்
கள் இன்னமும் தங்கள் பங்குதார்களுக்கும் லாபம் சம்பாதித்
துத்தருவதில் ஆர்வம் உடையவையாக உள்ளன என்பது உண்
மைதான்.[1] ஆனுல் அதையே முழுமுதல் நோக்கமாகக்கொள்ள
வில்லை. ஏனெனில், தாங்கள் தரித்து நின்று உற்பத்தி செய்வ
தற்கும்கூட மேன்மேலும் அதிக அளவில் சமூக ஒற்றுமை
மனுேபாவமும், பொதுநலனில் அக்கறையும் கொள்வது அவ
சியம் என்பதை அவை உணர்ந்துள்ளன. எனவே, கிறிஸ்தவ
மரபையொட்டிய அன்பினுலன்றி, புத்தி பலம் வாய்ந்த சுய
நலத்தினுலும், வாழ்க்கையோட்டச் சாரத்தின் வளத்தைக்
கருதியும்தான் மனிதாம்சத்தின் அனுகூலம் பேரளவில் உண
ரப்பட்டு முக்கியத்துவம் பெறுகிறது; ஒரு குறிப்பிட்ட துறை
யில் ஒத்துழைப்போர் நலனில் மட்டுமின்றிப் பொதுமக்கள்

படுத்தப்படும் வகையில் சம்பிரதாயங்களாக உருப்பெறவேண்டும்
இந்த மனச்சாட்சி."

1. தொழில் ஸ்தாபனங்களின் நிர்வாகத்தின்மீது பங்குதார்
களின் உரிமை வரவரக் குறைந்து, லாபத்தைப் பங்கிட்டுக் கொள்
வோராகவே அவர்கள் மாறிவருகின்றனர். இது சம்பந்தமாக
'புதிய சமூகம்' (தி நியூ ஸொஸைடி) என்னும் தம் நூலில் பீடர்
ட்ரக்கர் கூறியுள்ளது குறிப்பிடத் தக்கது." முதலீட்டைப் பொறுத்த
வரையில் உடைமையை யொட்டிய உரிமை, அதாவது ஆட்டிப்
படைக்கும் உரிமை இருந்துதாஞகவேண்டும் என்பதில்லை. அடிமை
முறையின்கீழ் மனிதர்கள் விற்பது வாங்குவது என்ற முறைபற்றி
நாம் இன்று எப்படிக்கருதுகிருேமோ அப்படித்தான் பல மனிதர்கள்
உழைக்கும் உற்பத்தி ஸ்தபானங்களைப் பணத்துக்கு விற்கவும் வாங்
கவும் செய்யலாம் என்பது குறித்து வருங்காலம் கருதக்கூடும்."

பெரும் ஸ்தாபனங்களின் லாபத்தில் பங்குபெறப் பங்குதார்
களுக்கு உள்ள உரிமையும் வரையறுக்கப்பட்டுள்ளது. இது குறித்து
அடால்ஃப் பெர்லி கூறியிருப்பது கவனத்திற்குரியது :

"இப்போதுள்ளவையும், இனி ஏற்படக்கூடியவையுமானகூட்டு
ஸ்தாபனங்கள் தர்ம காரியங்களுக்கும் கல்விப் பணிக்கும் நன்
கொடைகள் அளிப்பதை அனுமதித்து 29 ராஜ்யங்கள் ஏற்கென
வேயே சட்டங்கள் இயற்றிவிட்டன. இவற்றிலொன்ருன 'நியூ
ஜெர்ஸி' சட்டம் சமீபத்தில் ஒரு வழக்குக்கு இலக்கானபோது ராஜ்ய

அனேவருடைய நலனிலும் அதிக அக்கறை காட்டப்படுகிறது'[1]
தங்கள் சொந்த நலனேவிடப் பொதுநலனில் கூட்டு ஸ்தாப
னங்கள் அதிக நாட்டம் காட்டும் நிலையை அடைந்து விட்ட
தாக நான்கருதுவதாக இதற்குப்பொருளல்ல; தங்கள்சொந்த
நலனுக்காகவே பொது நலனேயொட்டிய உயருரிமைகள் கருத்
தில் கொள்ளப்படவேண்டும் என்பதை உணரும் நிலையை
அவை எட்டி வருகின்றன என்றே கூறுகிறேன்.

அமெரிக்காவில் வெளிவந்த ''நிரந்தரப் புரட்சி'' எனும்
நூலை 'போர்சியூஸ்' எனும் சஞ்சிகையில் விளம்பரம் செய்த
போது அப்பத்திரிகை ஆசிரியர்கள் அதற்கு ''செல்வம்
செழித்த வியாபாரி மாண்டான்'' என்று தலையங்கம் தந்த
னர். இதன் பயனுக, ஒரே மனிதருடைய நிர்வாகத்துக்கு
மாருக ஒரு குழுவினர் நிர்வகிக்கும் சுயாட்சிச் சமூகங்களாகக்
கூட்டு ஸ்தாபனங்கள் உருவாகி வருகின்றன. இதனுல் அவற்
றில் ஏராள உட்சிக்கல்களும் கருத்துவேறுபாடுகளும் மலிந்த
தன் விளேவாக அவர்களிடம் புதியதோர் செயல்முறை தலே
யெடுத்து வருகிறது. மனித உறவுபற்றி நல்லறிவுபுகட்டுவதே
இச்செயல்முறை. குறிப்பான ஒரு தொழிலின் பல்வேறு பிரி
வுக்கும் உளவியல் தத்துவத்தை நடைமுறையில் கையாளு
மாறு அறிவுறுத்தி அவர்களிடை நல்லுணர்ச்சியை வளர்க்க
இவர்கள் வகை செய்து வருகிருர்கள்.[2]

---

உயர்நீதிமன்றம் அதைச் சந்தேகமற ஊர்ஜிதம் செய்தது. சமஷ்டிப்
பிரச்னே எதுவும் சம்பந்தப்படவில்லேயெனக்கூறி அமெரிக்க உயர்நீதி
மன்றமும் அப்பீலே நிராகரித்தது. தங்கள் லாபத்தில் ஒரு பங்கைப்
பங்குதார்களுக்குக் கொடுக்காமல் நிறுத்திவைத்துப் பள்ளிகள், கல்
லூரிகள், ஆஸ்பத்திரிகள், ஆராய்ச்சி போன்ற நற்பணிகளுக்கு
வழங்கத் தொழில் ஸ்தாபனங்களுக்கு நடைமுறையில் அரசாங்கம்
அனுமதித்திருக்கிறது.

*1.* மனிதர்களின் நலனில் அக்கறை காட்டும் இந்த உணர்ச்சி
தொழில்துறை யொன்றில் மிகத்தீவிரமாய் இயங்கி மூளேபலத்தையே
அவசியமற்றதாக்கிவிட்ட தெனலாம். ''இன்டர்நேஷனல் பிஸினஸ்
மெஷீன்ஸ் கார்ப்பொரேஷன்''தான் அந்தத் தொழில்துறை.

*2.* ஜெனரல் ராபர்ட் வுட் ஜான்ஸனுல் பிரதானமாக எழுதப்
பட்ட 'நவீனத் தொழிலுலகில் மனித உறவுகள்' (ஹ்யூமன் ரிலே



(ஒவ்வொரு கூட்டு ஸ்தாபனமும் பொருளாதார நிபுணர்
களே அமர்த்தியிருப்பதன் பயனுக) தனக்குத்தானேயும்,
ராஜ்ய, சமஷ்டிச் சட்டங்களுடன் இணேந்தும், அரசாங்க விதி
முறைகள், தூண்டுதல் காரணமாகவும் பெருமளவில் திட்ட
மிடும் வேலேகள் நடக்கின்றன.

---

ஷன்ஸ் இன் மாடர்ன் பிஸினஸ்) என்னும் வழிகாட்டி நூலிலிருந்து
இது சம்பந்தமாகச் சில வரிகளே மேற்கோள் காட்ட விரும்புகிறேன்.

''...ஊழியர் அனேவரும் மனிதர்களே...மனிதருக்குரிய இதய
மும் உள்ளமும் தான் அவர்களுக்கும் உள்ளன. மற்றவர்களே
அவர்கள் நேசிக்கிருர்கள். மற்றவர்களும் அவர்களே நேசிக்கிருர்
கள். உன்னத லட்சியங்கள் சில சமயங்களில் அவர்களேஊக்கி
உயர்த்துவதுபோலவே தீய சிந்தனேகளும் அவர்களேச் சில சமயங்
களில் தாழ்த்துகின்றன. எனவே சாதாரண வாழ்க்கை நடத்தும்
சாமானிய மக்களே அவர்களும் எனலாம்.

அவர்களில் பெரும்பாலோர் இவ்வுலகினிடமிருந்து பேரளவு
எதையும் எதிர்ப்பார்ப்பதில்லே; அடிப்படைத் தேவைகளே அவர்
களுக்கு இன்றியமையாதவை. தங்களே இயந்திரங்களாகவன்றி
மனிதர்களாக நடத்தவேண்டும் என்பதே சமூகத்தினிடம் அவர்கள்
முதலில் எதிர்பார்ப்பது.

...சுயமரியாதையையும், மற்றவர்கள் தங்களே மதிப்பதையும்
மனிதர்கள் வேண்டுகிருர்கள்; வாழச் சந்தர்ப்பமும், அது இழுக்
கின்றி நடந்தேறி ஓரளவு உத்தரவாதமும், நல்லுறவு வாழ்க்கையுமே
அவர்கள் வேண்டுவதெல்லாம். இவற்றில் ஏதாவதொன்றை மட்டும்
கவனித்துவிட்டு மற்றவற்றைப் புறக்கணித்தோமானுல் அவர்கள்
மனமிடிந்து நம்பிக்கையிழந்துவிடுவர். 'பொருளாதார மனிதன்
என்னும் சித்தாந்தத்தைப் பொருத்த குறைபாடு இதுவே. உயிர்
பிழைத்து வாழவேண்டும் என்னும் ஒரு விருப்பத்தை மட்டும் அது
கருத்திற்கொண்டது. போதிய உணவும் உடையும் உறைவிடமும்
தரத்தக்க ஊதியம் கிடைத்தால் போதும், அவர்கள் திருப்தி
அடைந்து விடுவார்கள் என்று அது கருதியது. ஆனுல் இத்தகைய
தொரு குறுகிய நோக்கு குறைபாடான உளவியலேக் குறிப்பதன்றி
நெறிமுறைத் தவறையும் சுட்டுவதாகும். மனிதனுடைய ஆத்மிகத்
தன்மை, ஆண்டவனின் அருளால் அவன் பிறந்தது, பிரபஞ்சத்துக்
கான ஆண்டவனின் திட்டத்தில் அவனுடைய பங்கு ஆகியவற்றை

தொழிலாளர் ஒன்றுதிரட்டப்பட்ட காலத்தில் அவர்களுக்கு, நிர்வாகத்தினருக்குமிடையே இரக்கமற்ற முறையில் நடந்த போராட்டங்களுக்கு மாருகப் புதியதொரு உறவு இன்று ஏற்பட்டுள்ளது. ஆயின் முன்பு போலவே இப்போதும் அடிப்படை விரோதங்கள் கடுமையாகவே நிலவுகின்றன. இருப்பினும் அப்பான்மை கூட்டுறவுவாயிலாய் எழும் பிணக்காக உருமாறி விட்டது. இதனுல், சில பெருந்தொழில் துறைகளில் ஊழியர்களுக்கு உறுதி செய்யப்பட்டுள்ள வருடாந்தர ஊதியம், உற்பத்தியளவுடன் ஊதியத்தைப் பிணைக்கும் ஒப்பந்தங்கள் போன்று இயங்கும் பல பெரும் முன்னேற்றங்கள் சமூகத்துறையில் ஏற்பட்டுள்ளன. பல வியாபார நிலையங்கள் லாபப் பகிர்வு முறையைப் புகுத்தியுள்ளன. இப்போதுள்ள கருத்துக்களுக்கு மாருக ஒருநாள் நிர்வாகத்திலும் தொழிலாளர் பங்கேற்க எதிர்பாரா முறையொன்றை அமெரிக்கரின் கற்பனை விரிவாய் கண்டுபிடிக்க இயலுமானுல் நான் ஆச்சரியப்பட மாட்டேன். எப்படியும், தொழிற்சங்கத்தின் பங்கும் செயல்முறையும் மாறியிருப்பதை அடுத்த தலைமுறை காண்பது உறுதியெனக் கூறலாம். தொழிற்சங்கம் சீலத்துடன் இயங்கும் செயல் முறையை மேற்கொள்வது திண்ணம். பொருளாதாரத்துறையின் அடிப்படையிலேயே மாற்றத்தைக் காண்போம். (பழைய முதலாளித்துவப் பொருளாதார முறையை யொட்டிய தொழிலாளர்—நிர்வாகத்தினர் மோதலுக்கேற்ப) வெறும் விரோத சக்தியாக இயங்கிய நிலையிலிருந்து எதிர்ப்புக்கும் பொறுப்புடன் ஈடு கொடுக்கும் ஆற்றலாக தொழிற்சங்கம் அப்போது உருமாறுவது இன்றியமையாது. அதன் பயனுக, அமெரிக்கத் தொழிலுலகு என்னும் இயந்திரத்தில் முன்போலவே திறமான உறுப்பாக அது இருப்பினும் பழைய அளவுக்குப் பிரிவினை உணர்ச்சி இராது'' (எஃப். எல். ஆலன்).

இறுதியாக, 'பொதுநலத்தின் ஏதாவதொரு அம்சத்தைக்

---

அடிப்படையாகக் கொண்ட அவனுடைய உள்ளார்ந்த மதிப்பை அது உதாசினம் செய்துவிடுகிறது. இந்த உன்னத உண்மைகளை மனிதர் முழுமையாக அறிந்திருந்தாலும் அறியாவிடினும் இவற்றைக் கருத்திற்கொண்டேயாக வேண்டும்.''



கவனிக்க ஏற்பட்டுள்ளவையும், தன் நடவடிக்கைகளை அரசாங்க ஸ்தாபனங்கள், இதர தனியார் குழுக்கள், சர்வ கலாசாலைகள் போன்றவற்றுடன் பிரிக்கமுடியாதபடிப் பிணைத்துக் கொண்டுள்ளவையுமான எண்ணிறந்த தனிப்பட்ட குழாங்களும், ஆராய்ச்சிக்கழகங்களும், சங்கங்களும், கமிட்டிகளும் அமெரிக்க அரங்கில் மண்டிக் கிடப்பதே நான் குறிப்பிட விரும்பும் மிக முக்கிய அம்சமாகும். இவற்றின் பயனுக நாடு முழுவதின் பெருமுயற்சியும் இயல்பாகவும் சீராகவும் கூட்டு முறையில் ஒழுங்குபடுத்துவதற்குற்ற ஊட்டம் பெறுகிறது.—இது மதிப்பரிய முக்கியத்துவம் உடையதாகும்.

தொழில்துறை இயங்கும் பத்ததியை மக்கள் நலத்தில் நாட்டங் கொண்ட பயிற்சிக்களமாக உருவாக்கும் பணியின் தொடக்கமே அனைத்தும் எனலாம்; இதைச் சாதிப்பதில் எழும் இன்னல்களுக்கு அளவுமுண்டோ ? நான் மேலே குறிப்பிட்ட சமூகத்துறை முன்னேற்றங்கள் எல்லாம் பெரிய கூட்டுத் தொழில் ஸ்தாபனங்களைப் பொறுத்தவரையில், அவற்றின் நிர்வாகிகளை அச்சுறுத்தும் 'பதவி உயர்வுப்பித்து' ஒருபுறமிருக்க, பிரம்மாண்டத் தன்மைக்கு உரித்தான வழக்கமான குறைபாடுகளுடன் கூடியவையே. பணமூட்டை இன்னமும் பலம் படைத்ததாகவே, பெரும் பலம் படைத்ததாகவே உள்ளது. கூட்டு ஸ்தாபனங்கள், அவற்றின் நிர்வாகங்கள் ஆகியவற்றின் எல்லையற்ற ஆதிக்கம் ஓங்கிவருவதைக் கருத்தில் கொண்டு சட்டமூலம் பரிகாரம் காண்பதும், மற்றச் சக்திகளைக் கொண்டு ஒழுங்குபடுத்தப் படுவதும் பொதுநலத்தின் பொருட்டு அத்தியாவசியமாகும். அரசாங்கத்துடன் கூட்டு ஸ்தாபனங்கள் மேன்மேலும் அதிகத் தொடர்பு கொள்வது காரணமாகவும், பொது நல அபிவிருத்தியைப் பொறுத்து——அதாவது, நாட்டின் பொதுவான அரசியல் நலன் விஷயத்தில்—தமக்குள்ள பொறுப்பை அவை சிறுகச்சிறுக உணர்வது காரணமாகவும் ஜனநாயக சமூகத்தில் நடைமுறையில் அவற்றுக்குத் திட்டமானதோர் அரசியல் பங்கு[1] ஏற்பட்டுவிடுகிறது;

---

1. இவ்விஷயத்தைத் தமது புத்தகத்தில் விரிவாக விவாதித்துள்ள ருடால்ஃப்பெர்லி இவ்வாறு முடிக்கிருர் : ''மற்றவற்றைப் போலவே கூட்டுஸ்தாபனங்களும் தெரிந்தோ தெரியாமலோ காலப்

இதனுல் பெரும் பிரச்னைகள் எழுகின்றன. இந்தப் பிரச்னை களும், சங்கம் சேர்ந்துள்ள தொழிலாளர் வர்க்கம் வருங் காலத்தில் தவிர்க்க முடியாமல் ஏற்கநேரும் அரசியல் பங்கை யொட்டிய பிரச்னைகளும் திருப்திகரமாகத் தீர்க்கப்படுமென நான் நம்புகிற போதிலும் அதற்கு மிகுந்த அவகாசமும் பெரு முயற்சியும் தேவைப்படுவது திண்ணம். விஞ்ஞானம் முன்னேற்றத்தின் பயனுகப் புதிய தொழில் நுட்பப் புரட்சி களுக்குத் தொழிலுலகம் ஆளாக நேருகையில் அவ்வுலகின் அடிப்படைத் தத்துவத்துக்கும் மக்களின் ஆதார உணர்ச்சிக்கு மிடையிலான போராட்டம் புதிய வடிவங்களிலும் கட்டங் களிலும் தொடர்ந்து நடந்துகொண்டே யிருக்கும். அனைவருக் கும் சமசந்தர்ப்பம், சமூக நீதியில் முன்னேற்றம் என்னும் அமெரிக்க லட்சியம் சிறுகச் சிறுகப் பல தலைமுறைகளில் தான் கைகூடும். எனினும் அதற்கான வழி திறந்தேயிருக்கிறது; மேலும், பொருளாதாரத்தின் சடங்குமுறை பூராவும் இறுதி யாகச் சார்ந்திருக்கும் ஆதர்ச சித்தாந்தமும் மாறிவிட்டது—தொழில்துறை ஆதிக்கத்தின் பழைய வடிவங்கள் கைவிடப் பட்டு விட்டன என்பதில் ஐயமில்லை.

* * *

---

போக்கில் தம்மைச் சூழும் குறிப்பிட்ட கருத்துக்களின் வரையறைக் குட்பட்டு இயங்கவேண்டியிருக்கிறது. அவற்றை அறிந்து அனுசரிக்காவிடில் கூட்டுஸ்தாபனமே நலிந்துவிடும். சட்டம்போலக் காலக்கிரமத்தில் இந்தச் சம்பிரதாயங்களும் எழுகின்றன. 'சட்ட மின்றி வெறும் விருப்பமே ஆளும் இடத்தில் அரசன் என்று யாரும் இருப்பதற்கு இல்லை' என அரசாட்சி குறித்து ப்ராக்டன் கூறியது கூட்டு ஸ்தாபனத்துக்கும் பொருந்தும்''

ஸ்காட் ப்யூகனும் இவ்வாறே எழுதுகிருர் : ''பொருள்களோடு மனிதரைப் பொருத்தும் பொருளாதாரம் கவனம் செலுத்தும்போது அரசியல் அமைப்பு பிறக்கிறது என்று கிராஸலின் வாழ்க்கைச் சரிதையில் ப்ளுடார்க் எழுதியுள்ளார். கொள்கை அடிப்படையில் இதை முழுமையாகஏற்ருல் நம்மிடை நேரிடையாகவும் மறைமுகமாக வும் உள்ள ஆட்சி ஏற்பாடுகள் அனைத்தும் பூரணமாக ஆராயப்பட்டு மாற்றப்படுவதுடன் புதியதொரு அரசியல் சுதந்திரம் பிறக்கவும் வழி ஏற்படும் என்று தோன்றுகிறது.''



நான் மேலே கூறியவை அவசரக் கோலமாக அள்ளித் தெளித்த கருத்துக்களேயாகும். ஆகவே, நான் ஏற்கெனவேயே மேற்கோள் காட்டியுள்ள ஃப்ரெடெரிக் லூயி ஆலனின் 'மகத் தான மாறுதல்' என்னும் புத்தகத்தின் கடைசி அத்தியாயத்தி லிருந்து சில பகுதிகளை எடுத்துரைத்து அவற்றை உறுதி செய்ய விரும்புகிறேன். 1952 ஜூன் மாதத்தில் ''ஹார்ப் பெர்ஸ் மலர்'' எனும் சஞ்சிகையில் முதன்முதலில் வெளிவந்த அந்த அத்தியாயம் வருமாறு :

'' 'திஸ் வீக்' சஞ்சிகையின் 1951, மார்ச் 4-ஆம் தேதி இதழில், அதன் ஆசிரியரான வில்லியம் ஐ. நிகல்ஸ், 'தேவை—முதலாளித்துவத்துக்குப் புதியதொரு பெயர்' என்னும் தலைப் பில் ஒரு கட்டுரையை எழுதியுள்ளார். முதலாளித்துவம் என்னும் பெயர் தற்போதைய அமெரிக்க முறைக்குப் பொருந் தாது என்று அதில் அவர் வாதம் செய்திருக்கிருர். ஏனெனில், ஏராள மக்களின் மனத்தில், குறிப்பாகப் பிறநாடுகளிலுள்ள மக்களின் மனத்தில் 'பத்தொன்பதாவது நூற்ருண்டில் நிலவிய பழக்கடைப் பொருளாதார முறையாகவே அது தோன்றுவதாக, இன்றைய அமைப்பை நான் எப்படி வர்ணிப்பது ? முழுமை பெருவிடினும் இடையருது அபிவிருத்தி அடைந்துகொண்டே வருகிறது இவ்வமைப்பு; மேற்கொண்டு அபிவிருத்தியுறவும் எப்போதும் திறன் படைத் ததாகவிருக்கும் இது. மக்கள் ஒன்று சேர்ந்து முன்னேறும் முறை இது; ஒன்றுபட்டுப் பாடுபட்டு நிர்மாணிக்கும் அமைப்பு இது; அவர்கள் என்றென்றும் மேன்மேலும் உற்பத்தி செய்து குவிப்பதும், அவ்வாறு கூடுதலாகும் உற்பத்தியின் பலனை ஒருங்கு சேர்ந்து பகிர்ந்துகொள்வதுமான அழைப்பு இது—இத்தகையதை என்ன பெயரிட்டு அழைப்பது ?'' என்று வினவுகின்ருர் நிக்கல்ஸ்.

'புதிய முறை முதலாளித்துவம்', 'ஜனநாயக முதலாளித் துவம்', 'பொருளாதார ஜனநாயகம்', 'தொழிலியல் ஜனநாய கம்', 'பகிர்வு முறை', 'பரஸ்பர சகாயத்துவம்', 'உற்பத்தித் துவம்' என்பவை போன்று பல பெயர்கள் அடிபடுவதாயும், ஆனுல் இவற்றை யெல்லாம் விடப் பொருத்தமான பெயர் ஒன்று இருக்கக் கூடுமென்றே தாம் கருதுவதாயும் மேலும் கூறிய மிஸ்டர் நிகல்ஸ், இது சம்பந்தமாகத் தங்கள் யோசனை

களை அந்த சஞ்சிகையில் அச்சிடப்பட்டிருந்த கூப்பனில் எழுதி யனுப்புமாறு வாசகர்களைக் கேட்டிருந்தார். இதன் பயனுகப் பதினைந்தாயிரம் கூப்பன்கள் குவிந்தனவாம், 'என் ஆசிரிய வாழ்க்கை முழுவதிலும் இதுபோலப் பெருவிளைவுடைய உயிர்ப்பிரச்னை எதையும் நான் தொட்டதேயில்லை' என்று மிஸ்டர் நிகல்ஸ் பின்னர் கூறினர்.

இதனை விவரித்த மிஸ்டர் ஆலன், 'நிர்வாக ஆற்றல்' என்னும் பதத்தைத் தரமெனக் கருதியதாகத் தோன்றுகிறது. ஆனுல் அதைவிட 'பொருளாதார மக்கள் நலம்' என்னும் பதம் செவிக்கு இனிமையாக இருப்பதோடு அதிகப் பொருத்த மும் உடையதாகவிருக்கும் என்றே நான் நினைக்கிறேன், என்ருர்.

''ஐரோப்பாவிலிருந்து வந்த வகையில் முதலாளித்துவ முறை இயங்கியதன் விளைவாக இந்த நூற்ருண்டுத் தொடக் கத்தில் லட்சாதிபதிகளிடம் மேன்மேலும் பணம் குவிந்து, மற்றவர்களிடம் அது, தேய்ந்து கொண்டேவரக்கூடிய அபாய நிலையில் அமெரிக்கா இருந்தது; நாட்டின் பொருளாதாரத் துறை இயக்கங்களின் மீது சிலபெருஞ்செல்வர்களுக்கிருந்த கடும் ஆதிக்கம் அரசியல் துறையிலும் வியாபிக்கக் கூடிய ஆபத்து இருந்தது'' என்று ஆலன் மேலும் எழுதுகிருர். மேலும் அவர் கூறியுள்ள கீழ்க்கண்டவற்றை நான் மிகவும் முக்கியத்துவம் உடையவையாகக் கருதுகிறேன் : ''இந்த நிலைமை அமெரிக்க மக்களின் ஜனநாயக உணர்ச்சியையும் நீதி யுணர்வையும் கடுமையாகத் தாக்கியது. எனவே, நிலைமையை மாற்ற முற்பட்டோம்—புரட்சி மூலமன்றி பரிசோதனை முறை யில் மாற்றங்களைக் செய்யலானேம். தியோடர் ரூஸ்வெல்ட், லாஃபசலெத் (மூத்தவர்), வுட்ரோ வில்ஸன் முதலியவர்களி ஞல் தூண்டப்பட்ட அமெரிக்க மனச்சாட்சிப் புரட்சியின் பயனுக இந்த நூற்ருண்டின் ஆரம்ப வருடங்களில் நடந்த இந்தச் சீர்திருத்த இயக்கத்தினல் வரிச்சட்டங்கள், குறைந்த பட்ச ஊதியச் சட்டங்கள், உதவித்தொகைகள், பல்வேறு உத்தரவாதங்கள், விடுமுறைகள் போன்று பல தோன்றவும் திருந்தவும் நேர்ந்தன. சீராகவன்றி ஒட்டுவேலை முறையில் உருவாகிய இந்த மாறுதல்களுடன் தொழிற்சங்கங்களின் நிர்ப்பந்தமும், நிர்வாகத்தினரின் புதிய போக்கும் சேர்ந்து



கொண்டதன் பயனுக ஊதியத்தைப் பொறுத்த இரும்புச் சட்டத்தை உடைத்தெறிந்தோம். செல்வ வசதியுள்ளவர்களிட மிருந்து வசதிக் குறைவானவர்களுக்கு யாதொருவற்புறுத்த லின்றி வருமானத்தை வினியோகம் செய்யும் வழியை வகுத் தோம். மக்களின் விலைபொருள் வாங்கும் சக்தியைப் பெருக் கும் புதிய பிரதேசம் ஏழைமக்கள் முன் விரியக் கண்டோம். இதுதான் அமெரிக்காவின் மகத்தான கண்டுபிடிப்பின் மூலாதாரமென எனக்குத் தோன்றுகிறது. தாழ்ந்த நிலையில் இருந்த மக்களுக்கு இவ்வாறு வசதிகள் தேடித்தந்தால் தங்க ளுக்குக் கிடைக்கும் வாய்ப்புகளுக்கு ஏற்ப அவர்கள் நடந்து கொள்வதுடன் பொறுப்புள்ள பிரைஜைகளாகவும் பரிணமிப் பார்கள் என்பதையும் கண்டறிந்தோம்.''

இவ்வாருகப் புதியதொரு சமூக, பொருளாதார ஆதிக்க முறையொன்று இந்நாட்டில், உருப்பெற்று உரம் பெற்று வரு கிறது. வருங்கால அமைப்பு வகை பற்றி வித்தகர் 'கார்ல் மார்க்ஸ்' சாற்றிய கூற்றுக்களைப் பொய்ப்பிக்கும் பெரு நிகழ்ச்சியாகும் இது. முதலாளித்துவ முறையில் மார்க்ஸி ஞல் கவனிக்காமல் விடப்பட்டுவிட்ட உள்நிர்ப்பந்தம் எதனு லுமின்றி மனிதனின் சுதந்திர ஆர்வம், அகவுயிர் ஆகியவற் றின் உந்துதலிலேயே இது தோன்றியுள்ளது.

தத்துவ நோக்கிலிருந்து பார்க்குங்கால், மனிதரை ஊக்கு விக்கும் இன்றியமையாத தூண்டுதலாக இயங்கும் சுயநல வேட்கை இன்னமும் இருந்தே வருகிறது; எக்காலமும் அது இருந்துதான் தீரும். எனினும் அது தன்னுடைய அத்யந்தப் பிராதானியத்தை இழந்தே வருகிறது என்றே கூறுவேன். மேலும், ஒப்பந்த உறவு மூலம் லாபத்தைப் பகிர்ந்து கொள் ளும் தத்துவமானது பெருச்செல்வம் திரட்டும் போக்கைப் போக்கிவிட்டது என்பதும் நிச்சயம்.

இந்தப் புதிய சமூக, பொருளாதார ஆதிக்கமுறை இன்ன மும் பூரண வளர்ச்சி பெற்றுவிடவில்லை. எனினும் இது முத லாளித்துவத்தை மட்டுமின்றி ஸோஷலிஸத்தையும் மனித குலச் சரித்திரத்திற்கு அப்பால் ஒதுக்கிவிட்டது. ஆலன் அவர்கள் மேலும் கூறுவது போல, ''ஸோஷலிசத்தை நோக்கி யன்றி அதைக் கடந்து செல்கிறது. அமெரிக்கா...பொதுவு டைமைத் தத்துவத்துடன் நாம் போராடும்போது வருங்

காலத்தை அல்லாமல் கடந்த காலத்தையே எதிர்த்து நிற்கிருேம் என்பதை நாம் உணர்வது அவசியம்.''

நவீன காலச் சரித்திரத்தில் திண்மையான ஓர் உண்மையைக் காணத்தவருேம்; இந்த உண்மை அமெரிக்கரின் மனத்துக்கு மிகவும் உகந்த பரிசோதனை முறையின் பெருவெற்றியைச் சுட்டுகிறது எனலாம்.

*                *                *

நான் ஆதியின் விளக்கத் தொடங்கிய 'தக்கதோர் கொள்கை, தத்துவ திருஷ்டி' பற்றிய விஷயத்துக்கு மீண்டும் வருவோம்—இதுகாறும் நான் ஆராய்ந்த ஐயமற்ற உண்மையை உலகில் உணர்ந்திருப்போர் யார் என்பதே என் கேள்வி.

நிகழ்ச்சிகளின் துரிதத்திற்கேற்பச் சித்தாந்தங்கள் திட்டமாக வரையறுக்கப்படாததாலும், கோட்பாடுகள் சரிவர வகுக்கப்படாததன் காரணமாகவும் இந்நாட்டிலும்கூடத் தவருனதோர் கருத்து நிலவுகிறது. முதலாளித்துவத்துக்கு அமெரிக்கா ஒரு பெரிய அரண்போல் அமைந்து பொதுவுடமைத் தத்துவத்தை எதிர்த்து நிற்கிறது என்ற கருத்தே அது. அதாவது, பொதுவுடமைவாதிகள் பிரசாரம் செய்வது போலவே பொதுவுடமைத் தத்துவத்தின் அறைகூவலை அமெரிக்கா ஏற்றுள்ளது என்று பொருள்படும். சாதாரண மனிதர்கள்பால் மட்டுமின்றி அதிகார வட்டாரங்களில் கூடக் கருத்து நிலவுகிறது.

உலகின் மற்றைய மக்களைக் கருதுங்கால் இது மிகப்பெரியதோர் துரதிருஷ்டமாகும். ஏனெனில், முதலாளித்துவத்தின் பழைய பொருள்தான் அவர்களுக்குத் தெரியும். எனவே அதை அவர்கள் உள்ளூற வெறுக்கிருர்கள். அதன் பொருட்டு உயிர் கொடுக்க அவர்களில் எவரும் தயாராயில்லை—ஆசியா ஆப்ரிக்கா, அல்லது ஐரோப்பாக் கண்டத்திலும்கூட முதலாளித்துவத்துக்காக உயிரைத் தியாகம் செய்ய யாரும் சித்தமாயில்லை.

இப்பதத்தின் பொருள் பொருத்தமாக இல்லாததும் பெரும் துரதிருஷ்டமாகும். ஏனெனில், உண்மையில் முதலாளித்துவத்தைக் கைவிட்டுத்தான் வருகிறது அமெரிக்கா.



வன்முறையும் நாசமும் மிகுந்த திடீர்ப் புரட்சி மூலமல்ல; ஒரு கட்டுக் கோப்பான ரீதியில் அல்லாவிடினும் உறுதியான ஊக்கத்துடன் உருப்படுத்தும் முறையிலும் முதலாளித்துவத்தை விட்டொழித்து வருகிறது.[1]

இப் பேருண்மையை வலியுறுத்தப் பல அமெரிக்க ஆசிரியர்கள் ஏராளமாக நூல்கள் எழுதியுள்ளனர். நாம் பரிசீலிக்கும் இவ்விஷயத்தைச் சார்ந்த நான்கை மட்டும் இங்குக் குறிப்பிடுகிறேன் : ஏற்கெனவேயே பலமுறை நான் மேற்கோள் காட்டியிருக்கும் ஆலன் எழுதிய 'மகத்தான மாறுதல்'' அடால்ஃப் பெர்லி எழுதிய 'இருபதாவது நூற்ருண்டு முதலாளித்துவப் புரட்சி', பீடர் ட்ரக்கரின் 'புதிய சமூகம்' டேவிட் லிலியத்தால் எழுதிய 'பெருந்தொழில்; ஒரு புதிய சகாப்தம்' என்பவையாம். (மற்ருெரு நோக்கிலிருந்தும், அரசியல் தத்துவ ரீதியிலும் ஸ்காட் பூக்கானன் எழுதிய, 'அரசியல் கட்டுரை' (எஸ்ஸே இன் பாலிடிக்ஸ்) என்னும் மற்ருெரு நூலையும் இவற்றுடன் கூறுவது பொருந்தும்.)

ஆனல் இப்புத்தகங்கள் அனைத்தும் அந்தப் பெருநிகழ்ச்சிக்குப் பிறகு எழுதப்பட்டவை. எனவே, நடந்தவற்றை நினைவுகூர்ந்து ஆராய்ந்த திறனய்வு நூல்களாகவே இவை இருக்கின்றன. நிகழ்ந்தவற்றுக்குச் சித்தாந்த ரீதியில் விளக்கம் கூறி வழி காட்டவில்லை இவை. மக்கள் மனத்தைக்கிளறி அவர்களைச் செயலில் ஈடுபடத் தூண்டும் கருத்தெதையும் இவை வகுக்கவில்லை. மேலும், அமெரிக்காவின் பரிசீலனை முறையை விரிவாக வர்ணிப்பதிலும், அதன்விசேஷத் தன்மை

---

1. ''பிற நாடுகளில் என்ன பொருள் கொள்ளப்படுகிறது என்பதைக் கருதும்போது அமெரிக்க முறை 'முதலாளித்துவம்' என்று கூறுவது நகைப்புக்குரியதாகும்......இந்த ஆராய்ச்சியின் பயனைப் புலனுகும் தொழிலியல் சமூகம், நாம் நெடுநாளாக முதலாளித்துவமென எதை நினைத்து வந்துள்ளோமோ அதனின்று பெரிதும் மாறுபட்டது என்பது உறுதி. 'ஸோஷலிஸம்' என்று எதைக் கருதி வந்திருட்கிருேமோ, அதிலிருந்து வெகுவாக வேறுபட்டது தான் இது. முதலாளித்துவம், ஸோஷலிஸம், ஆகிய இரண்டுக்கும் அப்பாற்பட்ட புதிய சமூகமே தொழிலியல் சமூகமே.''

—பீடர் எஃப். ட்ரக்கர்.

களை விளக்குவதிலுமே பெரும் பகுதியைச் செலவிட்டிருப்ப தால் இந்நாட்டை அறியாதவர்களுக்கு இவை உதவிகரமாக இல்லை.

முழு வளர்ச்சி பெற ஒரு நூற்றுண்டாகிலும் தேவைப் படும் முறையொன்றில் ஆரம்பக் கட்டங்களைத்தான் இந்நூல் கள் ஆராய்கின்றன எனலாம். இதனுல் பயனேதும் இல்லை. இம்முறையின் இறுதி லட்சியத்தை ஓரளவேனும் எடுத்துரைத் தால்தான் உலகெங்கிலும் எல்லா மக்களின் நம்பிக்கைகளும் தழைத்தோங்கத் தோது உண்டு. உண்மையில், அமெரிக்க விவகாரங்களை நன்கறிந்துகொள்ள ஐரோப்பிய அறிஞர் களுக்கு இந்தச் சரித்திர முக்கியத்துவமுடைய உண்மை தெரி யும்; ஐரோப்பிய மக்கள்தான் இதை அடியோடு அறியார்.

மனிதகுலம் மகிழ்ச்சியோடு பின்பற்ற விரும்பக்கூடும் விளக்குகளை ஏந்திக் காரிருளில் நீங்கள் முன்னேறுகிறீர்கள். ஆனல் மற்றவர்களுக்கு வழி காட்டுவதற்கு மாறுக வெறும் அனுபவமுறை,நடைமுறை சித்தாந்த சிருஷ்டி ஆகியவற்றுலா கியபனித் திரையை அவர்கள் பேரில் போர்த்துகிறீர்கள். அனை வரும் புரிந்து கொள்ளக்கூடிய பொருத்தமான கருத்துக்களைக் கூருமல் அவர்களைத் தடுமாற வைக்கிறீர்கள். சுருங்கக்கூறின், தத்துவ ஞானமுறை எதையும் நீங்கள் கூருததால் உங்கள் வழியின் மேன்மையை மற்றவர்கள் உணர இயலவில்லை— அளவுக்கதிகமான அடக்கத்தின் விளைவே இது என்பேன்.

* * *

பிரதான விஷயத்துக்குப் புறம்பான இந்த நெடிய விளக் கம் ஓர் உதாரணமேயாகும், அனுபவ அறிவு முறையை இந் நாடு ஒரு நாளும் கைவிடக்கூடாது; தனக்கு அனுகூலம் பயக் கும் அதனை எந்நாளும் இந்நாடு கைவிடவும் விடாது என்ப தைத்தான் இது காட்டுகிறதெனக் கருதுகிறேன்; எனினும், பிறருக்குப் புரியக்கூடிய முறையில் தன் லட்சியத்தை வெளி யிடும் கோட்பாடொன்றை, திட்டமான தத்துவமொன்றை வகுப்பது மிகவும் நலம் என்பதையும் இந்நாடு ஒருங்கே உணரு மென நம்புகிறேன்.

ஆனல் பிரசாரத்தின் பொருட்டுக் கோட்பாடொன்றை உருவாக்குவது நலம் என்பது இதற்குப் பொருளாகாது.



தத்துவங்களிலும் நிலையான உண்மைகளிலும் இன்னும் அதிக அளவில் பொது அக்கறை ஏற்பட்டாலன்றி அறிவளவில் தொடர்புகள் ஏற்பட மெய்யான சாத்தியக்கூறுகள் தோன்று என்பதையே இது சுட்டும்.

சமூகத்தில் இப்பணியைப் புரிய அறிஞர்கள் அவசியம். வாழ்வோட்டத்தின் முன்னல் அல்லவாயினும் சுதந்திரப் பிர கடனத்தின் காலத்தில் போன்றும், அரசியலமைப்பு இயற்றப் பட்ட சமயத்தில் போலவும் நேரிடையாக அதன் மீது ஒரு முனைப்படுத்தும் வகையிலாவது முற்றிலும் பொருத்தமான தொரு தத்துவ ஞானம் பகுத்தறிவையொட்டிச் சரிவரவகுக் கப்பட்ட நியதி, ஐயங்களைப் போக்கும் கருத்தாற்றல் ஆகிய வற்றின் சுடரொளியை வீச முயற்சி செய்யும் சிந்தனையாளர் கள் எவ்வளவு தேவை என்பது இதிலிருந்து புலனுகிறது.

மேற்கூறிய அந்தக் காலத்தில் மேற்கத்திய உலகைக் கிளறி ஊக்கிய லட்சியக் கொள்கை இயக்கத்தில் அமெரிக்கா தீவிரப்பங்கு கொண்டிருந்தது என்பது மறுக்க முடியாத உண்மை. சுதந்திர மக்களுக்கு உரித்தான ஆட்சி நிர்மாணத் தொகுப்பைச் சார்ந்த அரசியல் தத்துவ சித்தாந்த முறையை யொட்டிய பிரச்னைகளில்வழிகாட்டியாய் உதவியது.'தி ஃபெட ரலிஸ்ட்' என்னும் சஞ்சிகையைப் படித்தால் அப்போதைய விவாதங்களின் கருத்தாழத்தைக் கண்டு கொள்வதற்குக் சாலுவதாகும். அன்றைய சித்தாந்தப் பேரியக்கத்தில் பெரும் பங்கு வகித்ததன் விளைவாக ஃபிரெஞ்சுப் புரட்சி, அதை யொட்டிய தத்துவங்களில் சீரானவை ஆகியவற்றின் மீதுகூட அமெரிக்காவின் கருத்தாழம் வெகுவாகப் பிரதிபலித்தது.[1]

1. ஃபிரெஞ்சு விடுதலைப் பிரகடனத்துக்கு (1789) முற்பட் டவை அமெரிக்க சுதந்திரப் பிரகடனமும் (1775), அமெரிக்க அர சியலமைப்பும் (1787) என்பது அனைவரும் நன்கறிந்ததே.

"அமெரிக்க அரசியல் சட்டத்தின் உரிமைச் சாஸனத்துக்கு முன்னேடியான வர்ஜீனியா உரிமைப் பிரகடனமும் 1789-இல் ஃபிரான்ஸ் வகுத்த மனிதர் சுதந்திரம், பிரஜா உரிமை பற்றிய பிரகட னத்துக்கு 13 ஆண்டுகள் முற்பட்டவையாகும். மனித உரிமைகள் இவ்விதம் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த வகையில் உறுதி செய் யப்பட்டது உங்கள் நாட்டிலேயே என்பது குறித்து நீங்கள் பெருமைப்

இன்றைய நிகழ்ச்சி வேகத்தில் உலகப் பொதுவான லட்சியமொன்றைத் தத்துவ ரீதியில் முன்கூட்டி வகுப்பது இயலாத காரியமாகத் தோன்றினாலும் இதுகாறும் நடந்துள்ள வற்றைக் கொண்டு சமூக தத்துவ விளக்க முறையில் விரிவான வியாக்யானம் காண்பதும், போதிய அளவு விரிவு முறையும் படைத்த வேலைத் திட்டமொன்றைத் திட்டுவதுமாவது சாத்தியமாக இருந்தேயாக வேண்டும்.

---

பட நியாயமுண்டு''—1956, மே 15-ம் தேதி வர்ஜீனியாவிலுள்ள வில்லியம்ஸ் பர்க்கில் முன்னாள் ஐ. நா. காரியதரிசி ஸ்ரீ ஹாமர் ஷீல்ட் நிகழ்த்திய உரையில் ஒரு பகுதி இது.

# 14

## பேரபவாதம்

அமெரிக்காவை வெறுத்து அவதூறுகப் பேசுமொரு போக்கில் ஒரு மர்மமான பொருளையும் ஆர்வத்தையும் காண லாம்—ஆராயத் தக்கதொரு போக்கு இது.

இந்தப் பேரபவாதப் போக்குக்கு டி. எச். லாரென்ஸ் எழுதிய 'இறக்கைப் பாம்பு' (தி ப்ளூம்டு ஸர்ப்பென்ட்) என்னும் நாவலிலிருந்து எடுத்த பின்வரும் பகுதிகளைவிடப் பொருத்தமான உதாரணங்களைப் பார்க்கமுடியாது. அந் நாவலில் ஆசிரியை கேட்லெஸ்லி என்பவரைப் பற்றி லாரென்ஸ் கூறுகிறார் ;

ஐரோப்பா, ஆசியா, ஆப்பிரிக்கா யாவுமே, 'ஆம்' என்று முரசடிக்கும் அனைத்தையும் 'இல்லை' என்று புறக்கணிக்கும் ஓர் இடுகாடா, இந்த அமெரிக்க நாடு? என 'கேட்' அம்மை ஐயுற்றாள்.

ஆக்கத்திறன் படைத்த பிற நாடுகளின் மக்கள் மீண்டும் உருக்கப்படும் உலையோ அது? புதிய படைப்பையன்றி ஏற்றத்தாழ்வற்ற மரணத்தை வார்த்துத் தள்ளுகிறதோ அமெரிக்காவென்னும் அந்த உலை? மனித சாதனைகளை மண்ணோடு மண்ணாக்கும் மயான பூமியோ அது? அந்த நாசச் சக்தியின் கையாட்கள்தானே அதன் மக்களெல்லோரும்? வளர்ச்சிக் கருவைக் கூடத் தோண்டியெடுக்குமளவுக்கு மனித ஆன்மாவை மீண்டும் மீண்டும் கொத்திக் குலைக்கும் அது இறுதியில் அவனை ஒரு இயந்திரமாக்கி விடுகிறது; அந்நிலையில், வாழும் உயிரினங்கள் அனைத்தின் துடிப்பையும் பறிப்பதன்றி வேறெந்தப் பேரார்வமும் அவனுக்கு இருப்பதில்லை.

''இம்முடிவைக் கொண்டு அமெரிக்காவின் உண்மை இயல்பைக் காணப் புகுவதோ? என்று சில சமயங்களில் அவள் எண்ணலானாள். மற்றக் கண்டங்கள் சமைத்தவற்றைச் சிதிலமாக்கும் மாபெரும் மயான பூமியோ அது? ஆண்டவனின்

திருமுகத்திலிருந்து அருட்கண்களைப் பிடுங்கிவிடப் போராடும் அதர்ம நாடோ அது ? அமெரிக்கவியல் அது தானே ?

''அங்கு சென்றவர்கள் அனைவரும், ஐரோப்பியர், நீக்ரோவர், ஜப்பானியர், சீனர் ஆகிய எல்லா நிறத்தவரும் இனத்தவரும் உருக்குலைந்துவிட்டவர்களோ? ஆண்டவனின் அருளுணர்வு அற்றுவிட்டவர்களோ ? அதனால் தான், உலகின் ஆத்மாவைக் களைந்தெறிய தனக்கு 'உரிமை' இருப்பதாகக் கொக்கரித்து கடவுளை மறந்த இந்த ஜனநாயகப் பிரதேசத்துக்கு—பேருண்மையை மறுக்கும் இந்த அமெரிக்காவுக்கு, அவர்கள் வந்து விட்டார்களோ? அதுவா உண்மை? அது உண்மையாயின் லோகாயதப்பான்மையின் உயிர் நாடியா மன்றோ ? இத்தகைய நாஸ்திகப்பான்மை:உலக உள்ளத்தைத் தகர்க்குமன்றோ ?

"இத்தகைய சிந்தனை அவள் மனத்தில் அவ்வப்பொழுது எழும்."

'கேட்' அம்மையின் வாயிலாகத் தம் சொந்த எண்ணங்களையும் கவலைகளையும் தான் லாரென்ஸ் வெளியிட்டார் என்பது தெளிவு. இந்தக் கற்பனைக் கனவில் ஆசிரியரும் பாத்திரமும் இருபொருள் தரும் வகையில் ஒன்றிவிட்டனர். அப்பாத்திரங்கள் கேள்வி முறையைக் கையாண்டனவென்றால், ("சூன்யத்தின் இருள் மண்டிய ஆழ்மட்டத்தில் அது அவனை ஆழ்த்தும்" என்னும் வாக்கியம் சுட்டும்) மெக்ஸிக விரக்தி நிலையிலிருந்து 'அமெரிக்கா' மீது—அதாவது, அமெரிக்காவின் தொழில்களமாகிய ஐக்கிய அமெரிக்க ராஜ்யங்கள் மீது—பாய்ந்து கேள்விக்கணைகளைத் தொடுக்க முற்பட்டனவென்றால்—அதற்குக் காரணம் அவற்றைக் கவ்விநின்ற கருத்தில் பகற்கனவொன்றின் துயரச்சாயலான காரமும் தெளிவின்மையும் படிந்திருந்ததேயாகும். இவ்விதம் அமெரிக்கா பற்றி லாரென்ஸ் கூறியிருப்பதற்குத் தனி முக்கியத்துவம் ஒன்று உண்டு : அவர் வெறுத்தது தம் கற்பனையில் மட்டும் கண்ட அமெரிக்காவையல்ல; தம்மைப்போலக் கவித்திறன் படைத்திராத மற்றும் பலரும் தங்கள் கற்பனையில் கண்ட அமெரிக்காவையே அவர் வெறுத்தார். இத்தகைய வெறியின் விளைவான பிம்பத்தின் பொய்த்தோற்றமே என் தனி அக்கறைக்கு உரியதாகிறது.



லாரென்ஸையே பொறுத்தவரையில் ஆழ்ந்த ஒருவகை உள் அநுபவம் வாய்க்கப் பெறும் ஆர்வத்தில் தோய்ந்து நின்றவர் அவர் என்பதே என் உள்ளத்தில் ஊன்றிய கருத்து; இது அவரை சூன்யத்தின் பாலும், காமவேட்கையிலிருந்து விடுபட்டதாக வீணே பறைசாற்றிக் கொள்ளும் அபாவத்தின் பாலும் திருப்பி அவருடைய அந்த ஆர்வத்தை விழலாக்கினர் என்பது என் கருத்து. உள் அநுபவப் பிரதேசத்துடன் தொடர்பு கொள்ள அவர் கையாண்ட வழிமுறைகள் பற்றி நம்மெல்லோரையும் விட 'சாட்டர்லி' அம்மையே நன்கறிவாள். ஆனால் எவர்களைக் கருத்தில் கொண்டு அவர் பேசினரோ, அவர்களுக்கு மர்ம அநுபவத் தேட்டத்தில் ஏமாற்றம் எழுமாயின் அது எண்ணற்ற இதர வடிவங்கள் எடுக்கக்கூடும்.

தங்களிடமே ஆத்திரம் கொண்ட அவர்கள் மனிதனிடமும், அவனுடைய அன்றாட ஆசைகள், அல்லல்கள், கடும் உழைப்பு ஆகியவற்றைக் கருதியும் ஆத்திரம் கொள்கின்றனர். இருநெறிப்பட்ட மனத்துடைய அவர்கள், ஒரு முனை நோக்குடையோரைச் சகிக்க வொண்ணார். எனவே, அமெரிக்கா குறிக்கோளாகக் கொண்ட அனைத்தையும் அவர்கள் வெறுப்பது இயல்பேயாகும். மனிதசுதந்தரமும் சகோதரத்துவமும் அவர்கள் கருத்தில் சாரமற்றவையும், கீழ்த்தரமானவையுமான லட்சியங்கள்; ஆகவே அவை அவர்களை அலுத்துச் சலிக்கவைக்கின்றன. சாதாரண மக்களை அவர்கள் வெறுக்கின்றனர். ("லாரென்ஸின் மனப்போக்குகளை பேரளவு பிரதிபலிக்கும் இயல்புடைய 'கேட்' அம்மை சாமான்ய மக்களை வெறுப்புடன் நோக்குகிறாள் என்பதில் ஐயமில்லை" என்று தம் நூலின் முகவுரையில் 'வில்லியம் யார்க் டிண்டல்' கூறியுள்ளது இதற்குச் சான்று தரும். அன்றாடக் கடமைகளையும் எண்ணற்ற வேலைத் திட்டங்கள், போட்டி—போராட்டங்கள் பலப்பல்லோரின் ஓய்வேயற்ற பணிகள், மிதமிஞ்சிய மனித லட்சியங்கள் பொருட்டுக்கும் உழைப்பு ஆகிய இவையெல்லாவற்றையும் அவர்கள் வெறுக்கிறார்கள். மனிதருக்கேற்ற வாழ்க்கை முறை அனைவருக்கும் கிடைக்கச் செய்வதற்கான இடையறாப் பணியை (இதை அவர்கள் தீவிர மறுப்புப் போக்கென அழைக்கிறார்கள்), ஜடப்பொருளை மனிதகுல நன்மைக்

குப் பயன்படுத்துவதற்கான முயற்சியையும் (இதைத்தான் அவர்கள் உலகாயதம் என்கிறார்கள்), பல்வேறு நிறத்தவரும் இனத்தவரும் ஒருங்கு குவிவதையும், அடக்கு முறைக்கும் சிறுமைக்கும் ஆளாவதிலிருந்து விடுபட்டு நம்பிக்கையுடனும் சுதந்தரமாகவும் சேர்ந்து உழைப்பதற்காக ஏராளமானோர் இங்கு வருவதையும் (இதையே 'சாதனைகளை மண்ணாக்கும் சாவுலகுக்கு உருக்குலைந்த ஆத்மாக்களின் ஓட்டம்' என்று அவர்கள் கூறுகிறார்கள்) அவர்கள் வெறுக்கிறார்கள். நம்பிக்கைக் குலைவிலிருந்து மனிதனைக் காப்பதில் உதவ வேண்டும் என்னும் விருப்பத்தில் அடக்கமாகச் சுடர்விடும் வேத நூலின் அன்புக் கனலையும் அவர்கள் வெறுக்கிறார்கள். இவையனைத்தின் மீதும், தங்களுடைய மன உளச்சலின் மீதும் வஞ்சம் தீர்த்துக் கொள்ளும் பொருட்டுத் தாமாக ஒரு கனவுலகைக் கற்பித்துக் கொள்கிறார்கள். அமெரிக்காவென அவர்கள் பெயர் சூட்டும் இந்த மாய உலகம் முற்றிலும் இயந்திரமயமான ஒரு நரகமேயாகும். இயந்திரங்களும் நடமாடும் சடலங்களும் மலிந்து காணப்படும் உருவமே அமெரிக்கா. சுருங்கக் கூறின், மாபெரும் மயான பூமியாக இது அவர்களுக்குத் தோற்றம் அளிக்கிறது. இதில் அவர்கள் வெறுப்பவை யாவும், அவர்களுடைய உயிர்த் துடிப்பைப் பறிப்பவை அனைத்தும் நிறைக்கப்படுகின்றன. மறுப்புப் போக்கே இந்தவுலகுக்கு மூச்சுக்காற்று. இயற்கைத் தன்மையை இழந்துவிட்டதென அவர்கள் கருதும் இதன் நோக்கமெல்லாம் உலகின் ஜீவசக்தியையும், ஆக்கவுணர்வையும் உறிஞ்சுவதேயாகும். ஏற்றத்தாழ்வின்றி ஒரே மட்டமாக்கும் உயிரற்ற பருப்பொருள்களையும், தாமே இயங்கும் இயந்திரப் பிசாசுகளையும் மண்டி மலியவைக்கும் பொருட்டுத்தான் இத்தனையும் நடக்கிறதாம்! இவ்வாறு தங்கள் கெட்ட கனவில் காணும் பயங்கரமான அமெரிக்காவை அவர்கள் அநுமதி சூன்ய மண்டலம் என்றும் உலகின் ஆத்மாவையும், ஆண்டவனின்—அதாவது, இறக்கை படைத்த தங்கள் ஆண்டவனின்—திருமுகமண்டலத்திலிருந்து அருட்கண்களையும் பிடுங்க முற்பட்டுள்ள தீய நாடு என்றும் திட்டுவதில் வியப்பென்ன ?

* * *



அமெரிக்காவைப்பற்றி 'கேட்' அம்மை கொண்ட கருத்தை விளக்கப் புகுந்த 'லாரென்ஸ்' மனத்தில் எழுந்த அச்சமும் வெறுப்பும் தீவிர ஆலோசனைக்கு ஏற்ற விஷயம் என்று எனக்குத் தோன்றுகிறது : லாபம் திரட்டுவதில் நாட்டம் கொண்ட உலக மெங்கிலுமுள்ள வர்த்தகர்கள் யாவரும் அமெரிக்காவை விரும்பக்கூடும் என்பது தெளிவு. இதனிடமிருந்து ஏராளப் பாடங்களைக் கற்றுக் கொள்ளவும் அவர்கள் விரும்பலாம். உலகாயதத் துறையில் இதன் சுறுசுறுப்பு கண்டு அவர்கள் பாராட்டவும் கூடும். ஆனால் இதனாலெல்லாம் அவர்களுக்கு அமெரிக்காவிடம் பொறாமைதான் ஏற்படுகிறதேயன்றி உண்மை அன்பு தோன்றுவதில்லை; அது ஒரு நாளும் தோன்றவும் தோன்றாது. மெய்யான ஆன்மிகப் போக்குடைய பலர் அமெரிக்காவை அறியாதது காரணமாக வெறுக்கவும், அவதூறு மொழியவும் சந்தர்ப்பம் உண்டு. ஆனால் என்னைப் பொறுத்தவரையில் அதி முக்கியமான விஷயமாகத் தோன்றுவது இதுதான் : அமெரிக்காவை உண்மையிலேயே அறிந்தவரும், நேரிடையாகச் சுய அனுபவம் பெற்றவருமான எந்த மெய்ஞான சிந்தனையாளரோ, அன்றி அருள் பெற்ற எந்த மெய்ஞானியுமோ, அல்லது ஆன்மாவின் இயல்பை உண்மையிலேயே உணர்ந்த எவருமோ இந்நாட்டை நேசிக்காமலிருந்ததை நான் கண்டது கிடையாது; அவர் செலுத்தும் அந்த அன்பில் மனிதகுலத்தின் பால் அன்பும், ஆண்டவனின் திருவுளச் செயல் முறைகளை மதித்து வணங்கும் போக்கும் கலந்திருக்கக் காணலாம். இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ளவை போன்று மனிதருக்குரிய குறைகள் இருப்பினும் மெய்ஞானிகள் அமெரிக்காவை நேசிக்கிறார்கள். போலி ஞானிகள் தான் இதன் பரமவைரிகள்.

இன்னும் பல வழிகளிலும் அமெரிக்கா அவதூறுக்கு ஆளாகலாம், அநியாயமாக வெறுக்கப்படலாம். ஒருநாள் வன்மையாக வெளிப்படும் வெறுப்பைக் கக்கிவிட்டு, மறுநாளே—அதனால் அனுகூலம் என்று தெரியவரும் போது—ஆர்ப்பாட்டமாக அன்பைக் கொட்டி முகஸ்துதி செய்யும் அரசியல் எதிரிகளையும் அமெரிக்காவில் காணலாம். ஆயினும் இயற்கையான எதிரிகள் போலி ஞானிகளேயாவர்; ஆன்மாவின் குரலுக்குப் பொய்ச்சான்று கூறுபவர்கள் அவர்கள்.

அமெரிக்காவின் மீது அவர்களுக்கு இருக்கும் வெறுப்பு சற்றும் தளராத முழுமுற்றான தெனலாம்.

தெய்வத்தை நாடும் பான்மையுள்ளவர்களும் இகவுலக பந்தங்களிலும் இச்சைகளிலும் இறுகப் பிணைப்புற்று ஆன்மிக அனுபவதாகத்தைத் தணிக்கப் போலிஞானிகளை நாடுபவர்களிடம் இந்த வெறுப்பு நிலவக் காணலாம். தங்களால் எய்த வியலாதுபோன லட்சியங்கள் குறித்துக் கோபத்திலும் ஆத்திரத்திலும், பிறரை எதிர்த்துச் சாடுவதன் மூலம் தான் இவர்களால் ஆறுதல் காண முடிகிறது. தங்கள் மனமுறிவையும் குமுறலையும் ஈடுகட்டப் பெரியதொரு பலிக்கிடா, மனித குல நம்பிக்கைகளைத் தூண்டிய பின் அவற்றைக் குலைக்குமளவு வக்ரப் போக்கு உடைய மாபெரும் கண்டமொன்று இவர்களுக்குத் தேவையாக இருக்கிறது—இது தான் அவர்களுடைய மனம் காணும் மாயத் தோற்றமான அமெரிக்கா.

# மூன்றும் பகுதி

## 15

## அமெரிக்கரின் சில பிரமைகள்

இந்த அத்தியாயத்தில் நான் குறிப்பிடப்போகும் சில பிரமைகள் அமெரிக்கரிடையில் மட்டும்தான் இருக்கின்றன என்பதில்லை. எனினும் இந்த மாபெரும் நாட்டில் அவற்றை அடிக்கடி காண்கிறேன். இவ்வாறு அவை பரவலாக இருப்பதாலேயே, 'அமெரிக்கரின் சில பிரமைகள்' என்று கூற முற்பட்டேன்.

முதலாவது மாயத்தோற்றம் இதுதான்: வாழ்க்கை பற்றிய அமெரிக்கரின் சித்தாந்தம், மனிதனையும் இயற்கையையும் சார்ந்து பதினெட்டாவது நூற்றாண்டில் நிலவிய நம்பிக்கை மிக்க கருத்துக்களின் தொடர்ச்சியாகவே சில அம்சங்களில் தோன்றுகிறது. வித்தகர் ரூஸ்ஸோவின் விளக்கத்தையொட்டிய இயற்கையின் நல்லியல்பு, மனிதனின் இயல்பான நற்குணம் ஆகியவற்றிடம் இந்நாட்டுக்கு நம்பிக்கை இருப்பதாகக்கூட, முதலெடுப்பில் தோன்றக்கூடும். இயற்கையாற்றலுக்கு அணைகோலாமல் அதன் இஷ்டம்போல அது செயற்படவிடப்படுமானல் அனைத்தும் சரியாக அமையும்; அதாவது, நம் இயல்பில் தீமையின் வேர் எதுவும் மறைந்திருக்கவில்லையாதலால் தெய்வ அருள் தேவையில்லை என்ற எண்ணமே இங்கு மேலோங்கியிருப்பதாகத் தென்படலாம். இங்குமங்கும் ஏற்கப்படினும் மேலெழுந்தவாரியாகவே உள்ளதும், வெறும் வாய்ப்பந்தலன்றி ஆய்ந்தோய்ந்து கண்ட திடநம்பிக்கையாக இல்லாததுமான இத்தகைய சிந்தனைமுறையில் உலகாயதத்தின் அச்சுறுத்தலைவிட அதிகத் தீமையை விளைக்கக்கூடிய இயற்கைவாதத்தை நாடும் போக்கொன்றை நாம் சமாளிக்கவேண்டியிருக்கிறது. மனித சக்தி, விஞ்ஞானம் ஆகியவற்றைமட்டும்

துணையாகக் கொண்டு திமையீது வெற்றி கண்டு, வெறும் இயற்கையைமேபாட்டிய முழுமையையும், இயற்கைபேயான இன்பநிலையையும் மனிதன் எய்திவிட முடியும், தனக்குத் தானே வித்தன் அவன் (மதமூலமான ஆறுதல் உங்களுக்குத் தேவையாக இருக்குமானால், ஆண்டவனின் அங்கீகாரமும் ஊக்கமும் அவனுக்குக் கிட்டும் என்னும் உத்தரவாதத்தை அதிகப்படி அம்சமாகச் சேர்த்துக்கொள்ளலாம்!) என்னும் கருத்து தற்கால உலகில் பொதுவாக நிலவிவருகிறது.

எனினும் இந்த இயற்கை வாதத்திலேயே கடுமையான முரண்பாடொன்றும் இருக்கிறது; நேர் எதிரான போக்கொன்றையும் இதில் காண்கிறோம்—சமய ஒழுக்கத்தை வற்புறுத்தும் பழைய பியூரிடன் வாதத்தின் (அதற்கு எதிராகத் திரண்ட கசப்பின்) மிச்சத்திலிருந்து தோன்றியதே இதுவென நினைக்கிறேன். இதைக்கொண்டு நோக்குங்கால் இயற்கைவாதம் அவ்வளவு நல்லதாகத் தென்படவில்லை. மனித இயல்பின் அடிப்படையே துயரம் தோய்ந்த ஒன்று எனும் அபிப்பிராயம் நிலவுகிறது — ஒன்றுடனொன்று மோதும் மிருகத்தனமான உணர்வுகளும் விருப்பங்களும் மலிந்தது அது; ஒழுக்க நெறி புணர்வுடன் கூடிய மனச்சாட்சியினால் அவற்றை உள்ளிருந்தவாறு கட்டுப்படுத்த இயலவில்லை; சமூகத் தடைகள் என்னும் புறநிர்ப்பந்தங்களாலேயே அவை அடக்கப்படுகின்றன—இவையே அக்கருத்தின் ஆதார அம்சங்கள்.

அக்கருத்து சரியென நாம் கொள்வோமாயின், உளவியல் நிபுணர்களும் பொறியியல் வல்லுநர்களும் இல்லையேல், பண்டையக் கிரேக்கரைப்போல் இப்படித்தான் நாம் கூறவேண்டியிருக்கும்: "மனிதன் பிறக்காமலே இருந்திருக்கலாகாதா!"

* * *

இரண்டாவது மனமயக்கம்: வெற்றி காண்பது என்பதே பாராட்டுக்குரிய விஷயம்தான்; அதற்காக முனைவதை அறநெறி ஆணையிடுகிறது என்று பொதுவாகக் கருதப்படுகிறது.

வெற்றியைப் பற்றிய இந்த அமெரிக்க அபிப்பிராயத்தில் பேராசையோ தற்செருக்கோ கிடையாது. 'வெற்றி' என்றால், முனைவுக்குற்ற பலன் பெறுவது என்று மிக எளிதாக அதற்கு



விளக்கம் தரப்படுகிறது. இம்முடிவை ஏற்போமாயின், உளவியல், ஒழுக்கவியலின் நீதியில் நம் முனைவு விழலன்று என்பதற்குச் சான்று காட்டுமளவிலேயே நிற்கும்.

தொன்றுதொட்டு நிலவிவந்த இந்த மதிமயக்கத்தை வித்தகர் சாக்ரடீஸ் களைந்தெறிந்ததை யறிவோம். நற்றொடர்புகள், நுண்மதி, நற்பேறு, கூடினசித்தம் போன்ற பற்பல அம்சங்களைச் சார்ந்திருக்கும் புறவெற்றி பாரமார்த்திக ரீதியான அகவெற்றியாகாது என்பதை அறியத் தவறியதாகும். மனிதனின் உண்மை இன்பம் அகநிலையைச் சார்ந்தது. சாக்ரடீஸ் கூறியதேபோல் 'நல்லதும் நேர்த்தியானதுமான ஆன்மாவைப் படைத்திருப்பதே' அவ்வுண்மை மகிழ்ச்சிக்குச் சான்றாகும்.

* * *

நெறி நோக்குடையோரை இலக்காக்கக்கூடியதாகும், மூன்றாவது மனக்கிறக்கம். ஏதோவொரு பகுதியையே முழுமையான தவறாக எண்ணுவதன் விளைவு இது எனலாம்.

நான் விளக்கப்புகுவது இதுதான்: பொதுநலக் கருத்தொன்றை எடுத்துக்கொள்வோம். இது ஏதோவொரு குழுவின் சார்பிலோ, ஒரு தொழில் வகையைக் குறித்தோ, நாட்டு நன்மைகளைச் சார்ந்தோ இருத்தல் கூடும். புத்திசாலிகள் என்று எண்ணக்கூடிய சிலர் இத்தகைய ஈடுபாடுகளே சாலச் சிறந்தது, உலகனைத்திற்கும் ஏற்புடையது, நன்னெறி தழுவியது என்றெல்லாம் கருதுதல்கூடும். ஆயின் இவர்கள், இவையெல்லாவற்றிற்கும் மேலான பொதுநலச் சிறப்பொன்றை—எதைப் பேணினால் மாத்திரம் நம் நன்னடத்தைக்குச் சான்று தருமோ அவ்வொன்றைப் புறக்கணித்தவராவர்.

தாங்கள் ஈடுபட்ட தொழில் வகையோ தாங்கள் பொறுப்பேற்று நடத்தும் ஒரு குறிப்பான வேலையோ அமெரிக்க நலனுக்கு உகந்ததாகும் என்று கருதுகிறார்களோ அது மனித குலத்துக்கே நலந்தருவதாகும் என்று அவர்கள் நினைக்கின்றனர்; இம்மியும் மாசில்லா மனச்சாட்சியுடன் அவர்கள் இவ்வாறு நம்புவது மனிதப்பண்பில் நம்பிக்கையற்று நையாண்டி செய்யும் பான்மையருக்கு எரிச்சலை மூட்டுகிறது. அவ்வகையில் தாங்கள் செயலாற்றப் புகுந்திருந்தால் தார்மீக நியாயம்

குறித்து கவலைப்பட்டிருக்கவே மாட்டோமே என்பதை நன்கறிந்திருப்பதாலேயே கோபம் கொள்கிறார்கள்.

* * *

நான்காவது தப்பெண்ணம் இது: உயர்ந்தோர் என்று கருதப்படும் எவரையுமே சமத்துவம் என்ற பெயரால் வெறுக்கும் சிறுவர்களோடும் சிறுமிகளோடும் ஒவ்வொரு பேராசிரியரும் தொடர்பு கொள்ள நேருகிறது. அறிவு வளர்ச்சியின் ஏற்றத்தாழ்வைக் கருதாமலேயே விஞ்ஞானத்தைவிட விவேகம் சிறந்தது என்றோ, ரஸாயனத்தைவிடத் தத்துவசாஸ்திரம் போற்றத் தக்கது என்றோ கூறுவதை இச்சிறுவர்கள் மறுத்தலிக்கிறார்கள்.

* * *

இது ஐந்தாவது பிரமை: நீங்கள் சிந்தனையாளராக இருக்கும்பட்சத்தில் சலிப்பூட்டும் சிடுமூஞ்சியாக உங்களைச் சில சமயங்களில் அமெரிக்கர் கருதுவதாகத் தோன்றுகிறது. ஏனெனில் சிந்தனை செய்வது என்பது அவர்கள் கருத்தில் ஒரு மாபெரும் தொல்லை.

* * *

ஆறாவது மனமயக்கம் இதுதான்: எந்த மனிதருக்குமின்றிச் சட்டத்துக்கே பணிவதாக நீங்கள் நம்புவதாகத் தோன்றுகிறது. சுதந்தர மக்கள் என்னும் உங்கள் நிலையானது மற்ற எவரும் உங்களை ஆள இடம் தராது; சட்டப்படியுள்ள அதிகாரங்களைச் சட்டத்திற்கேற்பப் பிரயோகித்தாலும்கூட அவர்களுக்கு நீங்கள் கட்டுப்படுவதற்கில்லை; சட்டத்திற்கு மட்டுமே—அதாவது, தலைகாலோ அன்றி ஆத்மாவோ அற்ற அருவமொன்றுக்கே—உங்களை ஆள அருகதை உண்டு என்றும் நீங்கள் நினைப்பதாகக் காண்கிறது.

* * *

ஏழாவது மனமயக்கம் இதுவே: திருமணம் என்பது அதில் சம்பந்தப்பட்ட இரு கூட்டாளிகளுக்கும் பூரணமான கனவுலகக் காதல் நிறைவை அளிப்பதோடு, இருவரும் தத்தம் ஆன்ம நிறைவுக்குற்ற வாய்ப்பும் அது அளிக்கவேண்டும் என்றும் அநேகஅமெரிக்கர்கள் அபிப்பிராயப்படுவதாகத் தோன்றுகிறது.

# 16

## திருமணமும் இன்ப நுகர்ச்சியும்

கடந்த அத்தியாயத்தில் நான் குறிப்பிட்ட அமெரிக்கரின் பிரமைகளில் கடைசியானது—கலியாணம், காதற் கனவுகள், ஆன்ம நிறைவின்பால் தேட்டம் ஆகிய அம்சங்களைச் சார்ந்தது—மிக முக்கியமான பிரச்னைகளை எழுப்புவதாகையால் தனி விளக்கத்திற்குரியதாகும்.

சில பொது அம்சங்களைக் கருத்தில் கொண்டு இதை விளக்கப்புகுவது உசிதமாகும். நான் எதை மனத்திற் கொண்டு காதற்கனவு பற்றிக் கூறினேன் என்பதை மேலும், தெட்டத் தெளிவாக முதற்கண் கூறுவேன். விலங்குணர்ச்சியைக் கடந்து மக்களின் இயல்பாயமைந்த வெறும் காதற்கற்பனையில் திளைக்கும்போது அது காமவேட்கையாக உருமாறுகிறது. அந்நிலையில், மனிதனின் உணர்ச்சிகள், எண்ணம், படைப்பாற்றல் ஆகிய அனைத்தையும் உயர்த்தி உவகை கொள்ளச் செய்யும் அது. அக்கணம் முதல் அவையெல்லாம் அடிப்படையான ஆர்வவெறி நிறைந்தவையாய் ஆக்கம் பெறும்.

இத்தகைய காதல் மனிதனைத் தன்னையும் கடந்து—கற்பனையுலகில் ஈர்த்து, கவி சித்திரிக்கும் சொர்க்க போகத்தில் மூழ்த்தும். தான்காதலிக்கும் ஒருத்திக்கே தன்னை எக்காலத்துக்கும் அறவே அர்ப்பணித்துவிட்டதாக அது அவனை நம்பச் செய்யும். அவளுக்காகவே தான் வாழ்வதாகவும் அவனை நினைக்கத் தூண்டும். ஆனால் உண்மையிலோ, தான் காதலிக்கும் அவளை அத்துணை ஆர்வத்துடன் பாராட்டுவதற்குத் தூண்டிய மூலகாரணம் அவளைத் தன் வசப்படுத்திக் காம நுகர்ச்சிக்கு உட்படுத்துவதேயாகும்.

அன்னவள்பால் கொண்ட காதல், சிறிதும் தன்னலமற்றது, தூய்மையானது, நிரந்தரமானது என்றெல்லாம் வாய்ப்பந்தல் வீசுவது, உண்மையில் வெறும் காமப்பித்தின் மயக்க

மொழிகளேயன்றிப் பிறிதில்லை. இதைத்தான் காதற் கனவு என்றேன்.

எனவே, காமவேட்கையும் இன்ப நுகர்ச்சியுமே முக்கிய நோக்கம், மனிதனை இவ்வாறு உந்தும் ஆற்றல் என்பது தேற்றம். விலங்குணர்ச்சி உயர்ந்த இயல்பு பொருந்திய மனிதன் வாயிலாக வெளிப்படும்போது அதைக் காதற்கனவு என்கிறோம். அதன் இயல்பு மூவ்வகையில் தலைகாட்டுகிறது; முதலாவதாக, நிலைத்து நிற்கும் தன்மையை இழந்து, மங்கி மறையக்கூடியதாகிறது. இரண்டாவதாக, நேர்மை நீங்கிக் காதலுணர்ச்சி பிறிதோரிடத்தில் பாயக்கூடும். மூன்றாவதாக இவ்வாறு பிணக்காக எழுந்த காதலுக்கும், சுயநலத்தைக் கருதும் இயல்புள்ள காதலுக்குமிடையே சிக்கித் தவிக்க நேரிடுவதாகும்.

இத்தகைய சூழ்நிலைகளில் கற்பனைக் காதல் உணர்ச்சி திருமணத்தில் கொண்டுவிடும்போது அக்காதல் வெற்றியின் கொடுமுடியாகும் எனக்கருதுவது வீண் பிரமையாகும்.

இதை மனிதகுலம் நன்கறிந்துவந்திருப்பதால் பல நூற்றாண்டுகளாகத் திருமணத்தை வெறும் சமூகச் சடங்காக அது கருதி வந்திருக்கிறது; அதில் சுயவிருப்பப் போக்கு தனிக் காதலுக்கும் இடம் மிகமிகக் குறைவே என்று மனிதசமூகம் நினைத்து வந்துள்ளது. குடும்ப நலன்களையும் இனநலன்களையும்—அரச குலத்தைவரைப் பொறுத்தவரையில் தேசநலன்களையுமேகூட—கருதிப் பெற்றோரால் ஏற்பாடு செய்யப்பட்ட திருமணங்களை மனத்திற்கொண்டே இதைக் கூறுகிறேன். இம்மாதிரி நடந்த திருமணங்கள் சிலவற்றில் மணமேடைக்கு வருமுன் பையனும் பெண்ணும் சந்தித்ததுகூடக் கிடையாது!

கற்பனை லட்சியக் காதலும் தாம்பத்தியக் காதலும் முற்றிலும் வேறான விஷயங்கள் என்றும் கற்பனைக் காதலை முழு நிறைவு எய்தச் செய்வது கலியாணத்தின் லட்சியமல்ல என்றும் கருதிவந்தது துயர்படிந்த அவிவேகமாகும்.

எனினும் காலப்போக்கில் ஆடவரும் பெண்டிரும் தங்கள் தனிமதிப்பையும் முக்கியத்துவத்தையும் அதிக அளவில் உணரத் தலைப்பட்டார்கள்; அந்த உணர்ச்சி வளரவளர நான் மேலே கூறிய திருமணம் பற்றிய சமூகக் கொள்கை பெருந்தீங்கு விளைவிக்கும் கொடிய சம்பிரதாயமாக உருவெடுத்தது. குறிப்பாகச் சமீப காலத்தில் பல ஆண்களும் பெண்களும் திரு



மணத்திற்குப் புறம்பாகவே பரஸ்பரக் காதலையும், (மனித மனத்தில் ஆழப் பொதிந்துள்ள கனவான) லட்சியக் காதலையும் விரும்பிப்பெறத் தலைப்பட்டார்கள். இதன் பயனாக, பரஸ்பரநேயமும் ஆரம்பக் காலத்திலாவது ஓரளவு கற்பனை லட்சியக் காதலும் திருமணத்துக்கு இன்றியமையாதவை அல்லவெனினும் மதிப்பும் நலமும் பெற்றோங்கவாகிலும் அதுதேவை என்பதைத் தெரிந்துகொண்டுவிட்டனர் பலர்.

இறுதியாக இவ்விஷயத்தின் சாரமென எனக்குப்படுவது இவைதாம்: முதலாவதாக, ஓர் ஆசையோ ஆர்வமோ உந்தும் காதல், கற்பனைக் காதலுணர்ச்சியால் எழும் காதல்—இவற்றால் தூண்டப்படும் ஆற்றல் திருமணத்தை நிச்சயம் செய்துகொள்வதற்கு ஓரளவாவது அடிப்படை அம்சமாகயிருத்தல் வேண்டும். இல்லாவிடின், திருமணப் பந்தலுக்குப் புறம்பாக கற்பனை லட்சியக்காதல் ஒன்று தலையெடுக்குமாயின் மனிதனால் அந்தச் சபலத்தைச் சமாளிப்பது எளிதல்ல. ஏனெனில், மனிதனை மிகுந்த துயரத்துக்கு ஆளாக்குவது அவன் வைத்திருந்த ஒன்றை இழப்பதாலன்று; தன்னிடமில்லாத ஒன்றைப் பற்றியும் அது ஏன் தன்னிடமில்லை என்பதன் காரணத்தை அறியவியலாமை குறித்துமே அவன் அதிகத் துயருறுகிறான். கற்பனையின் விளைவாக எழுந்த காதல் முழு நிறைவு எய்தச் செய்வதைப் பிரதான லட்சியமாகக் கொள்வதற்கு மாறாகத் திருமணவாழ்க்கையின் பொறுப்பு மனித இதயத்தில் முற்றிலும் வேறு வகையான பணியைப் புகுத்துகிறது என்பது இரண்டாவது விஷயமாகும். மனத்தின் அடித்தளத்தில் மர்மமானதொரு ரஸவாத வித்தையை அது செய்யவேண்டியுள்ளது; அதாவது, கற்பனைக் காதலை (ஆரம்பக் கட்டத்தில் அற்ப அளவில் இருந்திருந்தாலும் அதையும்கூட) மெய்யானதும், குலைக்கவே முடியாததுமான மனிதக் காதலாக அது மாற வேண்டியிருக்கிறது. இது உண்மையிலேயே தன்னலப்பற்றற்ற காதலாயினும் காம உணர்ச்சியை அறவே விலக்கிவிடுவதல்ல. ஆயினும் இக்காம உணர்ச்சியும் இன்பநுகர்ச்சியும் தேய்ந்து அவற்றிலிருந்து விலகிநிற்கும் பான்மை அளிக்கிறது. ஏனெனில், அடிப்படையில் ஆன்மீகத் தன்மை படைத்ததே இது—மற்றொருவரின் பொருட்டு ஒருவன் தன்னை முழுமையாகவும்,

மறுபடியும் மாற்ற முடியாத வகையிலும் வழங்கிக்கொள்ளும் விருப்பம் உடையது இது.

எனவே திருமணம், ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே மெய்யான காதலிணக்கமாக இருக்கவியலும். மணல் வீடன்றிக் கற்கோட்டையேயாகும் அந்தத் தாம்பத்தியம். ஏனெனில், மிருகப் பிராயமான காதலன்றி மெய்யான மனிதத் தன்மையும், ஆன்மீகவியல்பும் படைத்த ஒருவன் தானே தேர்ந்த உண்மையான காதலை அஸ்திவாரமாகக் கொண்டது அது. தியாகம், துறவு—தூய்மைச் செயல்கள் ஆகியவற்றாலாய கடும் விரதத்தினால் உருவானது அது. பின்னர், தங்குதடையற்றதும் இடையறுததுமான உணர்ச்சி, எண்ண வெள்ளத்துக்கு ஆளாகும் இருவரில் ஒவ்வொருவரும் காதல் காரணமாக மற்றவரின் சொந்த வாழ்க்கையில் மெய்யாகப் பங்குகொள்கிறார்; இயல்பாக மற்றவரின் மாற்றமுடியாத உடைமை அது என்பது வெளிப்படை. அதன் பிறகு இருவரும் ஒருவருக்கொருவர் ரட்சக தேவதைபோல் ஆகக்கூடும்—பரஸ்பர குற்றங்களை மிகுந்த அளவுக்கு மன்னிக்கவும் ரட்சக தேவதைகள் போலவே அவர்கள் இசைந்திருப்பர். பரஸ்பர மன்னிப்பையொட்டிய வேதவிதியானது பரலோக நியதியைப்பொறுத்து மட்டுமின்றி இந்த இகவுலக நியதிக்கும் பொருந்தக்கூடியதான ஒரு அடிப்படைத் தேவையைத் தெளிவுபடுத்துகிறது என்றே நினைக்கிறேன். குடும்ப மக்கள், அரசியல்குழு ஆகியவற்றில் இயற்கையாய் அமைந்த உறவுபாட்டுக்கும் அந்தப்பான்மை பொருந்தும். அதாவது, ஒவ்வொன்றும் மற்றொன்றின் நன்மையை நாடி விமோசனம் தேடித்தருவதில் மெய்யாகவே தன்னை அர்ப்பணித்துக்கொள்ள வியலும்.

* * *

இந்தப் பொதுப்படை அம்சங்களுக்குப்பின் இனி அமெரிக்க அரங்கை ஆராய்வோம்—விஷயத்தைச் சுருக்கமாகக் கூறுவதோடு நிறுத்திக்கொள்கிறேன். ஏனெனில், திருப்திகரமாக ஆராய முயல்வதென்றால் ஒரு முழுப் புத்தகமே அதற்குத் தேவைப்படும். புத்தகங்களைப்பற்றிப் பேசும்பொழுது சில ஆண்டுகளுக்குமுன் நான் படித்த 'அமெரிக்காவில் காதல்' (லவ் இன் அமெரிக்கா) என்னும் நூல் எனக்கு ஞாபகம் வருகிறது; டேவிட் எல். கோன் எழுதிய அதில் சுவையான பல விஷயங்கள்பற்றிக் கூறப்பட்டுள்ளன.



ஆண்—பெண் உறவுப் பிரச்னை இந்நாட்டைப் பொறுத்தவரையில் முதலாளி—தொழிலாளி உறவு, இனங்களிடை உறவையும்விட அதிக முக்கியத்துவம் படைத்ததாக எனக்குத் தோன்றுவதை நான் முதலில்கூற விரும்புகிறேன். அடுத்து, சமூக அந்தஸ்து, உறவினர் நலன், ஆஸ்தியில் அக்கறை ஆகியவற்றைவிடப் பரஸ்பரக் காதலையே கலியாணத்துக்கு அஸ்திவாரமாக்கவும், உரிமைகளையும் மதிப்பையும் பொறுத்துச் சமதை உடையவர்கள் என்ற முறையில் கணவன், மனைவி ஆகிய இருவருக்கும் அதனை மகிழ்ச்சி தேடித்தரும் சாதனமாக்கவும் மிகுந்த தைரியத்துடனும் நல்லெண்ணத்துடனும் அமெரிக்க ஆடவரும் பெண்டிரும் முனைந்து முயன்று வருவதாக எனக்குப் படுவதைக்கூற விழைகிறேன். இந்த முயற்சி பெருமளவு வெற்றிகரமாக இருப்பதாகத் தோன்றுவிடினும், ஏராளமானோரைப் பொறுத்து இந்த நல்ல எண்ணமானது மனக்கிலேசத்திலும் மோதலிலுமே முடிகிறதெனினும் இதனால் நன்மையே விளைகிறது. நான் சற்றுமுன் கூறிய நோக்கத்தின் பொருளைப் புரிந்துகொள்வதில் ஏதாவது அடிப்படையான தவறினால்தான் இந்தக் கிலேசமும் மோதலும் விளைகின்றன. அந்த லட்சியத்தைப் பொறுத்தவரையில் தவறேதும் இல்லை; அதைப் புரிந்துகொள்ளும் முறையில்தான் பிசகு ஏற்படக்கூடும். (அதாவது, காதல் என்றால் கற்பனைக் காதல் என்றும், மகிழ்ச்சி என்றால் தனிப்பட்டவரின் ஆசை நிறைவு என்றும் பொருள் கொண்டால் இவ்விதம் நேரும்).

நான் குறிப்பிடும் இந்தப் பிரச்னையைப் பொறுத்த வரையில், இன்ப நாட்டத்தில் ஏராளமானோருக்குக் கானல் நீராகிவிடக்கூடிய ஆபத்து இருக்கத்தான் இருக்கிறது. எனினும் அடிப்படையான இரு நிரந்தர உண்மைகளை அமெரிக்கர் உணர்வரேயானால் (மனித விவகாரங்களில் சாத்தியமாகவுள்ள அளவுக்கு) இந்தப் பிரச்னையையும் வெற்றிகரமாகத் தீர்க்க வியலும்.

காதல் என்பது பாலுறவல்ல; திருமணத்துக்கு அஸ்திவாரமாக இருக்கவேண்டிய காதல் வெறுங்காம உணர்ச்சியைச் சார்ந்ததன்று; காதற் கனவுமன்று அது; டிரிஸ்டனையும்

ஐஸோல்டையும் தெய்விகக்கிறக்கம்கொள்ளச்செய்த ஆனந்த லாகிரியும்கூட அல்ல அது—இவையனைத்துக்கும் மாறாக இன்னும் ஆழ்ந்ததும் நிரந்தரமானதுமான ஒரு காதலே அது; சற்றுமுன் நான் குறிப்பிட்டவாறு, கற்பனைக்காதல் ரஸவாதத்தினால் மாறிச்சேரவேண்டும்; பாலுறவும் வேட்கையும் அதில் ஆரம்பத் தூண்டுகோல்களேயாகும்—இதுதான் முதலாவது நிரந்தர உண்மை. பக்குவப்பட்ட மனித உள்ளத்தில் ஆன்மீக ஆர்வம் எழும்போது இந்தக்காதல் ஆழ்ந்து நிலைத்து வேரூன்றி வளர்கிறது. அந்நிலையில், தன் உள்ளத்தின் அடித்தளத்தில் மற்றவரை முற்றிலும் அறிந்து பேணிப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்க ஒருவர் முன்வருவார்: அப்போது, தன்னால் காதலிக்கப்படுபவரின் நன்மை மகிழ்ச்சியிலேயே அவருடைய மனம் முனையும்.

இரண்டாவது நிலையான பேருண்மை இதுதான்: தனி ஒரு வியக்தி என்று ஒருவர் தம்மை நினைப்பதை (உண்மையில் அது சுயநலத் தனிப்போக்கன்றி வேறன்று, இறுதியாக நிலை நிறுத்தி நிறைவுகாணச் சந்தர்ப்பம் அளிக்கவேண்டுமெனக் கணவன்—மனைவியின் சம்மதிப்பின் பெயரால் திருமணத்தைப் பொறுத்து ஒருவர் எதிர்பார்க்கும் பட்சத்தில் அவர் மிகுந்த ஏமாற்றத்தையும் மனக்கசப்பையும் அனுபவிக்கத் தயாராகியே தீரவேண்டும். ஏனெனில், காதலின்றி—மெய்யான மனிதலட்சணக் காதலின்றி திருமணம் என்பது அடிமை நிலையேயாகும். மேலும், காதல் என்பது—மெய்யான மனிதலட்சணக் காதல் என்பது—ஒருவன் தன்னை அர்ப்பணித்துக் கொள்வதேயாகும். அதாவது, ஒருவரது தனிப்பட்ட ஆர்வ, ஆசைகளை அறிவுறுத்தி அனுபவித்து ஆனந்திப்பது என்னும் சுயநல நோக்கத்துக்கு நேர்மாறானதாகும் அது.

எனவே, இத்தகைய தன்னல ஆன்ம நிறைவை துறப்ப தன் மூலம்தான் மேலானதொரு சுதந்தர, இன்ப நிலைக்கு ஆடவரையும் பெண்டிரையும் மெய்க்காதல் இட்டுச் செல்ல முடியும். அந்த உயர்நிலை தூய்மையானது, பாரமார்த்திக இயல்புடையது. அந்நிலையில் ஒவ்வொருவருடைய தனிவியக்தியும் விரிவடைந்து மேலோங்குகிறது. அதுமுதல் ஒவ்வொருவரும் மற்றவருடன் ஒன்றிவிடுகின்றனர், அல்லது மற்றவரிடம் தம் ஆருயிரைக் காண்கின்றனர் எனலாம். விருப்பம் அல்லது



வேட்கையே காதல், என்பதற்கு மாறாக அதன் மூலப்பொருளுக்கேற்பக் காதலைப் பேரின்பமாகப் பார்க்கிறோம் இங்கு—அது மனிதனைத் 'தான்' எனும் பான்மையைக் கடந்து நிற்கச் செய்யும் ஆற்றல் படைத்தது.

நான் மேலே குறிப்பிட்ட நிரந்தரப் பேருண்மைகள் இரண்டும் இந்நாடு தவிர வேறெங்கும் அதிக அளவில் கடைப்பிடிப்பதாகவோ, அல்லது மண வாழ்வை அவற்றுக்கிணங்க அமையச்செய்வது எளிதென்றோ நான் கூறவில்லை.

ஆயினும் இவ்விரு பேருண்மைகளும் பரஸ்பரக் காதலை மட்டும் கலியாணத்திற்கு அஸ்திவாரமாக அமைப்பதற்கான அமெரிக்காவின் முயற்சி வெற்றிபெறச் செய்வதற்கு உண்மையிலேயே சாத்தியமான ஒரே வழியைக் காட்டுகின்றனவென்று கூறுவேன். அதோடன்றி, அஸ்திவாரமாக அமைவதோடு சம உரிமைகளும் மதிப்பும் படைத்த மனிதப் பிறவிகள் என்ற முறையில் கணவன்—மனைவி ஆகிய இருவருக்கும் மகிழ்ச்சி தேடித்தரக்கூடிய ஒரே வழியும் இதுவேயாம்.

சுருங்கக்கூறின், திருமணம் பற்றிய அமெரிக்கக் கருத்து, எதனை எய்த முற்பட்டுள்ளதோ அந்த லட்சியத்திற்கு இருக்கக்கூடிய ஒரே உண்மைப் பொருளை, மெய்யான மனிதாம்சப் பொருளை இவ்விரு நிரந்தரத் தத்துவங்களும் குறிக்கின்றன.

# 17

## வெள்ளை மனமும் அறிவுச் செருக்கின்மையும்

இங்குக் காணப்படுபவையும், அமெரிக்கக் கலாசாரத்தின் தனிச் சிறப்புக்களுமான கரவற்ற மனம், அறிவார்ந்த மரியாதை ஆகிய பண்புகளை நான் மிக மிகப் போற்றி வியக்கிறேன். உண்மையின் ஏதாவதொரு அம்சத்தை வெளிப்படுத்துவதற்கான மெய்யான ஆராய்ச்சியாகவும் முயற்சியாகவும் தென்படும் எல்லாவற்றையும் குறித்து இங்குப் போல் வேறெங்கும் ஆர்வத்தைக் காணவியலாது என்றே கருதுகிறேன்—நான் முன்னரே குறிப்பிட்ட அறிவு—வேட்கை, பரஸ்பர சகிப்புத்தன்மை, மனித முயற்சிக்கு மதிப்பு ஆகியவற்றையொட்டிய ஆர்வமாகும் இது. அறிவுத் துறையில் புது வழி காணும் பெருமுயற்சியாம் இது சம்பந்தப்பட்ட பல்வேறு அம்சங்களிலும் இந்த அளவு பரவலான அக்கறையோடு மனிதரைப் பொறுத்தும் தனியொரு சிரத்தை அமெரிக்கருக்கு இருக்கிறது. அமெரிக்கக் கல்வி ஸ்தாபனங்கள், ஆராய்ச்சி நிலையங்கள், தர்மநிதி நிறுவனங்கள் ஆகியவை மட்டுமின்றி ஆச்சரியமூட்டுமளவுக்கு ஏராளமான தனியார்களும் அறிவு என்னும் பொதுநிதியை எவ்வகையிலாவது பெருக்கக் கூடியவர்களைக் கண்டு பிடிக்கவும், மனித குலத்துக்கு ஆதாயம் தரத்தக்க வகையில் தங்கள் வேலையைத் தொடர்ந்து செய்ய அவர்களுக்கு உதவி புரியவும் துடிக்கின்றனர்—இத்தனையும் இணையற்ற முன் யோசனையுடனும் மரியாதையுடனுமே நடந்தேறுகிறது.

அமெரிக்க மக்களில் சில வர்க்கத்தாரிடையே இனத்துவேஷமும் மதப்பகையும் கடுமையான அளவுக்கு உள்ளன என்பது அனைவரும் அறிந்ததே. அறிவுத் துறையைப் பொறுத்தும் அத்தகைய வெறுப்பேதும் உண்டோ ?—ஐரோப்பாவைவிட இங்கு அது கணிசமான அளவு குறைவாக இருக்கிறது



என்பதையே அமெரிக்காவில் என் நெடுங்கால அனுபவத்திலிருந்து அறிந்துள்ளேன்.

பண்டிதர்கள், விஞ்ஞானிகள், பேராசிரியர்கள், மற்றுமிதரத் துறைகளில் சிறந்தோர்கள் ஆகியோரிடை இங்கும் மற்ற இடங்களைப் போலவே கடும் பொறுமை நிலவுகிறது என்பது மெய்தான்; விசித்திரப் பிரகிருதி என்பது போல் காட்டிக்கொள்வது, மிகுந்த மேதையும் தீவிரமும் படைத்த சீர்திருத்தவாதி போலத் தோன்றுவது, சமூகத்தினுல் ஏற்கப்பட்ட விதிகளுக்கேற்ப நடந்துகொள்ளாமல் இருப்பது முதலிய இழிவுகளை இங்கும் மற்ற இடங்களைப் போல எளிதில் மன்னிக்கப் படுவதில்லை என்பதும் உண்மையே.

ஆயினும் இது சமூக வாழ்க்கை சமூக விதிகள், சம்பிரதாயங்கள் ஆகியவற்றுக்கும் தான் பொருந்தும்; அதுவே தவிர ஒரு மனிதனின் பகுத்தறிவு புலப்படுத்தும் உட்பொருளைச் சார்ந்ததன்று இது. மேதக்க வாழ்க்கையையும், அறிவாற்றல்களையும், சம்பந்தப்பட்ட வரையில் கபடமற்ற மனம் நிலவுவதைத்தான் என் அனுபவத்தில் இங்கு கண்டுள்ளேன். நேர்மையும் தாராளத் தன்மையும் ததும்புகின்றன, இந்தத் திறந்த மனத்தில்—பண்பாட்டின் பொதுமுன்னேற்றத்திற்கு இது பேருதவியாகும்.

* * *

நான் நன்கு அறிந்த தத்துவ சாஸ்திரத் துறையிலிருந்து இதற்கு உதாரணங்கள் காட்ட விரும்புகிறேன். நான் 'தோமிஸ்ட்' மரபைச் சார்ந்த அறிவு நூலைப் பின்பற்றுபவன் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். போருக்குமுன் ஃபிரான்ஸில் 'தோமிஸ்ட்' இயக்கம் வலுவாக இருந்தது. உண்மையைப் பலமாகப் பறைசாற்றச் சக்தி படைத்திருந்த சில 'புரட்சிக்காரர்களி'ன் முயற்சியின் விளைவே அந்த வலுவுக்குக் காரணம். அவர்களுடைய பணியை அறவே பொருட்படுத்தாமல் இருப்பது தான் அன்றைய அதிகாரவர்க்க அறிஞர்களின் கொள்கையாக இருந்தது; இன்றும் இது நீடிக்கிறது. ஏனெனில், 13-வது நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு தத்துவஞானியிடமிருந்து இந்நாளையத் தத்துவத்துறைக்கு

எதையும் எதிர்பார்ப்பதற்கில்லை என்பது அவர்களுடைய கருத்து.

அமெரிக்காவைப் பொறுத்த வரையிலோ, தாமஸ் ஆக்வினஸைச் சமகாலச் சிந்தனையாளராகக் கருதும் தத்துவ சாஸ்திரிகள், கத்தோலிக்கக் கல்லூரிகளில் மட்டுமின்றி மதச் சார்பற்ற சர்வகலாசாலைகளிலும் போதிக்கின்றனர். இந்த சிகாகோ நகரிலேயே இது சம்பந்தமாக உலவும் சில கதைகள் நீங்கள் அறிந்ததே.[1]

ஆக்வினஸின் கொள்கையையொட்டி நன்னெறித் தத்துவத்தை பிரின்ஸ்டன் சர்வகலாசாலையில் போதித்த போது அங்கு நான் கண்ட சுதந்தர உணர்வும், நேசப் பான்மையும் எந்த ஐரோப்பியச் சர்வகலாசாலையிலும் என்னால் பார்க்க முடிந்திராது.

அத்யாபகர் என்னும் அதியுன்னத அந்தஸ்தை இப்போது நான் எய்திவிட்ட, பிரின்ஸ்டன் சர்வகலாசாலையைப் பற்றிப் பேசும்பொழுது (*1957*-இல் அத்யட்சகப் பதவியிலிருந்து ஓய்வு பெற்ற) 'ஹெரால்ட் டாட்ஸ்' அவர்களுக்கு நான் எவ்வளவு நன்றிக்கடன் பட்டுள்ளேன் என்பதைக் கூறவேண்டும். இது சம்பந்தமாக என் சொந்த அனுபவத்தையும் குறிப்பிட்டாக வேண்டும். *1947*, டிசம்பரில் மெக்ஸிகோ நகரிலிருந்து ரோம் நகரத்துக்குத் திரும்புங்கால் விமானமாற்றத்தை

---

*1.* 1933, மார்ச் மாதத்தில் சிகாகோவுக்கு நான் முதல்முறை வந்தபோது சட்டக் கல்லூரியில் 'தோமிஸ்ட்' தத்துவத்தை மார்ட்டிமர் ஆட்லர் போதித்துக் கொண்டிருந்தார். தத்துவத் துறை பிரிவினருக்கு அது பிடிக்கவில்லை. அப்போது தான் பாரிஸிலிருந்து வந்து டோரான்டோவிலுள்ள மத்தியகாலப் படிப்புத்துறைக் கழகத்தில் (டோரான்டோவுக்கும் எடீன் கில்ஸன் முதலானோருக்கும் நான் குறிப்பாகக் கடமைப்பட்டுள்ளேன்.) சேர்ந்திருந்த நான், சிகாகோவில் தான் முதன்முதலில் அடிவைத்து அமெரிக்காவைக் கண்டேன். ஆட்லரை ஆதரித்தவரும், அப்போது சிகாகோ சர்வகலாசாலை அத்யட்சகராக இருந்தவருமான ராபர்ட் ஹட்சின்ஸ் அவர்களால் நான் அழைக்கப்பட்டிருந்தேன். ஆங்கிலத்தில் ஒரு வார்த்தைகூட அறியாமலிருந்தும் அம்மொழியில் முதல் முறையாக அங்கு பிரசங்கம் புரிந்தேன்.



யொட்டி நியூயார்க் நகரில் நான் சில மணி நேரம் தங்க நேர்ந்தது. அப்போது டாட்ஸ் அங்கு வந்திருந்தார்; வாடிகன் நகரில் நான் வகித்துவந்த ராஜீயப் பதவியை விட்டு நீங்கும் பட்சத்தில் பிரின்ஸ்டன் சர்வகலாசாலையில் பேராசிரியராக என்னை நியமிக்க உடன்படுவதாகத் தெரிவிக்கும் பொருட்டு அன்புகூர்ந்து அங்கு வந்தார்; ஆக்வினஸின் தத்துவங்களுக்குத் தன்னை அர்ப்பணித்துக்கொண்ட தத்துவசாஸ்திரி என்ற முறையிலேயே பேராசிரியராக நான் பணியாற்றலாம் என்றார் அவர். ப்ரெஸ்பிடீரிய மதப் பிரிவினரால் தோற்றுவிக்கப்பட்ட மதச் சார்பற்ற நிலையமாகும், பிரின்ஸ்டன் சர்வகலாசாலை. இதுவே அத்தகைய பேராசிரிய நியமனத்தில் அவரை அதிக அக்கறை கொள்ளச் செய்தது.

நான் குறிப்பிடும் சுதந்தர உணர்வு, பெரிய சர்வகலாசாலைகளில் மட்டுமின்றி (அமெரிக்கக் கல்விமுறையின் முதுகெலும்பான) சிறிய கல்லூரிகளிலும்கூட இடையறுமல் இயங்கக் காணப்படும் சுய விமர்சன, சுய அபிவிருத்திகளுடன் பிணைபட்டிருக்கிறது என்றே எண்ணுகிறேன்; 'நோக்ருதேம்' சர்வகலாசாலை போன்ற பெரிய கத்தோலிக்கச் சர்வகலாசாலைகளில் போலவே பிரின்ஸ்டன், சிகாகோ போன்ற மதச்சார்பற்ற பெரும் சர்வகலாசாலைகளிலும் இதைப் பார்க்கலாம். நோக்ருதேம், சிகாகோ சர்வகலாசாலைகளுடன் எனக்கு நெடுங்காலப் பழக்கமுடைய ஹண்டர் கல்லூரியிலும்—*1940* அக்டோபர் *10*-ம் தேதியன்று அதன் தலைவராக ஜார்ஜ்ஷுஸ்டர் பதவியேற்ற போது பேசும் கௌரவம் எனக்குக் கிட்டியது—அடிக்கடி பாடம் போதிக்க எனக்குக் கிடைத்துள்ள வாய்ப்புக் குறித்துப் பெருமை கொள்கிறேன்; கிறிஸ்தவ மஹாபுருஷரான ஷுஸ்டரினால் ஹண்டர் கல்லூரியிலும் அதே சுதந்தர உணர்வு ஊக்கி வளர்க்கப்படுகிறது என்பதைக் குறிப்பிட வேண்டும்.

சொல்ல எவ்வளவோ இருப்பினும் என் சொந்த அனுபவங்களை இதோடு நிறுத்திக்கொண்டு மேற்கொண்ட விஷயத்திற்கு மீண்டும் வருகிறேன்; பலதரப்பட்ட பிரிவுகளைச் சேர்ந்த தத்துவ விமர்சனங்கள் அனைத்தும் அமெரிக்கத் தத்துவ உலகில் தற்காலம் தீவிரமாக இருக்கும் துறைகளில் 'நவ—தோமிஸம்' எனத் தாம் வர்ணிப்பதும் ஒன்றென்பதை ஒப்புக்

கொள்கின்றன. உதாரணமாக, கல்விஆராய்ச்சிக்கான தேசிய்க் கழகம் 1955-ஆம் ஆண்டின் தன் வருடாந்தரப் புத்தகத்துக்கு 'நவீன தத்துவத்துறைகளும் கல்வியும்' என்ற தலைப்பில் ஒரு அத்தியாயம் எழுதித்தரும்படி ஒரு 'தோமிஸ்ட்' தத்துவ சாஸ்திரியைக் கேட்டுக்கொண்டது. (ஆகவே, இந்த ஆண்டு நூலின்படி 'தோமிஸ்ட்' சித்தாந்தமும் நவீன தத்துவஞானத் துறைகளில் ஒன்ருகிறது. ஃபிரான்ஸிலுள்ள ஷார்போன் சர்வகலாசாலையைச் சேர்ந்த எமிலி ப்ரேஹியரோ, அல்லது அவருடைய சகாக்களில் எவருமோ இவ்வாறு ஏற்றதில்லை என்பது குறிப்பிடத் தக்கது.) இவையெல்லாம் அறிவுத்துறையில் நேர்மையையும் விருப்பு—வெறுப்பற்ற போக்கையுமே குறிக்கிறதல்லவா ?

என்னளவில் தனி முக்கியத்துவம் வாய்ந்த மற்ருெரு உதாரணத்தையும் கூறுகிறேன் : தாமஸ் ஆக்னிஞஸின் உரையாசிரியர்களுள் 17-வது நூற்ருண்டில் வாழ்ந்த செயின்ட் ஜான் என்பவர் தலைசிறந்த ஒருவர். நானும் என் நண்பர்களும் அவரை ஆசாஞகக்கொண்டு மிக்க அன்பு செலுத்தி ஆதர்சம் பெற்று வந்தோம். ஆனுல், அவரைப் போற்றிப் பார்ப்பதில் நாங்கள் தனித்தே நிற்க நேர்ந்தது. நான் சற்றுமுன் குறிப்பிட்ட ஃபிரெஞ்சு அறிஞர்கள் அவரை அறிந்தேயிருக்கவில்லை. அது மட்டுமன்று; ஆக்விஞஸின் தத்துவங்களில் அக்கறை கொண்டிருந்தவர்களில் பெரும்பாலோர் யாதொரு உதவியுமின்றித் தாங்களாகவே (ஆக்விஞஸின்) 'ஸும்மா' வைப் படித்துக்கொள்ள வியலுமென நினைத்தனர். எல்லா உரையாசிரியர்களையும் அவர்கள் வெறுத்தனர். குறிப்பாக, அரும்பதங்களையும் சிக்கலான தடையையும் கையாண்ட ஜான் அவர்களை அறவே வெறுத்தொதுக்கினர். எனினும் இறுதியில் அவருடைய உரைகளைக் கொண்ட நல்லதொரு பதிப்பை லத்தீன் மொழியில் ஃபிரான்ஸிலும் இத்தாலியிலும் பிரசுரிக்க முடிந்தது; ஆன்மிக வாழ்வு பற்றிய அடிப்படை நூலெனத் தக்க முறையில் 'பரிசுத்த ஆவி' யின் அருட்பிரசாதங்கள் பற்றி அவர் எழுதிய விளக்கவுரையொன்றின் ஃபிரெஞ்சுமொழி பெயர்ப்பைக்கூட என் மனைவியால் வெளியிட இயன்றது. எனினும் அவருடைய தர்க்க, தத்துவ நூல்களை ஃபிரெஞ்சு மொழியிலோ அன்றி இத்தாலிய, ஜெர்மானிய பாஷை



களிலோ மொழி பெயர்ப்பது பற்றி நினைக்கக்கூட முடியாமல் இருந்தது. எனவே இந்தப் பொதுச் சூழ்நிலையின் விளைவாக எங்கள் சிறிய குழுவைப் பொறுத்த வரையில், பொறுக்கியெடுக்கப்பட்ட ஒரு சிலர் மட்டும் பங்குபெற்ற அறிவுக் களஞ்சியத்தை நல்கிய துறவி போன்ற ஞானியாராக அவர் திகழ்ந்தார்.

அப்படிப்பட்ட ஜான் எழுதிய 'உலகாயதத் தர்க்க சாஸ்திரம்' என்னும் 650 பக்கங்கள் கொண்ட நூல், என் நண்பரும் சகாவுமான பேராசிரியர் ய்வெஸ் ஸைமனுலும், அமெரிக்கரான இரு இளம் அறிஞர்களாலும் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு இங்கு வெளிவந்துள்ளது. சிகாகோ சர்வகலாசாலை அச்சகம் பிரசுரித்த அப்புத்தகத்தை இந்நாட்டு தத்துவ விளக்க சஞ்சிகைகள் வெகுவாக ஆதரித்து வரவேற்றுள்ளன. பெர்க்லி அல்லது லீப்னிட்ஸின் நூல்களைப் போலவே இன்று ஜானின் புத்தகங்களையும் சாதாரணமாகப் படிக்க முடிகிறதென்ருல் அதற்கு அமெரிக்கக் கலாசாரத்தின் விருப்பு—வெறுப்பற்ற இயல்புதான் காரணம்; நூற்ருண்டுக் கணக்காக நீடித்து வந்த இந்த வெறுப்பு இப்படி நீங்குமென இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் எவராவது கனவுகூடக் கண்டிருக்க முடியுமா ?

* * *

நன்றியறிதல் தான் மரியாதையின் மாண்புமிக்க உருவமெனலாம்.

அமெரிக்கா நம் நாட்டுப் பெரியோர்களின் வாழ்க்கைக்கு ஊறுவிளைவிக்கிறது என்பது மெய்தான். ஆனுல் மற்றும் சில நாடுகளில் போலச் சவ அடக்கச் சொற்பொழிவுகளில் இதற்குச் சிரத்தை கிடையாது. தன் நாட்டுச் சான்ருேர்களைப் பல சோதனைகளுக்கு ஆளாக்குகிறது அமெரிக்கா; பகைப்பலங்களால் அவர்கள் கடுமையாகத் தாக்கப்படுவது கண்டு மகிழ்கிறது. ஆயினும் ஆன்ருேர் வாழ்நாளிலேயே அவர்களை மதித்து நேசிக்கவும் செய்கிறது.

சான்ருேர்களை மட்டுமின்றிச் சதாரணமக்களை சம்பந்தப்பட்டவர்களின் அன்ருட வாழ்வியலைப் பொறுத்தவரையில் சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் நன்றி பாராட்டவும்,

அதனை வெளியிடவும் அஞ்சாத அளவுக்குத் தாராள மனம் படைத்தவர்கள் அமெரிக்கர்கள் என்பதையும் குறிப்பிட வேண்டும்.

ஆணித்தரமாக இதனைக் கூறியுள்ளார், "ஷாதோப்ரியார்" "மனிதர்கள் நன்றி மறப்பவர்கள் தாம்; ஆனால் மனித குலம் நன்றி காட்டத்தான் செய்கிறது" என்றார்.

இந்நாட்டைப் பொறுத்தவரையில் மனிதனுக்கும் மனித குலத்துக்கு மிடையேயுள்ள தொலைவு அதிகமாக இருப்பதாகத் தோன்றவில்லை என்றே கூறுவேன்.

# 18

## தொண்டும் ஓய்வும்

அமெரிக்க நாகரிகத்தின் சின்னமாக டாலர் நாணய மொன்றை 'ஸாம் மாமா' (அமெரிக்க மக்கள்) விசிறுவதாக வெளிநாடுகளில் அமெரிக்காவுக்கு விரோதமாக வெளியாகும் கேலிச்சித்திரங்கள் பலவற்றில் காட்டப்படுகிறது. இதில் குரோதத்தைவிட அறியாமைதான் அதிகம் நிலவுகிறது. உண்மையில், பணத்தைவிட வேலை தான் அமெரிக்க நாகரிகத்தை ஆட்டிப் படைக்கிறது.

இங்கு ஒவ்வொருவரும் வேலை செய்கிறார்கள், பாடுபட்டு உழைக்கிறார்கள். இவ்வகையில் இங்கு அனைவரும் அடிப்படையில் சமமானவர்களே; வாழ்க்கை நடத்துவதற்காக வேலை செய்யும் பாட்டாளிகளே (அடைமானக் கடன்கள். தவணைப் பட்டுவாடா முறைகள் ஆகியவற்றின் சுமையேறியவர்களே) அனைவரும். அன்றாடம் பல மணி நேரம் உழைத்த பின் கைவேலைப் பொருள்கள் செய்தல், தங்கள் வீடுகளை அபிவிருத்தி செய்வது, போன்ற மற்றெந்த வேலையிலாவது அவர்கள் மூழ்கிவிடுகிறார்கள். டாக்டர் பட்டர் ஃபீல்டைப் போலச் சிலர் சொந்தமாக வீடு கட்டுவதிலும் ஈடுபடுகிறார்கள். (வெஸ்லியன் சர்வகலாசாலை அத்தியட்சகர் பதவியை ஏற்றபோது அவர் தாமே கட்டிய தம் மரவீட்டைவிட்டு வர நேர்ந்தது குறித்து மிக மிக வருந்தினர். தங்கள் அலுவல்களைவிட இந்தப் பொழுது போக்கு வேலைகளைப் பொறுத்துத்தான் அமெரிக்கர்கள் அதிகப் பெருமை கொள்கிறார்கள்.

எனவே வேலைக்கும், ஜடப்பொருளையும் இயற்கையையும் மாற்றிப் பயன்படுத்தும் பணிக்கும் மதிப்புக் கொடுப்பதை அமெரிக்கக் கலாசாரம் வலியுறுத்துகிறது. இவையெல்லாம் பற்றி நவயுகம் மார்தட்டித் தடபுடல்படுத்துகின்றதென்றும் இவற்றின் அடிப்படையில் நிரந்தரப் பேருண்மைகள் பொதிந்துள்ளன. புராதன நாகரிகங்கள் புறக்கணித்த இந்த நிலை

யான நெறிகள் மனிதனுக்கும் சமூகத்துக்கும் ஆதார அவசிய முடையவை.

*　　　*　　　*

இருப்பினும்வேலைக்கு முழுமுதல் முக்கியத்துவம் அளிக்கப் பட்டு, ஓய்வின் மதிப்பு உணரப்படாதிருப்பது அமெரிக்க வாழ்க்கையில் ஓர் இழுக்கான அம்சம் என்பதும் உண்மை தான்.

கால நேரம் பற்றிய அமெரிக்கப் போக்கை ஆராய் வோம் : ஏதுமே செய்யாமல் இருப்பதற்கான அவகாசம் ஏதாகிலும் இங்கு எழுமேயானல் அது குறித்து அமெரிக்கர் ஒருவகை அச்சம் கொண்டு சங்கடப்படுவதாகவே எனக்குத் தோன்றுகிறது. ஒன்றும் செய்யாமல் சும்மா நிற்பதாலும், கனவுகளில் லயித்துக் காலம் கழிப்பதாலும் ஏற்படும் பெரும் பயனும், இவற்றின் பெருமதிப்பும் இங்கு உணரப்படவே யில்லை எனலாம். கமிட்டிக் கூட்டங்களும், அடிக்கடி நேரும் இவைபோன்ற நிர்வாகத் தொல்லைகளும் வகுப்புக்களை முடித்த பின் பேராசிரியர்கள் வாளாவிருக்கலாகாது என்பதற்காகவே கண்டு பிடித்துக் கட்டவிழ்க்கப்பட்டவையோ என்று கூட நினைக்கத் தோன்றுகிறது—அதாவது, ஓய்வாக அமர்ந்து சிந் திக்கவும், தங்கள் ஆராய்ச்சியைத் தொடர்ந்து நடத்தவும் பேராசிரியர்களை அனுமதிக்காமல் இருக்கவே இவ் வேற்பாடு கள் தோன்றியது போலக் காண்கிறது.

நட்புறவினுலும் நேரம் மிகவும் விரயமாகும்; சோம்பலும் நிறைந்த அளவில் சூழும். ஆனல் வேறு வேலையின்றி வெகு நேரம் வாளாவிருப்பது ஆக்க ரீதியிலான சிந்தனைக்கு அத் தியாவசியமாகும். எனவே தான் அமெரிக்க வாழ்க்கை முறை யில் ஓய்வு என்பது இன்று பெரியதொரு பிரச்னையாகி யிருக் கிறது. சமூக, தொழில் நுட்பத் துறைகளில் முன்னேற்ற மும்—தாமே இயங்கும் இயந்திரங்கள் போன்றவை மூலம்—தொழிலுலகில் வேலை நேரத்தை வரவரக் குறைத்து இப் பிரச்னையைப் பெரிதாக்குகிறது.

திரைப்படங்கள், ஒளிபரப்புப் படங்கள் (டெலிவிஷன்) போன்றவை மூலம் சோம்பிச் சும்மா விருக்க நேரும் முறை களினுல் முற்றிலும் அபகரிக்கப்பட அனுமதியாமல் மனித



னுக்கு உண்மையிலேயே பயன் தேடித்தரும் முறையில் ஓய்வு நேரத்தை ஈடுபடுத்துவதுதான் இதையொட்டிய முக்கியப் பிரச்னை. ஆன்மிகமான ஆனந்த நாட்டத்தில் ஓரளவு திளைக் கும் புதியதொரு மனப்போக்கு தோன்றி வளராத வரையில் நவீன உலகில் ஓய்வு நேர ஈடுபாட்டின் தரமானது வேலையின் தரத்துக்கேற்ப அமையாது என்பது திண்ணம்.

ஓரளவுக்கு இன்பம் துய்க்காமல் மனிதனல் இருக்க வியலாது என்று அரிஸ்டாடிலும் ஆக்வினஸும் எண்ணினர். ஆத்மிக ஆனந்தத்திற்கான வழி வகைகள் பறிக்கப்படுமே யானல் சிற்றின்ப சுகங்களை மனிதன் நாடத் தொடங்கிவிடு வான் என்றும் அவர்கள் கூறினர். இது உண்மையாயின், நவீன உலகெங்கிலும் அன்ருடம் செய்தேயாக வேண்டியிருக் கும் அளவிட்ட உழைப்பின் விளைவாக அலுத்துச் சலிக்கும் மனிதர்கள், தங்கள் உள்ளத்தில் உன்னதச் சுடரேதும் தூண் டப்படாததன் விளைவாகக் காதல் மயக்கத்துக்கு இரையாவ தில் வியப்பென்ன ? (முன்னமொரு அத்தியாயத்தில் குறிப் பிடப்பட்ட பண்டித பாணிகளை மேற்கொள்வதோடன்றிப் பண்டைய கிரேக்கர்களைப் போலவே வீனஸ் சிலையினிடம் நாட்டத்தில் இந்த மோகத்தின் புறச்சின்னத்தைக் காண்கி ருேம்).

அறிவையொட்டிய இன்பங்களையும், மற்றும் கலை, கவிதை, பெரு லட்சியப் பணிகள் ஆகியவற்றில் ஈடுபாடு, மனம் காணும் கனவுகளையும் கவலைகளையும் பிறருடன் பகிர்ந்து கொள்வது, அந்தராத்மாவுடனும் ஆண்டவனுடனும் மௌன மாக அளவளாவுவது முதலியவற்ருல் விளையும் மகிழ்ச்சிப் பெருக்கையும் அனுபவிக்க மனிதனுக்கு எத்தனை ஓய்வு நேரம் இருந்தாலும் போதாது.

நாம் வாழ்வதற்கு வேலை இன்றியமையாததுதான்; ஆனல் அதுவே இறுதி லட்சியமாகிவிடாது. மனித வாழ்க் கையை மேம்படுத்தவே வேலை செய்கிருேம். இவ்வாறு நம் வாழ்விலும் பிறர் வாழ்க்கையிலும் நாம் சாதிக்கும் இந்த அபிவிருத்தியின் விளைவாக மேன்மேலும் வேலை செய்வதன்றி வேறு பலன் கிட்டாதா ? அல்லது, நாம் ஓய்வுகொள்ள உத வும் இன்னும் மேலானதொரு நிலையையும் இது தேடித் தருமா? ஓய்வு என்பது பலவகைப்பட்டது. சோம்பியிருப்பது

தான் பாபம். வேலை செய்ததைவிட ஒரு மாற்று குறைவுதானெனினும் உல்லாசமான பொழுதுபோக்கு நல்லதே. ஆனால் சில வகையான ஓய்வுநிலை வேலை செய்யுமளவில் பெரிதும் விரும்பத் தக்கதே. உதாரணமாக, உள்ளம் மிகத் தீவிரமாக இயங்கி, அரைகுறையாகவாகிலும், பேருண்மையைக் கருதியோ, அன்றி, சாசுவதமான இறையன்புடன் தொடர்பு கொண்டோ ஓரளவு அமரத் தன்மையின் நற்பயனை வாய்க்கப் பெறுவது சாலச் சிறந்தது. சிறப்பான ஓய்வு முறைகளை ஓய்வு என்றே கூறமுடியாது ; இவை சித்திப் பேற்றுக்குப் புகுத்துவதாகும். இவற்றில் மிகச் சிறந்தது தியானத்தில் ஆழ்ந்திருக்கும் நிலையாகும். "சாந்தியை நிலைநிறுத்தி "ஆண்டவன் நானே என்பதை உணர்வாய் என்று வேத நூல் கூறவில்லையா ?

* * *

வேலை என்பதைச் சார்ந்தே மேலும் சில விஷயங்கள் கவனத்திற்குரியன. வேலையை வசதிகரமாகச் செய்வதற்கான தொழில்நுட்ப, செயற்கைச் சாதனங்கள் மலிந்துள்ளது நல்லதுதான் என்பதில் ஐயமில்லை. ஆனால் இந்த வசதிகள் தனிமனிதர்களின் இயற்கை ஆற்றல்கள் செய் திறன்கள் ஆகியவற்றை நலியச்செய்து வளர்ந்தோங்குமானால் நாகரிகம் அளவுக்கதிகமாகத்தான் போய்விடும்; நம்முடைய இயற்கை ஆதாரங்கள், ஆதிகால மனிதனின் தனிப்பெரும் திறனாகவிருந்த கூரிய உணர்வறிவு ஆகியவற்றை அதனால் நாம் வெகுவாக இழக்க நேரிடும். இயந்திரங்கள் மூலம் வேலை செய்வதன் விளைவாக நம் மனத்தில் படியும் பழக்க வழக்கங்கள் மிக நவீனமான சில கை வேலைகளில் நம் விரல்களின் நுண்ணுணர்வையும் சுறுசுறுப்பையும் பாதித்து விடுகின்றன. வெகு ஜாக்கிரதையுடன் வகுக்கப்பட்ட விரிவான திட்டங்கள்; நிர்ணயமான ஒழுங்குமுறைகள் ஆகியவற்றையே அனுசரித்துப்பழக்கப்பட்டுவிட்ட சாதாரண அமெரிக்கத் தொழிலாளி சில சமயங்களில் எதிர்பாராத நிலைமை எதிர்ப்பட நேரும்போது ஐரோப்பியத் தொழிலாளியைவிடத் திண்டாடிவிடுகிறான். இதையெல்லாம் நான் மறுக்கவில்லை. ஆயினும் இதனாலெல்லாம் பேராபத்து ஒன்றும் விளைந்துவிடாது.



அதிசயிக்கத்தக்க அளவுக்கு ஒளிவு மறைவின்றியும் புத்துணர்ச்சியுடனும் இந்நாட்டு இளைஞர்கள் காணப்படினும் தாம்கையாள விரும்பும் செயற்கைச் சாதனங்களை மிதமிஞ்சிய அளவுக்குப் பயன்படுத்துவதன் மூலம் கீழ்த்திசை நாடுகளைவிடப் பழமையானதாகத் தங்கள் நாடு உருவெடுத்துவிடும் என்று சில அமெரிக்கர்கள் நினைக்கிறார்கள்—விடமின்கள், புரதச்சத்துக்கள், மாவுச் சத்துக்கள், சர்க்கரைச் சத்துக்கள், சுண்ணாம்புச் சத்து, பாஸ்வரம், இரும்புச் சத்து, பால்தூள், தேன், வெண்ணெய், வாசனைத் திரவியங்கள், செயற்கை மணங்கள், ருசிகள் வகை தொகையற்று மலிந்து கிடக்கும் பலவற்றைக் கொண்டு வளம்பெற்று ஆற்றல் பெரும் நோக்கத்தில் தம்மிடம் இல்லாத உணவுப் பொருள்களை வாங்க இயலாத நகரங்களை யெல்லாம் பழமையானவை என்பதா, அல்லது புதியவை என்பதா, சொல்லுங்கள் ? (பழங்களும்கூட வர்ணம் அடிக்கப்பட்டு வனப்பூட்டப் பெறுகின்றன. நல்ல வேளை, அவற்றினுள்ளும் இன்னும் மருந்துகள் செலுத்தப் படத் தொடங்கவில்லை !

இத்தகைய வாதங்கள் பயனுடையவையாக எனக்கு ஒரு போதும் தோன்றியதில்லை. சற்றுமுன் கூறிய வர்ணனை நான் வேடிக்கையாகச் சிறிது மிகைப்படுத்தியதேயாகும் ; பொதுவாக இயற்கையில் செயற்கை முறைகள் புகுத்தும், வசதிகளெல்லாம் உண்மையில் இளமை அற்றவர்களை மேலும் வயதேறியவர்களாகத்தான் செய்கின்றன. எப்படியும் இதில் உள்ளுணர்வாலாய எதிர்ப்போக்கு இல்லாமலில்லை; அநேகமாக ஒவ்வொரு அமெரிக்கனும் சொந்தத்தில் பண்ணை வைக்கக் கனவு காண்கிறான்; விவசாயிகள் தவிர மற்றும் பலரும் அந்தக் கனவை நனவாக்கி அனுபவிக்கவும் செய்கின்றனர். அன்றியும் பேரளவு தொழில் மயமாகிவிட்ட இந் நாட்டில் மோட்டார் இழுவண்டிகளில் ஊர் சுற்றுவது, புதிய இடங்களுக்குச் செல்வது, இயற்கை வளங்களைத் தேடிக் கண்டுபிடிப்பது, வன—மலைப் பகுதிகளை வசப்படுத்திக் கொள்வது, காடுகளிலும் மலைகளிலு மற்றுமிதர தனியிடங்களிலும் தனித்து வாழ்வது போன்றவற்றில் பிரமிக்கத்தக்க அளவு ஆர்வத்தையும் பார்க்கிறோம்.

அமெரிக்கர்கள் இளமைத் துடிப்பு அற்றவர்கள் என்று

கூறப்படுவதானுல், வசதிச் சாதனங்களை விரும்புவதற்காக அவர்களை அவ்வாறு அழைக்க முடியாது என்பது வரையில் நிச்சயம். ஆனுல் மற்றுமொரு வகையில் இந்தக் கூற்று சரியானதுதான்—விண்ணைமோதும் கட்டிடங்களையும், அணுவைப் பிளக்கும் பிரம்மாண்டச் சாதனங்களையும் படைப்பதில் உற்சாகமுடன் மூழ்கியிருக்கையிலேயே அல்லலுக்காளாகிய உலகின் நெடுநாளைய அனுபவங்கள் அவர்களுடைய இதயத்தினுள் இரகசியமாகத் திரும்பவும் பாய்கின்றன என்பது வரையில் இது பொருத்தமானதே; அவர்களுடைய மனத்தின் இருண்ட பகுதிகளும் அவர்கள் அறியாமலேயே மனித குலத்தின் பழைய கனவுகள், கவலைகள், சோர்வு ஆகிய அருவங்களுடன் போராடிப் பழமைப் போர்வையைப் போடுகின்றன—இவ்வாருகச் சரித்திரத்தின் விஷமப்போக்கு அமெரிக்கர்களை நன்ருகத்தான் பழிவாங்குகிறது எனலாம்.

# 19

## அரசியல், சமூக தத்துவத்துறை

தத்துவ சாஸ்திரம் என்ற முறையில் எனக்கு மிகவும் அக்கறையுள்ள விஷயங்களைப் பற்றியது, இந்த அத்தியாயம்.

உண்மையில், கட்டுக்கோப்பான ஜனநாயக முறை அமெரிக்காவில்தான் காட்சியளிக்கின்றதென்பதை என் சொந்த அனுபவத்தில் காண்கிறேன். எட்டாவிலுள்ள கோஷங்களாகவோ எட்டாத உயரத்திலுள்ள லட்சியங்களாகவோ அல்லாமல் நடைமுறையில் அதைக் காண்கிறேன். இடையருமல் பரிசோதனைகளாகித் திரும்பத் திரும்பமாற்றியமைக்கப்படுவதாயுமுள்ள வாழ்க்கை முறையாக அதைப் பார்க்கிறேன். உயிர்த்துடிப்புள்ள உண்மை நிலையில் ஜனநாயகத்தை நான் கண்டதே இங்குதான். இந்நாட்டில் வாழ்வதும், இந் நாட்டு மக்களின் அன்ருட வாழ்க்கையையும், அவர்களுடைய ஸ்தாபனங்களின் செயல்முறையையும் ஆர்வம் கலந்த அக்கறையோடு காண்பதும் அரசியல் தத்துவத் துறையில் மறக்கவே முடியாத மாண்பு மிக்க பாடம் பயில்வதாகும்—இதையொட்டிச் சில விஷயங்களைக் கூற முற்படுகிறேன்.

### 1. சமூகத்தின் ஆணிவேர்

நான் முதன் முதலாகக் கூற விரும்புவது, ஐரோப்பிய நாடுகளில் இல்லாததும், இந்நாட்டில் மட்டும் காணப்படுவதுமான ஒரு விசேஷத்தைப் பற்றியதாகும்; இந்நாட்டின் சமூக அமைப்பு அதன் தனிமுறையில் ஐரோப்பாவுக்கு முற்றிலும் மாறுபட்டிருக்கக் காண்கிருேம்—தனித் தன்மையுடையதாக எந்தச் சமூகமும் இருக்க அனுமதிக்கப்படலாகாது என்னும் ரூஸோவின் தவருன சித்தாந்தத்துக்கு நேர் எதிரான நிலை இது.

இத்தகைய தனித்தன்மை படைத்த இனங்கள் இந் நாட்டில் ஏராளமாக உள்ளன-தங்களுடைய அன்றாட அலுவல்கள், அக்கறைகளாலாகிய தொடக்க நிலைகளில் பலர் ஒன்றுகூடி உருவாக்கும் குழுக்கள், கழகங்கள், சங்கங்கள், மற்றும் தொழில் தோழமைக் கோஷ்டிகள், சமய சமூகங்கள் போன்று பற்பலவற்றை இங்குக் காண்கிறோம். மேல் மட்டத்திலோ, தத்தமக்கேயுரிய அரசியல் வாழ்வு, சட்டதிட்டங்கள் ஆகியவற்றுடன் கூடிய பல ராஜ்யங்கள் ஒன்றுபட்டுப் பெரிய குடியரசாக, மகத்தானதொரு சமஷ்டி நாடாகச் சமைந்திருப்பதைப் பார்க்கிறோம்.

அவற்றுக்குரிய பிணக்குகள், நெருக்கடிகள் போன்றவற்றுடனும், மத்திய காலத்தை நிகர்த்திருக்குமளவுச் சில அம்சங்க்ளில் மண்டிக் கிடக்கும் வேற்றுமைகளுடனும் (பகல் பொழுதை மீதம் பிடிப்பதற்கான கட்டங்கள் ராஜ்யத்துக்கு ராஜ்யம் வேறுபடுவது இதற்கொரு உதாரணம்) இவ்வாறு அடிப்படையிலேயே மாறுபட்டவையாகப் பல அம்சங்கள் மலிந்திருப்பது ஜனநாயகம் சீராக வளர்ந்தோங்கச் சாதகமான சூழ்நிலையே என்பதுதான் என் கருத்து.

அரசியல்—சமய குழுக்களால் இந்நாடு தோற்றுவிக்கப்பட்டது என்பது சரித்திரம் கண்ட உண்மை. அந்தக் குழுக்கள் தமக்கு இஷ்டப்பட்டபடி நடந்து கொண்டதும், மற்றும் அவற்றின் பழக்க வழக்கங்கள், சுயாட்சி முறை முதலியனவும் அமெரிக்க மக்களின் பொது மனநிலையில் அழியாத முத்திரையிட்டுச் சென்றுள்ளன. எனவே, வாழ்வின் நிர்ப்பந்தங்களும், அசாதாரணமான வேகத்தில் எய்தும் முன்னேற்றமும் அமெரிக்கச் சமஷ்டி அரசாங்க அதிகாரங்களை மேன் மேலும் பெருக்கக் கட்டாயப்படுத்தும் போக்கில் ராஜ்யம் என்னும் கருத்தே அமெரிக்கர் மனத்துக்கு அடியோடு பிடிப்பதில்லை. மாறாக, ஒரு சமூகமெனத் தங்களை எண்ணிக் கொள்வதே அவர்களுக்கு உகந்ததாகப் படுகிறது.

ஐரோப்பிய நாடுகளைவிட (குறிப்பாக, தான் தோன்றித்தனம் மிகுந்த ஃபிரான்ஸைவிட, இந்நாட்டில் சமூக உணர்ச்சிகளும் உள்ளுணர்வுகளும் உரம் பெற்றுள்ளதை ஐயமறக் காண்கிறேன். இதன் விளைவாகத்தான் இங்கு சமூக கூட்டு மனோபாவத்துக்கும், தனியார் சுதந்தர உணர்ச்சிக்குமிடையே இடையறாமல் வேறுபடும் பிணக்கு நிலவுகிறதென நினைக்கிறேன். இத்தகைய பிணக்கு இயல்பானதாகவே தோன்றுகிறது.



* * *

அமெரிக்காவின் வேறுபட்ட சமூக அமைப்பு பற்றிய ஆராய்ச்சியை மேலும் தொடர்வோம். பிரத்தியற்ற நோக்கிலிருந்து பார்க்கும்போது, சமூக வாழ்வின் அடிமட்டத்திலேயே பலதரப்பட்ட குழுக்கள் இல்லாமல் இருந்திருந்தால் சிகாகோவில் 'ஸால் அலின்ஸ்கி' தொடங்கிய 'கொல்லைப்புற இயக்கம், போன்ற சமூக பெருமுயற்சிகள் இயலாமற் போயிருக்கும். மக்களிடையே சூழ்ந்து வேரூன்றியிருப்பதும், நம் ஜனநாயகங்களுக்குப் புத்துயிரூட்டுமளவு மெய்யான ஆதர்சமாகத் திகழ்வதுமான தொழிற் பகுதிகள் நிறுவனமும் ஏற்படுவதும் அசாத்தியமாகியிருக்கும்; அல்லது சிரம சாத்தியமாகவாவது ஆகியிருக்கும்.

ஐரோப்பாவில் மக்களின் கூட்டு வாழ்க்கை சின்னா பின்னமாகிக் கிடக்கிறது; அரசியல் அதில் ஆக்கிரமித்துக் கட்சிகள் அதனை அடிமை கொண்டுள்ளன. எனவே அங்கு இதுபோன்ற முயற்சிகள் தொடங்குவதற்கு இன்னும் நீடித்த காலம் சிரப்பட்டு உழைத்தாக வேண்டும். என்னைப் போலவே ஆலின்ஸ்கியின் புத்தகமான 'ரிவீல் ஃபார் ராடிகல்ஸி'ல் ஆர்வம் மிகுந்தவரும், போப்பாண்டவரின் சாம்ராஜ்யத்துக்கு ஃபிரான்ஸின் தூதராக நான் ரோமுக்குச் சென்றபோது என்னோடு அங்கு வந்தவருமான என் நண்பரொருவர் இத்தாலியில் அதுபோன்ற பணியைத் தொடங்கச் சகல முயற்சிகளும் செய்தார். ரோமின் புறப்பகுதியில் மிகப் பின்தங்கிய நிலையில் இருந்த ஒரு சமூகத்தினரைத் தங்கள் பொதுப்பிரச்னைகள் குறித்துஉணரச் செய்யவும் அவர்களையும், அவர்களுடைய பல்வேறு தலைவர்களையும் தூண்டுவதே என் நண்பரின் நோக்கம். சில வாரங்களுக்கு அவ்வேலை மிகச் சுறுசுறுப்பாக நடந்தது; தாம் வெற்றி பெற்று விட்டதாகவே என் நண்பர் எண்ணினார். ஆனால் வெகு விரைவில் அத்தனையும் சீர்குலைந்து விட்டது. காரணம், அதில் அரசியல் புகுந்துவிட்டது—எந்த அரசியல் கட்சியின் கைமேலோங்கி அந்த முயற்சியாலான பயனைப் பெறும் என்பதே முழு முதல் பிரச்னையாகி விட்டது.

ஸால் அலின்ஸ்கியின் கருத்துப்படிப் பார்க்கும்போது முன்பின்னுக என் நண்பர் காரியம் செய்து விட்டார் என்றே கூறவேண்டும். சிதறிச் சின்னபின்னமாகிக் கிடந்த அந்தச் சமூகங்களில் சிறியவையும், அரசியல் தொடர்பற்றவையும், அடிப்படையானவையுமான ஸ்தலக் குழுக்களை அவர் முதலில் உசுப்பியிருக்கவேண்டும்; அத்தகைய குழுக்கள் சில மாதங் களுக்கு வேலை செய்தபின்தான் சமூகம்முழுவதையும் பொதுப் பணியொன்றில் முனைய வைக்க முயன்றிருக்க வேண்டும். ஸால் அலின்ஸ்கி பின்பற்றிய நடைமுறை இதுதான்; அமெ ரிக்காவின் சில பகுதிகளில் முற்றிலும் சிதறிக் கிடந்த மெக் ஸிகக் குடியேறிகளைச் சார்ந்து அவர் கையாண்டு வெற்றி கண்ட முறை இதுவே.

## 2. மகத்தான அரசியல் சாதனை

இரண்டாவது விஷயத்தை இப்போது ஆராய்வோம்: இந்நாட்டின் அன்றாடப் போக்கில் வாழ்க்கை பற்றிய ஜன நாயகத் தத்துவம் செயற்படுவதைப் பொறுத்தது இது. உங் களுடைய அமெரிக்க நகரங்களில் எனக்கு ஏற்பட்ட முதலெண் ணங்கள் இன்னமும் என் நினைவில் உள்ளன. சிறுமையால் சிணுங்கிய முகங்களையோ, அடிமைக்களை வழிந்த முகங் களையோ, சீற்றம்மிக்க முகங்களையோ, அன்றி செருக்கு நிறைந்த முகங்களையோ அவற்றில் காணுது வியந்தேன்.

நியூயார்க் நகரில் 'பௌவரி' போன்ற பகுதிகளும்,ஜன நெரிசல் மிகுந்து அவதிப்படும்'ஹார்லெம்' போன்ற பிரதேசங் களும், சிகாகோவில் சேரிகளும் இருப்பது எனக்குத் தெரியும். நாடோடிகள் பலர் உள்ளதும், தெற்கு ராஜ்யங்களில் 'ஏழை வெள்ளையர்'களும் நீக்ரோவரில் சில பகுதியினரும் கொண்ட அடிமட்டப் பாட்டாளி வர்க்கம் ஒன்று இருப்பது நானறிந் ததே. ஆயினும் ஆண்டவன் அருளால் டோரதிடே நிறுவிய பராமரிப்பு விடுதிகளும் இருக்கத்தான் இருக்கின்றன. ஒன்று திரளாதவரும், அவ்வாறு திரட்டப்படவே முடியாத தனிப்பட் டவர்களுமான பரம ஏழைகளை நாகரிகம் என்னும் துர்த்தேவ தைக்கு நரபலியாக்க உலகெங்கிலும் தொழிலாக்கம் விழைகி றது என்பதை மறுக்க முடியாது. மதிநுட்பத்தினுலும் தாரா ளத் தன்மையினுலும் மனிதகுலம் போக்கடிக்க வேண்டிய கடைசிச் சமூகப் பிணியாகும் இது.



சரி, இங்குள்ள சாதாரண மனிதனுடைய ஜீவனுேபாயத் தொழில் எதுவாயினும் சரி, தான் ஒரு 'மனிதப் பிறவி' என்ற எண்ணத்திலும் அம்முறையில் தனக்குரிய அடிப்படைச் சுதந் திரத்தையும் மதிப்பையும் உணர்வதிலுமே அவனுக்குத் திருப்தி ஏற்பட்டு விடுகிறது. மனித மதிப்பு பற்றிய இந்த அடிப்படை உணர்வு ஃபிரெஞ்சுக்காரர்களிடையிலும் ஆழ ஊன்றியுள்ளது. எனினும் ஃபிரெஞ்சுப் புரட்சியின் மூல மந் திரங்களான சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகி யவை—இவற்றை ஃபிரெஞ்சுச் சிறைச்சாலைகளின் முகப்பில் கூடக் காணலாம் !—இங்கு வெறும் வந்தனைக்குரிய வார்த்தை களாக மட்டும் இல்லை; மக்களின் பொது உணர்விலும், வாழ் விலும் மெய்யாகவே செயற்படும் பொதுச் சிந்தனை முறையின் அம்சங்களாகத் திகழ்கின்றன; நான் சற்றுமுன் கூறிய சொந்த மனித மதிப்பு உணர்ச்சிக்கு சமூகத்தின் பொதுவான அங்கீகாரத்தினுல் கிட்டும் உறுதிப்பாட்டையும் இவை பெற் றுத் தருகின்றன.[1]

இது குறித்து இன்னும் சிறிது ஆழ்ந்து ஆராய்வோம், அரசியல் சங்கம் என்பது நற்குணங்களினுலும் பகுத்தறி வினுலும் அமைவது, கூடிவாழ விருப்பம் அல்லது சம்மதத்தை அது குறிக்கிறது. அந்தச் சம்மதம் 'மக்கள் கூட்ட'த்தினிட மிருந்து தங்கு தடையின்றி வெளிப்படுகிறது என்றெல்லாம் அரிஸ்டாடிலும். ஆக்வினுஸூம் கூறியுள்ளனர். அரசியல் சங் கத்தின் சாரம் பற்றிய இக்கருத்து அமெரிக்காவில் போல வேறெங்கிலும் மெய்யுருப் பெறவில்லை என்பது என் கருத்து.

மனித சமூகங்களை உண்மையில் உருவாக்கியவையும்,

1. நான் மற்றோரிடத்தில் கூறியது போல "இந்நாட்டில் சாதாரண மனிதன் என்பவன் அடங்கிவாழும் எளியோனே அன்றி அகம்பாவம் பிடித்தவனே அல்லன். மனித வாழ்வின் மதிப்பை அவன் உணர்ந்துள்ளான்; ஒவ்வொருவருடைய மதிப்பையும் பொறுத்த பொது உணர்விலேயே அவன் வாழ்கிறுன். கல்விச் செருக்குடையவர்கள் தெளிவாகக் காணவியலாத அளவுக்கு இந்த எளிய உருவத்தினிடம் மதிப்பரிய ஆன்மிகச் செல்வம் பொதிந்து கிடக்கிறது"—1943, ஃபிப்ரவரி 26-ம் தேதியிட்ட 'காமன் வீல்' சஞ்சிகையில் நான் எழுதியது இது.

தன்னுடைய சொந்தப் பிறப்புக்குப் பூர்வாங்கமான காரணங்களில் பெரும் பங்கு கொண்டவையுமான ஆதிக்கப் போர்கள், படையெடுப்பு வெற்றிகள் போன்ற பல்வேறு சரித்திர நிர்ப்பந்தங்களின்றித் தோன்றிய ஒரே அமைப்பு அமெரிக்காதானென நினைக்கிறேன். ஐயத்துக்கிடமேதுமின்றி முற்றிலும் சுதந்திரமாக, பொது நோக்கமொன்றின் பொருட்டுச் சேர்ந்து வாழவும் உழைக்கவும் மக்கள் சுயேச்சையாக முடிவு செய்ததன் பயனாகப் பிறந்தது இது ஒன்றுதான். பல்வேறு தேசீய இனப் பிரிவுகள், ஆன்மிகப் பரம்பரைகள், மதக்கோட்பாடுகள் முதலியவற்றைச் சேர்ந்த மக்கள்—அவர்களுடைய மூதாதையர் ஒருவருடனொருவர் கடும் போரிட்டுக் கொண்ட போதிலும்—இந்தப் புதிய அரசியல் சிருஷ்டியில் இகத்தையும் பரத்தையும் பொறுத்து ஒரே பொதுநல நோக்கமுடையோராயும், பூரண சுதந்தரர்களாயும் சமாதானமுடன் ஒன்றுபட்டு வாழச் சுயேச்சையாகத் தீர்மானித்துள்ளனர். மக்களால் மக்களுக்காக நடத்தப்படும் மக்களாட்சி என்னும் லிங்கனின் வருணனையைவிட அரசியல் ஜனநாயகத்துக்குச் சிறந்த விளக்கம் வேறில்லை; உருவான முறையில் தாம் நேரில் கண்டதையே இவ்விதம் அவர் கூறினார். மேலும், அமெரிக்க ஜனநாயகத்தின் நோக்கங்களைப் பொறுத்தும் லிங்கனைவிடச் சிறந்த வியாக்யானம் அளித்தவர் வேறு எவருமில்லை என்றே நினைக்கிறேன்—ஜனாதிபதியாக முதல்முறை பதவியேற்றதும் விடுத்த செய்தியில் அவர் கூறினார்: "மனிதரின் நிலையை உயர்த்துவதையே முக்கிய நோக்கமாகக் கொண்ட ஓர் ஆட்சி முறையின் உருவையும் கருவையும் உலகில் நிலைநிறுத்துவதற்காகப் போராடுவது; அனைவரது தோள்களிலும் சுமந்துள்ள செயற்கைப் பளுவை அகற்றுவது; உயர்ந்த நோக்கங்களையும் காரியங்களையும் நிறைவேற்ற அனைவருக்கும் வழி வகுத்துக் கொடுப்பது; வாழ்க்கை என்னும் ஓட்டப்பந்தயத்தில் தடையேதுமின்றி அனைவரும் பங்கு கொள்ளவும் நேர்மையாக முடிவுகாணவும் எல்லோருக்கும் சந்தர்ப்பம் அளிப்பது—இவையே நம் நோக்கங்கள்."

நான் குறிப்பிடும் மகத்தான அரசியல் சாதனை இந்நாட்டின் முன்னோரால் மட்டும் நிறைவேற்றப்படவில்லை; இடையறாது நடந்து கொண்டிருக்கும் சுயசிருஷ்டி முறையின் பயனே



யாகும் அது. எனவேதான் தாங்களாக இஷ்டப்பட்டுச் சுதந்தரமாகவும், சுதந்திரத்தின் பொருட்டும் ஒருங்கு கூடி வாழத் தீர்மானித்தவர்கள் தற்காலிகத் தேழாமை உணர்வுடன் இங்கு நிறைந்திருக்கக் காண்கிறோம்; தாமாக விரும்பி இந்நாட்டுக்கு வரும் புதியவர்கள், சுதந்தரமாகவும் சுதந்தரத்தின் பொருட்டும் அமைந்துள்ள இந்த இகச் சகோதரத்துவத்தில் இதனால்தான் இலகுவாக இணைப்புறுகிறார்கள். இந்தச் சுதந்தரம் அனுபவித்து மகிழும் பொருட்டு வரப்பிரஸாதமாக ஒரே முறையில் வந்தமைந்து விடுவதன்று. மனித சரித்திரத்தில் பொதிந்திருப்பது இது; எனவே மனிதருக்குரிய தன்மைகள் உடையது. மிக மதிப்புடைய உயர்ந்த விஷயமாதலால் நம் நாகரிக அமைப்பிலேயே இதற்குத்தான் ஆபத்து அதிகம். காலப்போக்கில் எழும் புதிய நிலைகளையொட்டி ஏற்படும் புதுப்புதுத் தடைகளும் அபாயங்களும் இதனை இடையறாமல் அச்சுறுத்துகின்றன. எனவே என்றென்றும் இதனைப் பேணிப் பாதுகாத்து அபிவிருத்தி செய்தாக வேண்டும்; ஒவ்வொரு தலைமுறையையும் பொறுத்து இவ்வகையில் இது புது வெற்றியாகவும் படைப்பாகவும் அமைகிறது. இது விஷயத்தில் சோம்பலுக்கோ ஓய்வுக்கோ இடமில்லை. சுதந்தர மக்களின் உயிர்த்துடிப்பு மூலம் இடைவிடாமல் இதற்கும் புத்துயிர் அளித்துக் கொண்டேயிருக்கவேண்டும். ஆக, அந்த உயிர்த்துடிப்புடனேயே இது ஒன்றிக் கலந்து விடுகிறது.

* * *

இப்போதைய ஜனநாயக ஆட்சி முறைகள் அனைத்திலும் அமெரிக்க ஏற்பாடுதான் சிறந்த முறையில் வகுக்கப்பட்டுத் திறம்பட இயங்குகிறது (இப்போதைக்கில்லாவிடினும் நெடுங்கால நோக்கிலாவது) என்பது என் கருத்து. எனினும் அபிவிருத்திக்கே இடமில்லாமல் பூரணச் சிறப்புடன் அது அமைந்து விட்டதென்றோ, குறையே அற்றவர்களுக்காக அது படைக்கப்பட்டதென்றோ (இதுவே அதன் சிறப்புக்கு ஒரு சான்றல்லவா ?) கூறமாட்டேன். அரசியல் சட்டத்தில் பொலியும் அறிவுச் சுடரும் உயர்ந்த நோக்கங்களும், நடைமுறையில் செயற்பட்டாலன்றிப் பயனில்லை. அவ்வளவாக உயர்ந்ததல்லாத மனித நல நாட்டங்களின் உந்துதலும்

உதவியும் அவற்றுக்குத் தேவை. இந்தச் சீரிய நாட்டங்களை அரசியல் இயந்திரங்களெல்லாம் தேச முன்னேற்றத்துக்கு இறுதியில் பயன்படும் அரசியல் எரிபொருளாகச் சாமர்த்தியமாக மாற்றுகின்றன. எனவேதான், இந்நாட்டின் நன்றி இதனைத் தொடங்கி வைத்த 'தேசப் பிதாக்களு'க்கும் உரியதெனச் சிலர் வேடிக்கையாகக் கூறுவதிலும் பொருள் உள்ளது.

சுதந்தரத்தை அடிப்படையாகக் கொண்ட அரசியல் ஆட்சிமுறை ஒவ்வொன்றிலும், குறிப்பாக ஒரு பலவீனம் உண்டு. நாட்டில் இயங்கும் சகல சக்திகளையும் மக்கள் அனைவராலும் கவனிக்க இயல்வதில்லை; எனவே, திரைமறைவில் வளர்ந்தோங்குவது தவிர்க்க முடியாததாகிறது. இதைத் தவிர்க்க ஒரே வழி, நல்ல பிரஜைகள் 'நிரந்தர விருப்புடன்' இருப்பதேயாகும். இதன் பயனாகப் பின்னர் தேவையான சீர்திருத்தங்களும் மாறுதல்களும் நடந்தேற ஏதுவாகும். அமெரிக்காவைப் பொறுத்தவரையில் உடனடியாகவோ பின்னரோ நிச்சயம் நடந்தே தீரும். எனினும் இன்று இப்பிரச்னை இருப்பதை மறுக்கமுடியாது. நிர்ப்பந்தம் பிரயோகிக்கும் கோஷ்டிகள், ஓரளவு அரசாங்கச் சார்பு உடையவையும் செல்வாக்கு மிகுந்தவையுமான ஸ்தாபனங்கள் முதலியன பொது வாழ்வைக் கலக்குவதில் இதற்கான அறிகுறியொன்றைக் காணலாம். கூட்டு ஸ்தாபனங்கள் வியப்பூட்டுமளவு வளர்ந்தோங்குவதே இப்போதைக்கு அவசர அவசியமாகக் கவனிக்கப்படவேண்டியதாகக் காண்கிறது.

நான் மேலே குறிப்பிட்ட பலவீன அம்சமானது ஏதாவதொரு உருவில் எல்லா ஜனநாயகங்களிலும் உள்ளது. இருப்பினும் இந்நாட்டைப் பொறுத்து மட்டிலும் சில விஷயங்களைக் கூறவிரும்புகிறேன்: சுப்ரீம் கோர்ட் (உயர்நீதி மன்றம்) என்னும் அமெரிக்க நிறுவனம் தற்காலத்தில் மகத்தான அரசியல் சாதனைகளில் தலைசிறந்ததொன்று என்பதும், அறிவுத்திறனுக்கும் மனித விவகாரங்களில் அதற்கு முதலிடம் அளிப்பதற்கும் எக்காலத்தும் எடுத்துக்காட்டாகத் திகழ்வது என்பதும் என் கருத்து. எனினும், இங்கு எப்போதும் உரிய வகையில் அதிகாரப் பிரிவினைத் தத்துவம் போற்றி மதிக்கப்படுவ



தில்லை என்றே நான் எண்ண வேண்டியிருக்கிறது—சித்தாந்த ரீதியாகவாகிலும் இத்தத்துவத்தை ஃபிரெஞ்சுக்காரர்கள் (அவர்களில் நானும் ஒருவனல்லவா ?) வெகுவாக மதிப்பதே இதற்கு ஒருவேளை காரணமாக இருக்கலாம். அரசாங்கத்தின் நிர்வாக, சட்டமியற்றும் பிரிவுகளிடை பிரிவினையைப் பற்றி நான் இங்குக் குறிப்பிடவில்லை—அமெரிக்காவைவிட ஃபிரான்ஸிலேயே இந்தப் பிரிவினை ஏற்பாடு நடைமுறையில் அதிக அளவில் குலைக்கப்படுகிறது—ஆயினும் அமெரிக்காவில் நீதிபதிகளும்[1] அரசாங்க வழக்கறிஞர்களும்[2] மற்றெந்த அரசியல் கட்சியினரையும் போலவே பொதுஜன வாக்குமூலம் தேர்ந்தெடுக்கப்படுவதையும், அதில் வெற்றி பெறும் பொருட்டு வாக்காளரைப் பகைத்துக் கொள்ளாமல் அவர்கள் நடந்துகொள்ள நேர்வதையும் கண்டு ஐரோப்பியப் பார்வையாளர் வருந்தியே தீர்வர். இது தவிர, மற்றவகைகளிலும் அரசியலும் நீதி நிர்வாகமும் கலக்கின்றன. எனக்குத் தெரிந்தவரையில் காங்கிரஸின் எந்தக் கமிட்டிக்கும் நீதி நிர்வாக அதிகாரமேதும் இருப்பதாகக் கருதப்படுவதில்லை. ஏனெனில், சட்டமன்றக் காரியங்களுக்காகப் போதிய விவரங்களைச் சேர்ப்ப

---

1. இம்முறையினின்று விலக்குகள் வருமாறு:—கனெக்டிகட், டிலாவேர், மெயின், மாஸாஷூஸெட்ஸ், நியூ ஹாம்ப்ஷயர், நியூ ஜெர்ஸி ஆகிய ராஜ்யங்களில் நிர்வாகத் தலைவர்களால் நீதிபதிகள் நியமிக்கப்படுகின்றனர். தெற்கு கரோலினா, வெர்மாண்ட், வர்ஜீனியா ஆகிய இடங்களில் சட்டசபைகள் அவர்களைத் தேர்ந்தெடுக்கின்றன. மிஸ்ஸூரியிலும் கலிஃபோர்னியாவிலும் நிர்வாகத்தினரால் நீதிபதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டு, பின்னர் பொதுஜன வாக்குமூலம் அங்கீகாரம் கோரப்படுகிறது. கூடிய வரையில் கட்சித் தொடர்பில்லாத முறையில் நீதிபதிகள் தேர்ந்தெடுக்கப்பட (தேர்தல் முறையை அனுசரிக்கும்) 36 ராஜ்யங்களில் 16-ல் தகுந்த ஏற்பாடுகள் உள்ளன. தலைமை உயர்நீதி மன்றம் உள்பட சமஷ்டி நீதிபதிகள் அனைவரும் (பின்னர் காங்கிரஸின் அங்கீகாரத்திற்கு உட்பட்டு) ஜனாதிபதியினால் நியமிக்கப்படுகின்றனர்.

2. அட்டார்னி ஜெனரலின் உதவியாளராகப் பணியாற்றும் சமஷ்டி வழக்கறிஞர்கள் மட்டிலும் நிர்வாகத்தினரால் நியமிக்கப்படுகின்றனர்.

தொன்றே அத்தகைய கமிட்டியின் இறுதி நோக்கமாகும்.[1] எனவேதான் நீதிமன்றங்களுக்குரிய திட்டமான விதிகளும் உத்தரவாதங்களும் அதற்கில்லை. எனினும் தனிப்பட்டவர் களின் சொந்த விவகாரங்களை விசாரிக்க அதிகாரம் படைத் திருப்பதால் நடைமுறையில் நீதிமன்றங்களுக்கே உரியவை யான சில அலுவல்களை அது புரிகிறது.[2]

இறுதியாக, தங்கள் அரசியல் வாழ்க்கையில் தற்சமயம் மக்கள் பின்பற்றும் சில போக்குகளைக் கருதுங்கால் சமீபத்தில் இது விஷயமாக வெளிவந்த நூலொன்றில் கண்டுள்ள கூற்று களில் மிகுந்த உண்மை உள்ளதாகத் தோன்றுகிறது. ''வயிறார உண்டு வளமாக வாழும் நம் மக்களிடை ஒரு அசிரத்தை தலையெடுத்துவிட்டது. இவற்றோடு, வருங்காலம் பற்றிப் பய மின்றி வாழவும் பெரும்பாலோர் விரும்புகின்றனர். கவலைப்பட அவர்கள் விரும்பவில்லை'' என்று அப்புத்தகத்தில் ஆட்லாய் ஸ்டீவன்ஸன் எழுதியுள்ளார். ஆகவே, பொதுநலத்தைப் பற்றி அக்கறை கொண்டு அல்லாடுவதற்கு மாறாக ''புறநகர் களிலுள்ள தங்கள் புது வீடுகள், புதிய சமூகங்கள்'' ஆகியவற் றிலேயே கவனம் முழுவதையும் செலுத்த விழைகின்றனர். மனிதனால் வெற்றிகொள்ள முடியாத அளவு பெரியவையான உலகப் பிரச்னைகளை எதிர்ப்பட நேர்ந்திருப்பதாலோ என்னவோ, எந்தக் கட்சி அதிகாரப் பீடத்தில் இருந்த போதி லும் ஒரு சீர்ப்பாடு ஏற்படச் செய்ய அது புரியும் முயற்சி களால் விளையக்கூடிய அபாயங்களில் பொதுவாக மக்கள்

1. முடிவு அல்லது இறுதி நோக்கத்தாலன்றி வெளிப்படை யான லட்சியத்தைக் கொண்டே எந்த மனித நடவடிக்கையும் குறிக்கப்படவேண்டும் என்பது தான் சீரான தத்துவம்.

2. காங்கிரஸின் கமிட்டிகளுடைய விசாரணை அதிகாரத் துக்கு உரிய வரையறைகளை வாட்கின்ஸ் வழக்கில் (1957, ஜூன் 17-ம் தேதி அளிக்கப்பட்ட தீர்ப்பில்) தலைமை உயர்நீதி மன்றம் வகுத்துள்ளது. சாட்சி கூற அழைக்கப்படுவோரின் உரிமைகளை வலியுறுத்தும் இந்த முக்கியத் தீர்ப்பு, நான் குறிப்பிட்டுள்ள தெளி வின்மையால் தோன்றியவையும், அமெரிக்கரின் உண்மைப் பண்பு களைச் சிறிது காலம் வெளிநாட்டார் உணரமுடியாமற் செய்தவை யுமான அதிகார துஷ்பிரயோகங்களைப் பிரஸ்தாபித்துள்ளது.



போதிய அளவு சிரத்தை காட்டுவதில்லையெனச் சமீப வருடங் களில் பரவலாகக் கூறப்பட்டுள்ளது.

நான் மேலே கண்டு கூறியுள்ள குறை எதுவும் அமெரிக்க அரசியல் முறையைப் பொறுத்த என் பாராட்டை எள்ளளவும் குறைக்க வியலாது. இந்த முறை மனிதாம்சம் உடையது தானேயன்றி தெய்வாம்சம் பொருந்தியதல்ல என்பதைத் தான் இக்குறைபாடுகள் குறிக்கின்றன. இது மகத்தான மனித சாதனையாதலால் குறைபாடுகளை அகற்றவும், தொடர்ந்து இயங்கவும், மேன்மேலும் அபிவிருத்திகள் எய்த வும் இடையறாத முயற்சி இன்றியமையாதது என்பதையும் இவை வலியுறுத்துகின்றன.

* * *

## 3. 'மெய்யான மனிதத்தன்மை' நோக்கிலிருந்து...

என் சிந்தனைகளில் சொந்த விஷயங்கள் சிலவற்றை நான் இப்போது கலக்க வேண்டியுள்ளது. குறிப்பாக, இருபதாண்டு களுக்குமுன் வெளியிடப்பட்ட 'மெய்யான மனிதத் தன்மை' என்னும் என் புத்தகத்தைப் பற்றிக் கூற விரும்புகிறேன். அப்புத்தகத்தை எழுதும்போது புதியதொரு கிறிஸ்தவ நாகரிகத்துக்குப் பொருத்தமான லட்சியத்தை சரித்திர ரீதி யாக உருவாக்க முயன்ற நான் ஐரோப்பியச் சூழ்நிலையையே கருத்திற் கொண்டிருந்தேன். அமெரிக்காவைப் பற்றி நான் சிந்திக்கவேயில்லை; பொதுவாக ஐரோப்பாவையும், குறிப்பாக ஃபிரான்ஸையும், சரித்திரத்தை யொட்டிய அவற்றின் பிரச்னை களையும் பற்றித்தான் நான் சிந்தித்தேன். ஃபிரான்ஸின் கத் தோலிக்க இளைஞருக்கு ஆதர்சமாகத் திகழக்கூடியது பற்றியே நான் பெரிதும் யோசித்தேன்.

இதில் விசித்திரமான விஷயம் என்னவெனில், அமெரிக் காவைக் கண்டவுடனேயே அதனிடம் நான் அன்பு கொண்டு விட்டபோதிலும் இந்நாட்டில் நடப்பவற்றுக்கும், நான் அந் நூலில் தெரிவித்த பல கருத்துக்களுக்குமிடை ஒருமைப்பாடு உண்டு என்பதை உணர எனக்கு வெகு காலம் பிடித்தது; அந் நூல் எழுதப்பட்ட சூழ்நிலை நோக்கு வேறாகவிருந்ததே இதற்கு ஒருவேளை காரணமாக இருந்திருக்கலாம்.

எப்படியும், இன்றையப் பிரத்யட்ச நிலை எதனின்றும் வெகுவாக வேறுபடும் சரித்திர ரீதியான லட்சியம் பற்றியதே அந்தப் புத்தகம். எனினும் அமெரிக்க நாகரிகத்தின் அடிப்படை இயல்பான சில போக்குகள் செல்லும் திசைதான் என் வரையில் முக்கியமாகப் படுகிறது. இந்த நோக்கிலிருந்து பார்க்குங்கால், அப்புத்தகம் அமெரிக்கச் சூழ்நிலைக்குப் பொருந்தும் வகையில் முன்கூட்டியே அமைந்துவிட்டது என்றுதான் நான் கூறவேண்டியிருக்கிறது.

* * *

இதற்குச் சில சான்றுகள் தருகிறேன்.

முற்றிலும் முழுமையான பொருளில் அல்லாவிடினும் அடிப்படையைப் பொறுத்த அளவாகிலும் அமெரிக்க சமூகம் வர்க்கபேதம் அற்றதேயாகும். ஒரு சில கோடீசுவரர்கள், மற்றும் பல செல்வச் சீமான்கள், சீமாட்டிகள் ஆகியோருக்கும் மக்களில் பெரும்பாலோருக்குமிடையே பொருளாதார நிலையிலும் சமூக அந்தஸ்திலும் இருக்கும் பெரும் வித்யாசத்துக்கும் இதற்கும் எவ்விதச் சம்பந்தமும் கிடையாது. குடும்பப் பழக்க வழக்கங்களைச் சார்ந்திருப்பவையும், ஒருபோல இருப்பதாக வெளிப்பார்வைக்குத் தவருகத் தோன்றினும் உண்மையில் அமெரிக்க சமூகத்தைப் பலதரப்பட்டதாக்குபவையுமான எண்ணிறந்த நுண்ணிய சமூக வேறுபாடுகளுடனும் இதற்குச் சம்பந்தம் இல்லை. ஓரளவு மறைக்கப்பட்டு, பேச்சு மொழி, உடுத்தும் முறை, நடக்கும் தோரணை ஆகியவற்றில் முக்கியமான மாறுதல்களுக்கு மட்டுமே வெளிப்படுத்தப் படுவதால் இந்த வேறுபாடுகள் மேலும் சுவை பெறுகின்றன. எனினும் சமூக உறவு முறையில் இவை குறுக்கிடுவதில்லை. பொருளாதார அந்தஸ்திலன்றி கல்வி, நடந்துகொள்ளும் முறை ஆகியவற்றில் பண்பையொட்டியுள்ள வேற்றுமைகளாகவே இவை உள்ளன.

வர்க்கத்தைப் பொறுத்த மெய்யான சித்தாந்தத்தைப் பற்றியது நான் கூறும் விளக்கம். தொழில்துறைப் பாட்டாளி வர்க்கம் பற்றிய தம் புத்தகத்தில் ‘கோயெட்ஸ் ப்ரீஃப்ஸ்’ என்பவர் காட்டியுள்ளது போல, ஓரளவு தவிர்க்க முடியாத் தன்மையுடன் கூடியது இது. அதாவது, வர்க்கம் என்பது



அதற்குரிய பொருளில் பரம்பரையானதொரு சமூகநிலையையே சுட்டுகிறது; நிலையானதும், திடமானதும், அசையாத் தன்மை படைத்ததுமான சமூக அமைப்பை அது குறிக்கிறது. ஒரு குறிப்பிட்ட வர்க்கத்தைச் சேர்ந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் பிறக்கும் குழந்தைகள் தாமாக அந்த வர்க்கத்தைச் சேர்ந்தோராகிவிடுவர். தற்செயலாக நேரக்கூடும் ஒரு சில விதிவிலக்குகளைத் தவிர்த்து மற்றவர்களைப் பொறுத்துத் தலைமுறை தலைமுறையாக இவ்வாறே நடக்கும்—அந்த விலக்குகளும்கூட விதியை உறுதி செய்வனவேயாகும்.

மேலும், இந்த நிலையான சமூகப் பாகுபாட்டின் விளைவாக ஒரு குறிப்பிட்ட வர்க்க மனேபாவம்—ஒரு குறிப்பிட்ட ஒழுக்க நியதியும்கூட—ஒவ்வொரு வர்க்கத்தினுள்ளும் வளரும். ஆனுல் இம்மாதிரி எதுவும் அமெரிக்காவில் இல்லை; தனக்கே உரிய முறையில் அமெரிக்க சமூகம் எங்கனும் ஒரு இளக்கம் படர்ந்திருப்பதே இதற்குக் காரணம்.

சமூக அந்தஸ்து ஒன்றிலிருந்து மற்ருென்றுக்கு மாறும் வாய்ப்பு ஒவ்வொருவருக்கும் இங்கு நிறையவுள்ளது என்பது எல்லோரும் அறிந்ததே; இன்று ஏழையாக இருப்பவர்கள் நாளை பணக்காரர்களாகி, அதற்கு மறுநாள் மறுபடியும் வறியராகிவிடக் கூடும். இத்தகைய இடையருத மாற்றம் இயல்பாகவே நடக்கிறது. எனவே தான் இங்கு சமூக வாழ்க்கையில் பரம்பரையான ஒரு ஸ்திரத் தன்மை இல்லை.

இவ்வாறு காண்பது ஒருபுறம்; மறுபுறத்தில் ஒரு குறிப்பிட்ட குடும்பத்தில் பிறந்தோரிடையிலேயே சமூக அந்தஸ்தில் மிகுந்த வேற்றுமை நிலவுகிறது. எனினும் அடிப்படையான தொடர்பு முறைக்குப் பஞ்சமில்லை; மனிதர்களுடன் அவர்களுடைய கருத்துக்களும் எங்கனும் கலந்து உறவாடுகின்றன. எனவே, தேச இனம், சமயம், பிரதேச நிலை, தொழில், சூழ்நிலை ஆகியவற்றையொட்டி இங்கு விதவிதமான மனேபாவங்கள் நிலவுகின்றன. ஆனுல் வர்க்க மனேபாவம் கிடையாது.

ஆகவே, சுதந்தரச் சூழ்நிலையில் வர்க்கபேதமற்ற சமுதாயமொன்றை அமெரிக்கா உருவாக்கியுள்ளது என்னும்போது எப்பொருளில் இவ்வாறு கூறுகிறேம் என்பது இதனின்று விளங்கியிருக்குமென எண்ணுகிறேன். துல்லியமான சமூகவியல் ரீதியில் அமைந்த வர்க்கம் பற்றிய சித்தாந்தத்தைப்

மெனக் கூறலாம். அமெரிக்க மரபுகளை அறியவேண்டுமானல் இந்த மையமான அம்சத்தை முதலில் புரிந்துகொண்டாக வேண்டும். அமெரிக்க, ஐரோப்பிய மரபுகள், சித்தாந்தங்கள், பண்புகளுக்கிடையுள்ள பெருத்த வித்தியாசத்தையும் இது சுட்டுகிறது. சமயச்சார்பற்ற முறையில் மிகவும் முன்னேறி யுள்ள நாடு இது; உண்மையில் இதுவே மெய்யான சமயச் சார்பற்ற அரசாங்கமுடைய ஒரே நாடு எனலாம்....அதே சம யத்தில் சமூகத்தை அடிப்படையில் சமயச் சம்பந்தமுடைய தாகக் கருதும் ஒரே மேற்கத்திய நாடு என்றும் அமெரிக்கா வையே கூறவேண்டும்.

"அரசாங்கம் அதன் இயல்பையொட்டிச் சுயாட்சியுடன் செயற்படவேண்டும்; அதன் வரம்பு முற்றிலும் 'இயற்கை யான பகுத்தறிவை' ஒட்டி இருப்பதும் அவசியம். எனினும் சமயப்பற்றுடைய தனிமனிதரை ஆதாரமாகக் கொண்டிருந் தால்தான் தளையேதுமற்ற சமுதாயம் சாத்தியம். ...இதுதான் அமெரிக்க சித்தாந்தத்துக்கு அடிப்படையாகிறது: எந்த வொரு சமயப் பிரிவுக்கும் அரசாங்கம் ஆதரவு காட்டவோ அனுகூலம் விளைக்கவோ கூடாது. இவ்வாறு ஆதரவு அளிக்கப் படுமானல் அது குறிப்பிட்ட மதப்பிரிவை 'நிலைநாட்டும்' நடவடிக்கையாகி விடுவதுடன் 'தளையேதுமின்றி மதம் கடைப் பிடிக்கப்படுவதற்குத் தடை' விதிப்பதுமாகிவிடும்-அரசியல் சட்டத்திற்கான முதல் திருத்தத்தின் மூலம் இது கண்டிப் பாகத் தடுக்கப்பட்டிருப்பது குறிப்பிடத் தக்கது. ஆயினும் அதேசமயத்தில் பொதுவாக மதவாழ்வை அரசாங்கம் எப்போ தும் பேணிக்காத்து ஆதரிக்கவேண்டும் என்றும் அறிவுறுத்தப் பட்டுள்ளது. ஆக, எந்தவொரு மதப்பிரிவையும் பொறுத்த வரையில் அமெரிக்கா சமயச்சார்பு எதுவும் அற்றதேயாகும். எனினும் அதே சமயத்தில், பிரஜைகளுக்கு மெய்யானதொரு மத ஆதாரம் அவசியம் என்னும் பொது நம்பிக்கையைப் பொறுத்த அளவில் அது சமயச் சார்புடைய தூய ராஜ்யமா கவே திகழ்கிறது."

அமெரிக்க நிலையைப்பற்றிய இந்த வர்ணனை தெளிவாக வும் திட்டமாகவும் உள்ளது என்பதைக் கூறத்தேவையில்லை. என் சொந்த அனுபவம் சம்பந்தப்பட்ட ஒரேயொரு விஷ யத்தை மட்டும் மேற்கொண்டு கூற விரும்புகிறேன்: அமெ



ரிக்க ஜனாதிபதிகளின் பிரசங்கங்களில் நான் முதன்முதலாகக் கேட்டது, ஃபிராங்க்ளின் ரூஸ்வெல்ட் நிகழ்த்தியதாகும். ரேடியோவில் புரிந்த அந்தச் சொற்பொழிவில் ஆண்டவனை அவர் பிரார்த்தனை செய்ததைக் கேட்டேன்[1]—அந்தக் கணமே, 'மதத்துக்கும் அரசாங்கத்துக்குமிடை பாகுபாடு' என்னும் வாக்கியத்துக்கு ஃபிரான்ஸில் உள்ள பொருள் அமெரிக்காவில் பொருந்தாது என்பதைத் திடுமெனத் திட்டமாக உணர்ந் தேன்.

அதனுல் எனக்கு ஏற்பட்ட ஆச்சரியம் 'அரசாங்கமும் மத மும் கலக்கலாகாது' என்று அரசியல் சட்டத்தில் சந்தேகத் துக்கு இடமேயின்றி விதித்த அதே காங்கிரஸ்தான்,—'எம் மதத்தையும் நிலைநிறுத்துவதை யொட்டியோ, எந்த மதமும் தளையின்றிக் கடைப்பிடிக்கப்படுவதைத் தடைசெய்யும் முறை யிலோ எந்தச் சட்டத்தையும் காங்கிரஸ் இயற்றலாகாது' என்று தெளிவாகக் குறிப்பிட்ட அதே சபைதான்—இருசபை களுக்கும் சமய அனுஷ்டானக்காரர்களை நியமித்ததோடு ராணுவத்திலும் அவர்கள் நியமிக்கப்படவும், அவர்களுக்குச் சம்பளம் கொடுக்கப்படவும் வகை செய்தது என்பதைக் கவ னித்திருந்தால் என்னுடைய தப்பு குறைந்திருப்பது உறுதி என்பதைக் கூறவும் வேண்டுமா?

அரசியல் ஞானி 'லாக்' வெளியிட்ட கருத்துக்களும், 18-வது நூற்றூண்டின் புத்தறிவு இயக்கக் கருத்துக்களும் அமெரிக்க அரசியலமைப்பில் செல்வாக்குச் செலுத்தியிருப்பது மெய்தான். ஆயினும், மற்ருெரு புத்தகத்தில் நான் குறிப்பிட் டுள்ளதுபோல, அந்தச் செல்வாக்குகளையும் மீறி பழம்பெரும் பரம்பரைச் செல்வங்களான கிறிஸ்தவ தர்மத்திலும் நாகரிகத் திலும் அமெரிக்க அரசியல் சட்டம் ஆழ வேரூன்றியுள்ளது. "அன்றையதினம் நிலவிய தத்துவங்களின் சாயல் படிந்த மகத் தான கிறிஸ்தவச் சாஸனமாக—சமய குருக்களாலன்றி சாதா ரண மக்களால் வகுக்கப்பட்ட—சமயச் சாஸனமாக அதனை

---

1. உள்நாட்டுப் போரின்போது உண்ணுநோன்பு இருக்கவும் பிரார்த்தனை புரியவும் பல்வேறு தேசிய தினங்களை லிங்கன் பிரகட னம் செய்தார் என்பது நினைவுறத்தக்கது; அவற்றில் முக்கியமா னது 1863, ஏப்ரல் 30-ம் தேதியாகும்.

வர்ணிக்கலாம். கிறிஸ்தவக் கருத்துக்களை யொட்டி அமைந்த இந்த மகத்தான அரசியல் சாஸனத்தின் உள்ளார்ந்த உணர்வும் ஆதர்சமும் ஆண்டவனிடமிருந்தும், எந்த மதநம்பிக்கையினிடமிருந்தும் மனித சமூகத்தை விலக்கிவைப்பதற்கு அடிப்படையில் எதிரானவையே யாகும். ஆண்டவனுக்கு நன்றி செலுத்துவதும், பிரார்த்தனை புரிவதும், முக்கிய அரசாங்கக் கூட்டத்திலும் ஆண்டவனின் பெயரைப் பிரஸ்தாபிப்பதும் ஒரு நாட்டின் அன்றாட நடைமுறையில் அந்த உள்ளுணர்வையும் ஆதர்சத்தையுமே குறிக்கின்றன" என்று 'மனிதனும் அரசாங்கமும்' (மான் அண்ட் தி ஸ்டேட்) என்னும் அந்நூலில் நான் எழுதியுள்ளேன். இந்நாட்டைத் தோற்றுவித்த 'தேசப் பிதாக்கள்' தத்துவ சாஸ்திரிகளோ, அன்றி சமயப் பண்டிதர்களோ அல்லர்; ஆனால், அவர்களுடைய வாழ்க்கைத் தத்துவமும், இயற்கை நியதி, மனித உரிமைகள் ஆகியவை பற்றிய அவர்களுடைய கருத்துக்களும் கிறிஸ்தவப் பகுத்தறிவினால் நிலைநிறுத்தப் பட்டுப் பின் அசைக்கமுடியாத மதநம்பிக்கையினால் வலுவூட்டப்பட்ட சித்தாந்தங்களினாலும் நிரம்பியவையாக இருந்தன.

எனவேதான் சிற்சில சமயங்களில் மறைவாகவும், மற்றும் சில சமயங்களில் யாரும் அறியாமலும் இருப்பினும் மெய்யானதும் உயிர்த்துடிப்பு உடையதுமான மத ஆதர்சம் இந்நாட்டில் ஆழ ஊன்றி, அதனுடைய சமயசம்பந்தமற்ற சகல நடவடிக்கைகளிலும் ஊடுருவி நிற்கிறது. ஆனால் இது காரணமாக மதநம்பிக்கையேதும் அற்றவர்கள், கடுமையான நாஸ்திகர்கள்கூட, இந்நாட்டில் அனாவசிய அசௌகரியமெதையும் அனுபவிப்பதாகக் காணவில்லை—மதப்பிரிவுகளால் நடத்தப்படும் பள்ளிகளுக்குக் குழந்தைகள் இலவசமாக அழைத்துச் செல்ல ஏற்பாடாகும்போதுதான் அவர்கள் எல்லையற்ற அதிர்ச்சி அடைகிறார்கள்.[1]

1. எவர்ஸன் வழக்கில் தலைமை உயர்நீதிமன்றத் தீர்ப்பையடுத்துக் கத்தோலிக்கர்களுக்கு எதிராகக் குமுறல் வலுத்து பி. ஓ. ஏ. யூ. ('அரசாங்கத்தையும் மதத்தையும் பிரிப்பதற்கான பிராடஸ்டண்டுகள், மற்ற அமெரிக்கர்களின் கூட்டணி' என்னும் ஸ்தாபனம் தோற்றுவிக்கப்பட்டது இது சம்பந்தமாகக் குறிப்பிடத் தக்கது.



சமயச் சார்பற்ற நிலைக்கு எதிர்ப்போக்கு என்னதான் வலுவுடையதாக இருப்பினும், மேலே பீடர்ட்ரக்கர் ஆய்ந்து கூறிய மத ஆதர்சத்தினின்று அமெரிக்க நாகரிகத்தை எக்காலத்திலும் அதனால் பிரிக்க இயலாது என்றே கூற வேண்டும்.

* * *

எனினும், அவற்றின் ஆதிக்கக் களங்கள் எவ்வளவு தான் வேறுபட்டிருப்பினும் அரசாங்கத்துக்கும், சமயஸ்தாபனங்களுக்குமிடையே அறிவார்ந்த ஒத்துழைப்பின் அவசியம்—அதிகாரத்தை ஆக்கிரமிப்பதற்கன்றி பொதுநலத்துக்குப் பணி புரிவதற்கான விருப்பத்தை ஆதாரமாக உடையது இந்த ஒத்துழைப்பு—அமெரிக்காவில் நடைமுறையில் போதிய அளவு புரிந்துகொண்டு ஏற்கப்படவில்லை என்பதையும் கூறியாக வேண்டியுள்ளது; குறிப்பாக, "மாக் கொல்லம்" வழக்கை[1] யொட்டி ஜெஃப்பர்ஸன் குறித்த 'பிரிவினைச் சுவர்' பற்றித் தலைமை உயர்நீதி மன்றம் கொண்ட பொருளைக் கருதும்போது இது தெளிவாகிறது. நான் சற்றுமுன் குறிப்பிட்ட நான்கு பெரும் தன்மைகளும் எத்தனை தான் முக்கியத்துவம் உடையவையாக இருப்பினும் நம் நாகரிக சகாப்தத்துக்குப் பொருத்தமானதென என் கருத்தில் தென்பட்ட சரித்திர லட்சியத்தை யொட்டி 'மெய்யான மனிதத் தன்மை' என்னும் என் நூலில் நான் குறித்துக்காட்ட முயன்ற பரிகாரங்களுடன் பொதுவாக இன்றைய யதார்த்த நிலை இணைந்தில்லை என்பது உண்மை. எனினும் அப்பரிகாரங்களை நோக்கி இன்றில்லாவிடினும் பிற்காலத்தில் திட்டமாக முன்னேறுவதற்கு உகந்த சூழ்நிலை இந்நாட்டைப் போல வேறெங்கும் இல்லை என்பதை இவ்வியல்புகள் குறிக்கவே செய்கின்றன.

*1.* பொதுப் பள்ளிக் கட்டடத்தில் மதபோதனை நடப்பது அரசியல் சட்டத்துக்கு எதிரானது என்று வழக்கில் தீர்ப்பு அளிக்கப்பட்டது. "இவ்வகையில் இதுகாறும் வந்துள்ள சில வழக்குகளில் நாம் நடந்துகொண்டுள்ள விதம் பெருமைப்படத் தக்கதல்ல. சாதாரணச் சட்ட அம்சங்களை மட்டிலும் பொறுத்துக்கூட இத்தீர்ப்பு சரியானதல்ல என்பதே என் திடமான கருத்து" என்று இது பற்றிப் பீடர் ட்ரக்கர் கூறியுள்ளார்,

## 4. சமயமும் சாதாரண மக்களும்

இந்நாட்டின் லௌகிக மனப்போக்கில் நிலவும் சமய ஆதர்சமானது குறிப்பிட்ட தனிமனிதர் அல்லது குடும்பங்கள் ஆதரிக்கும் மதக்கோட்பாடுகளிலேயே ஊன்றி நிற்கிறது என்பது வெளிப்படை; குறிப்பான ஓர் ஆன்மிக நியதியை ஒட்டியே அமைகிறது அந்த மக்களின் வாழ்க்கை. ஆனால் நாட்டின் பொதுவான நடத்தையைப் பொறுத்த அளவிலோ இதே மத ஆதர்சமானது லௌகிக நியதியில் மத நம்பிக்கையைப் புகுத்துவதுபோல அமைந்து விடுகிறது. மத நம்பிக்கையிலிருந்து வழுவிவிட்ட ஏராளமானோரையும் லௌகிக நியதியில் புகுத்தப்படும் மத நம்பிக்கை ரட்சிக்கிறது; ஆனால் உயிரோட்டமுள்ள மத நம்பிக்கையை மற்றவர்கள் கைவிடாமல் இருந்தால்தான் அது சக்தி குன்றாமல் இருக்க இயலும் என்பது தெளிவு.

மேலும், நான் முன்னரே வலியுறுத்திய சகோதரப் பான்மையும், விட்டுக் கொடுக்கும் தன்மையும் நிலவுவதன் பயனாக, இங்குப் பல்வேறு மதப்பிரிவுகள் இருக்கின்றன. அவற்றினிடையே அவ்வப்போது மனஸ்தாபங்கள் மூள்கின்ற போதிலும் அவை அவற்றுக்குப் பொருத்தமாகவே அமைந்துள்ளது; இந்த மத ஆதர்சம். இவ்விஷயத்தைச் சமீபத்தில் வெளியான புத்தகமொன்று விரிவாக விளக்குகிறது. வில் ஹெர்பெர்க் எழுதிய 'ப்ராடெஸ்டெண்ட், கத்தோலிக்கர், யூதர்'[1] என்னும் அந்நூல், அமெரிக்க வாழ்க்

[1]. ப்ராடெஸ்டெண்டுகளுடனும் கத்தோலிக்கருடனும் ஒப்பிடும்போது யூதர்கள் மிகச் சிறுபான்மையினரே. எனினும் அமெரிக்க வாழ்வியலில் அவர்களும் இன்றியமையாத பங்கு பற்றத்தான் செய்கின்றனர்.

அமெரிக்க, யூத மனப்போக்குகளிடையேயுள்ள பரஸ்பர பந்தங்கள், இஸ்ரேல் ராஜ்யம் சம்பந்தமாகப் பல அமெரிக்கப் பிரபலஸ்தர்கள் கூட்டாக எழுதப்பட்டு 1957 ஃபிப்ரவரி 3-ம் தேதியன்று 'நியூயார்க் டைம்ஸ்' பத்திரிகையினால் வெளியிடப்பட்ட கடிதத்தில் சரியான முறையில் வலியுறுத்தப்பட்டுள்ளது. அக் கடிதம் வருமாறு :—

"பொது லட்சியமொன்றை எய்தும் பொருட்டு ஒன்றுபட்டுள்ள



கையில் அடிப்படையாகக் காணப்படும் பருத்துவக் கொள்கையை நன்கு விவரிப்பதோடன்றி இந்தக் கொள்கை எப்படி யூத—கிறிஸ்தவ மரபுகளினாலான ஒரே கட்டுக் கோப்பினால் அரவணைக்கப்படுகிறது என்பதையும் காட்டுகிறது.

எந்த அரசாங்கத்தின் அதிகாரிகளும் மதத்தை அளவு கடந்து பயன்படுத்துவது பொதுவாக நல்லதல்ல என்பதை நான் மறுக்கவில்லை. அதைப்போன்றே, சற்றுமுன் மனத்தை உறுத்தும் சில ஆழ்ந்த சம்பவங்கள் பற்றி நான் குறிப்பிட்ட வகையில், ஒரு நாடு அல்லது நாகரிகத்தின் லௌகிக நியதியில் மத ஆதர்சம் இடம் பெறுவதில்—அது என்ன தான் சகஜமானதாகவும், சிறந்த பலன் விளைப்பதாகவும் இருப்பினும், தற்செயலாக நேரக்கூடிய ஆபத்துகளுக்கு இடமுண்டு என்பதைக் கூறியேயாக வேண்டும். முக்கியமாக, மதமே லௌகிகப் பான்மை பெற்றுவிடக் கூடும்; அதாவது, லௌகிக அமைப்பு

குடியேறிகளே நாம் என்பது நம் நாட்டைப் பொறுத்த வரையில் அடிப்படையான அம்சங்களில் ஒன்றாகும். கடந்த எட்டரை ஆண்டுகளில் 72 நாடுகளைச் சேர்ந்த 8 லட்சம் பேர் குடியமர அனுமதித்திருப்பதன் மூலம் இஸ்ரேல் ராஜ்யமும் நம் சரிதத்தைத்தான் திரும்ப நிகழ்த்தியுள்ளது.

"பல இனமூலங்களின் வழிவந்தவர்களால் படைக்கப்பட்ட நாடு நம் ஐக்கிய அமெரிக்கா என்பதில் நாம் பெருமை கொள்கிறோம். புது நாட்டில் புது வழியும் வாழ்வும் கண்டவர்கள் என்பதிலும், இன்னமும் இவ்வுணர்ச்சியே படைத்திருப்பவர்கள் என்பதிலும் நாம் பெருமை அடைகிறோம். இஸ்ரேலும் தன் சிறிய பரப்பில் இம்முறையைத் தான் தீவிரமாகப் பின்பற்றுகிறது.

குடியரசு ஆட்சி முறையின் கட்டுக்கோப்புக்குள் ஜனநாயக ரீதியிலான சமசந்தர்ப்பத்தை நிலைநாட்ட அமெரிக்கர் பாடுபட்டதையே அதே அளவு ஆர்வத்துடன் இஸ்ரேலியர் பின்பற்றுகின்றனர்.

"தனி மனிதர் மதிப்பைப் பாதுகாக்கப் பன்னெடுங் காலத்துக்கு முன் அமெரிக்கராகிய நாம் சங்கற்பம் செய்து கொண்டோம். இவ்வாறு தான் மக்களின் சாதாரண உரிமைகளையும் பாதுகாக்கச் சட்டங்கள் இயற்றியிருப்பதோடு நம்மைப் பின்பற்றி இதற்காக ஒரு உயர்நீதி மன்றத்தையும் இஸ்ரேலியர் நிறுவியுள்ளனர்."

களிலேயே இடம் பெற்றுவிடும் சடங்குகளாகி விடலாம்; குறிப்பிட்ட நாகரிகத்தின் லௌகிக வளர்ச்சியிலேயே அது ஒன்றி விடக்கூடும். அதன் விளைவாகத் தன் அடிப்படையான தெய்விகத் தன்மையையும், பரத்துவப் பாங்கையும், நாட்டுப்பற்றுக்கு மேம்பட்ட நிலையையும் மதம் இழந்து, குறிப்பிட்ட தேச அல்லது லௌகிக நலன்களுக்குக் கீழ்ப்பட்டதாகிவிடக் கூடிய ஆபத்து இருக்கிறது.

"சமய நம்பிக்கையும் சுதந்தரமும் (ஃபெயித் அண்ட் ஃப்ரீடம்) என்னும் தம் நூலில் மிஸ் பார்பாரா வுட் பொருத்தமாகக் குறிப்பிடுவது போல, "மேற்கு நாடுகளின் சுதந்தரத்துக்குப் பாதுகாப்பு அரணாக ஆண்டவனிடம் நம்பிக்கை மீண்டும் ஏற்படுத்தப்படுவது அவசியம் என்னும் வாதம் ஒரு தலை. இத்தகைய நம்பிக்கை மறுமலர்ச்சிக்கு சமூகவியலையும், மற்றும் அரசியல், சரித்திரங்களையும் ஒட்டிய சான்றுகளைக் கூறுவது முற்றிலும் வேறு விஷயம்... கடவுள் நம்பிக்கை என்பது அவரவர் சௌகரியத்தையொட்டியதன்று; மறைமுகமாகவன்றிச் சமூகவியலையும் கூடப் பொறுத்ததன்று...அது பயன் தரத்தக்கது என்று மக்கள் கருதும் வரையில் மேற்கு நாடுகளில் ஆஸ்திகம் மீளாது; அது மெய்யானது என்பதை அவர்கள் உணரும்போது தான் அந்நிலை திரும்பும்'' அதாவது, நாம் உயிர் வாழ்வதற்காக மட்டுமே நம்பிக்கை தேவையில்லை; அதன் பொருட்டே நாம் வாழவும், தேவையானால் அதற்காக நாம் உயிரைக் கொடுக்கவுமே அந்த நம்பிக்கை தேவை.

ஆகவே, தன்னை லௌகிக மயமாக்குவதற்கான போக்கு எதையும் சமயத்தினால் வெற்றிகரமாக எதிர்த்து நிற்க முடியாமற் போகுமானால்—அதாவது, மனித ஆன்மாக்களின் அந்தரங்கத்தில் தெய்விகப் பேருண்மையிடம் நம்பிக்கையும், ஆண்டவனின் நியதிகளிடம் பணிவும், மெய்யான அன்புக்கனலும், தெய்விக அருள் பெற்ற வாழ்வும் சீராக வளர்ந்தோங்காமற் போனால்—லௌகிகத் தன்மையுடையத் தாக்கப்படும் சமய ஆதர்சம் தோல்வியுறத்தான் நேரும் உள்ளதென முடிவு கட்டலாம்.

* * *



ஒரு நாடு மத ஆதர்சம் உடையது என்று கூறுவதைக் கொண்டு அந்த ஆதர்சம் தேவையான அளவு ஆழ்ந்தது என்றோ, திட்டமானது என்றோ கூறுவதாகக் கொள்ள முடியாது. இன்றைய உலகில் எந்நாட்டிலும் இருக்கும் நிலவரத்துக்கும், கிறிஸ்தவ தர்மம் குறிக்கும் முழுப்பொருளோடு அமைந்த நாகரிகத்துக்கும் வெகு தொலைவு; மனித சரித்திரத்தின் எந்தச் சகாப்தத்துடன் ஒப்பிட்டாலும்கூட, மெய்யான கிறிஸ்தவ ஆதர்சமுடைய நாகரிகம் என்னும் லட்சியத்திலிருந்து நெடுந்தூரத்திலேயேயே நாம் இருக்கிறோம்.

எனினும் வருங்காலத்தைப் பொறுத்துள்ள வாய்ப்புக்கள் தான் இன்றைய நிலையில் நாம் முக்கியமாக கவனிக்க வேண்டியவை. இந்த நோக்கிலிருந்து பார்க்கும்போது, புதிய கிறிஸ்தவ நாகரிகமொன்று எப்போதாவது தோன்றுமாயின், மனித சரித்திரத்தில் புதியதொரு கிறிஸ்தவ சாம்ராஜ்யம் எழுமாயின், அதன் ஆரம்பஸ்தலம் அமெரிக்காவாகத்தான் இருக்கும் என்றே நமக்குத் தோன்றக்கூடும். அப்போது, பழங்கால நாகரிகங்களுக்கு மத்தியதரைக் கடல் கேந்திரமாக இருந்ததுபோல அட்லாண்டிக் மகாசமுத்திரம், மேற்கத்திய நாகரிகத்தின் ஊற்றுக் கண்ணாகத்திகழும். அதன் பின், துரதிருஷ்டங்களையும் ஏமாற்றங்களையும் பொருட்படுத்தாமல் எப்போதும் ஃபிரெஞ்சுக்காரர்கள் நாடும், அவர்களிடையே நெடுங்காலமாக நிலைத்து நின்று வந்திருக்கும் கிறிஸ்தவ தர்மம் அமெரிக்கரின் கிறிஸ்தவ தர்மத்தின் தொடர்பினால் புத்துயிர் பெற்று, அதனோடு இணைந்து வளரவும் கூடும்.

புதியதொரு கிறிஸ்தவ நாகரிகத்தைப் பொறுத்த வரையில் என் கருத்துக்களை முற்றிலும் தெளிவாக்க விரும்புகிறேன்.

புதிய கிறிஸ்தவ சாம்ராஜ்யத்தை ஸ்தூலமாகக் கூட இன்றைய அமெரிக்க நாகரிகம் குறிப்பதாக நான் கூறுகிறேன் என எண்ணவேண்டாம். புராதனக் கிறிஸ்தவ நாகரிகத்தின் தொடர்ச்சியான சில அம்சங்களுடன் லௌகிகத் துறையில் புதிய சாதனைகளும். புதிய சரித்திரச் சூழ்நிலைகளும் சேர்ந்து சமைந்த கலவையே தற்கால அமெரிக்க நாகரிகம்.

எனினும், புதியதொரு கிறிஸ்தவ சாம்ராஜ்யம் தழைத்

தோங்குவதற்குத் தகுந்த களமாக இன்றைய அமெரிக்க நாகரிகம் அமையக்கூடும் என்பதில் ஐயமில்லை. ஆனல் அதற்கு, முன்னெரு அத்தியாயத்தில் விவரிக்கப்பட்ட இயற்கை வாதத்தை நோக்கிச் செல்லும் போக்கைத் தடுத்துத் திருப்புமளவு உரம் படைத்த ஆன்மாக்களில் தெய்விகப் பொறி புகுந்து புத்துணர்வு ஏற்படுவது அவசியம்; அன்றியும், பொது மனப்போக்கிலும் நடத்தையிலும் கிறிஸ்தவ நம்பிக்கையும் நெறிமுறையும் நிலவச் செய்யும் உறுதி இன்றியமையாதது. இந்த ஆன்மிக மறுமலர்ச்சி பொது வாழ்விலும் பிரதிபலிக்குமளவுக்கு ஆற்றல் பெறுமானல், கறுப்பரைப் பொறுத்துள்ள வெறுப்பையும் தாரதம்மியப் பான்மையையும் கிறிஸ்தவ நிதியுணர்வு முதன் முதலில் ஒழித்துக்கட்டுவது உறுதி. பயங்கர ஆயுதங்களுடன் கூடிய நவீனப் போர் முறைகள் எதிர்ப்படுங்கால் கிறிஸ்தவ விவேகம் மற்ற எதையும்விட நல்லொழுக்க நிர்ப்பந்தங்களுக்கும், ஆண்டவனின் அருள் நியதிக்கும் உட்படுவது அத்தியாவசியம் என்பதை அறிவுறுத்துவதில் வெற்றிபெறும்; அதன்மூலம் அணு ஆயுத அச்சுறுத்தல் அகலவும் வழி கண்டுபிடிக்கும். இன்றைய உலக நிலையைப் பார்க்கும்போது, மனிதகுலத்தை அச்சுறுத்தும் சீரழிவுகளையும் படுநாசக் கருவிகளையும் கண்டபிறகும் கூடப் புதியதொரு கிறிஸ்தவ சாம்ராஜ்யம் பற்றிப் பேச எப்படி நான் துணிந்தேன்? அதைவிட நம்மிடையே ஏற்கெனவேயே தலையெடுத்துவிட்ட புதிய காட்டுமிராண்டித்தனத்தைப் பற்றி நான் பேசுவதல்லவா பொருத்தமாகும் என்று உங்களில் சிலர் கேட்கக்கூடும். இதற்கு மூன்றுவிதமாக விடை கூறலாம்.

முதலாவதாக, சரித்திரம் பிணக்கான இரு கூறுகள் உடையது. தீமை வெற்றி பெறுவதாகத் தோன்றும் அதே சமயத்தில் நீதியுணர்வும் மறுமலர்ச்சிச் சக்தியும் மறைவில் சுரந்து பொங்கி மனிதகுல இயக்கத்தைத் துரிதப்படுத்தும். சரித்திரத்தின் ஒவ்வொரு சகாப்தத்திலும் நம்பிக்கைக்கு இடமேயில்லாத நிலையை உலகம் கண்டுள்ளது; அதை எப்படியோ தடுமாறித் தத்தளித்துச் சமாளித்துமிருக்கிறது. ஒவ்வொரு சகாப்தத்திலுமே விநாசத்தில் ஆழ்ந்தபின் விடிமோட்சம் பெற்றிருக்கிறது இவ்வையகம்.

இரண்டாவதாக, கிறிஸ்துவிடம் எந்த அளவுக்கு மக்க



ளிடை மெய்யான நம்பிக்கை உள்ளதோ அந்த அளவுக்குப் புதிய கிறிஸ்தவ சாம்ராஜ்யமும் சாத்தியமே. முழுமுற்றுன நாஸ்திகம் பரவிப் பெருகியிருப்பினும்கூட கிறிஸ்துவிடம் நம்பிக்கை நிலைத்திருப்பதோடன்றி 19-வது நூற்றுண்டிலிருந்தோரைவிடத் தற்காலத்தவரிடை தைரியமும் பெற்றுள்ளது; நாகரிகத்தின் லெளகிகத் தன்மையைப் புரிந்துகொண்டு மாற்ற முன்னிலும் தீவிர முனைப்பையும் அதனிடம் காண்கிறோம்.

மூன்றுவதாக, புதிய கிறிஸ்தவ சாம்ராஜ்யம் சாத்தியமானது மட்டுமன்றி, மத்திய காலச் சீர் குலைவுக்குப்பின் சரித்திரத்தில் செயற்பட்ட மெய்யான முற்போக்குச் சக்திகள் யாவும் நடைமுறையில் நாடும் மையக் கருத்தாகவும் அது இருக்கிறது. எதிர்த்திசையில் இழுக்கும் இன்னும் சில சக்திகளும் உள்ளன. சுருங்கக் கூறின் மனித சுதந்தரத்தையே பொறுத்திருக்கிறது இப்பிரச்னையின் முடிவு.

இந்த விடைகள் ஏற்புடையவையாக இல்லையெனின் நான் என்ன செய்யக்கூடும்? என் பெயர் ஜாக்கஸ் என்று இருப்பதாலேயே புதிய கிறிஸ்தவ சாம்ராஜ்யம் தோன்றக்கூடும் என்று நான் நம்புவதாக வேண்டுமானல் சொல்லலாம். பீடர் என்னும் பெயர் தெய்வ நம்பிக்கையைக் குறித்தது; ஜான் என்பது கருணையைச் சுட்டியது; ஜேம்ஸ் என்பதோ, இரண்டாவது சமய நற்குணத்தைக் குறிப்பிட்டது.

இவ்வுலகின் அல்லல்களிடையே ஞானிகளும் ஆதி சித்த புருஷர்களும் தோன்றுவர் என்றே எதிர்பார்க்கிறேன். அவர்களின்றிப் புதிய கிறிஸ்தவ சாம்ராஜ்யம் எக்காலத்திலாவது ஏற்படவியலுமா என்பதை நானறியேன்.

தோங்குவதற்குத் தகுந்த களமாக இன்றைய அமெரிக்க நாகரிகம் அமையக்கூடும் என்பதில் ஐயமில்லை. ஆனால் அதற்கு, முன்னொரு அத்தியாயத்தில் விவரிக்கப்பட்ட இயற்கை வாதத்தை நோக்கிச் செல்லும் போக்கைத் தடுத்துத் திருப்புமளவு உரம் படைத்த ஆன்மாக்களில் தெய்விகப் பொறி புகுந்து புத்துணர்வு ஏற்படுவது அவசியம்; அன்றியும், பொது மனப்போக்கிலும் நடத்தையிலும் கிறிஸ்தவ நம்பிக்கையும் நெறிமுறையும் நிலவச் செய்யும் உறுதி இன்றியமையாதது. இந்த ஆன்மிக மறுமலர்ச்சி பொது வாழ்விலும் பிரதிபலிக்குமளவுக்கு ஆற்றல் பெறுமானால், கறுப்பரைப் பொறுத்துள்ள வெறுப்பையும் தாரதம்மியப் பான்மையையும் கிறிஸ்தவ நீதியுணர்வு முதன் முதலில் ஒழித்துக்கட்டுவது உறுதி. பயங்கர ஆயுதங்களுடன் கூடிய நவீனப் போர் முறைகள் எதிர்ப்படுங்கால் கிறிஸ்தவ விவேகம் மற்ற எதையும்விட நல்லொழுக்க நிர்ப்பந்தங்களுக்கும், ஆண்டவனின் அருள் நியதிக்கும் உட்படுவது அத்தியாவசியம் என்பதை அறிவுறுத்துவதில் வெற்றிபெறும்; அதன்மூலம் அணு ஆயுத அச்சுறுத்தல் அகலவும் வழி கண்டுபிடிக்கும். இன்றைய உலக நிலையைப் பார்க்கும்போது, மனிதகுலத்தை அச்சுறுத்தும் சேரழிவுகளையும் படுநாசக் கருவிகளையும் கண்டபிறகும் கூடப் புதியதொரு கிறிஸ்தவ சாம்ராஜ்யம் பற்றிப் பேச எப்படி நான் துணிந்தேன்? அதைவிட நம்மிடையே ஏற்கெனவேயே தலையெடுத்துவிட்ட புதிய காட்டுமிராண்டித்தனத்தைப் பற்றி நான் பேசுவதல்லவா பொருத்தமாகும் என்று உங்களில் சிலர் கேட்கக்கூடும், இதற்கு மூன்றுவிதமாக விடை கூறலாம்.

முதலாவதாக, சரித்திரம் பிணக்கான இரு கூறுகள் உடையது. தீமை வெற்றி பெறுவதாகத் தோன்றும் அதே சமயத்தில் நீதியுணர்வும் மறுமலர்ச்சிச் சக்தியும் மறைவில் சுரந்து பொங்கி மனிதகுல இயக்கத்தைத் துரிதப்படுத்தும். சரித்திரத்தின் ஒவ்வொரு சகாப்தத்திலும் நம்பிக்கைக்கு இடமேயில்லாத நிலையை உலகம் கண்டுள்ளது; அதை எப்படியோ தடுமாறித் தத்தளித்துச் சமாளித்துமிருக்கிறது. ஒவ்வொரு சகாப்தத்திலுமே விநாசத்தில் ஆழ்ந்தபின் விடிமோட்சம் பெற்றிருக்கிறது இவ்வையகம்.

இரண்டாவதாக, கிறிஸ்துவிடம் எந்த அளவுக்கு மக்



களிடை மெய்யான நம்பிக்கை உள்ளதோ அந்த அளவுக்குப் புதிய கிறிஸ்தவ சாம்ராஜ்யமும் சாத்தியமே. முழுமுற்றான நாஸ்திகம் பரவிப் பெருகியிருப்பினும்கூட கிறிஸ்துவிடம் நம்பிக்கை நிலைத்திருப்பதோடன்றி 19-வது நூற்றாண்டிலிருந்ததைவிடத் தற்காலத்தவரிடை தைரியமும் பெற்றுள்ளது; நாகரிகத்தின் லௌகிகத் தன்மையைப் புரிந்துகொண்டு மாற்ற முன்னிலும் தீவிர முனைப்பையும் அதனிடம் காண்கிறோம்.

மூன்றாவதாக, புதிய கிறிஸ்தவ சாம்ராஜ்யம் சாத்தியமானது மட்டுமன்றி, மத்திய காலச் சீர் குலைவுக்குப்பின் சரித்திரத்தில் செயற்பட்ட மெய்யான முற்போக்குச் சக்திகள் யாவும் நடைமுறையில் நாடும் மையக் கருத்தாகவும் அது இருக்கிறது. எதிர்த்திசையில் இழுக்கும் இன்னும் சில சக்திகளும் உள்ளன. சுருங்கக் கூறின் மனித சுதந்தரத்தையே பொறுத்திருக்கிறது இப்பிரச்னையின் முடிவு.

இந்த விடைகள் ஏற்புடையவையாக இல்லையெனின் நான் என்ன செய்யக்கூடும்? என் பெயர் ஜாக்கஸ் என்று இருப்பதாலேயே புதிய கிறிஸ்தவ சாம்ராஜ்யம் தோன்றக்கூடும் என்று நான் நம்புவதாக வேண்டுமானால் சொல்லலாம். பீடர் என்னும் பெயர் தெய்வ நம்பிக்கையைக் குறித்தது; ஜான் என்பது கருணையைச் சுட்டியது; ஜேம்ஸ் என்பதோ, இரண்டாவது சமய நற்குணத்தைக் குறிப்பிட்டது.

இவ்வுலகின் அல்லல்களிடையே ஞானிகளும் ஆதி சித்த புருஷர்களும் தோன்றுவர் என்றே எதிர்பார்க்கிறேன். அவர்களின்றிப் புதிய கிறிஸ்தவ சாம்ராஜ்யம் எக்காலத்திலாவது ஏற்படவியலுமா என்பதை நானறியேன்.

# 20

## அமெரிக்கா : பொன்னுலக நாடு

பருப்பொருளில் இன்றியமையாமை, மக்களின் தளையற்ற விருப்பம் ஆகியவற்றுக்கேற்பச் சரித்திரத்தின் ஒவ்வொரு கட்டத்திலும் வருங்காலத்தைச் சார்ந்து இரு வேறு திருப்பங்களுக்கு இடமுண்டு.

ஆகவே இன்னும் சில நூற்றுண்டுகளுக்குள் தன் சுகபோக வளம், சக்தி ஆகியவற்றில் மட்டும் நாட்டமுடைய நாடாக அமெரிக்கா உருவெடுக்கவும் கூடும். ஆனால் அந்தத் தோது நடைமுறையில் விளையக் கூடும் என்று எனக்குத் தோன்றவில்லை. ஏனெனில், மற்ற நாடுகளைப்போல அமெரிக்கா இல்லை என்பது தெளிவு. தன்னைத் தோற்றுவித்த ஆற்றலின் மூல ஊக்கத்தைக் கைவிட நேர்ந்தாலன்றி அப்படிப்பட்ட நாடாக அது மாறாது என்பது உறுதி.

நான் சற்றுமுன் குறிப்பிட்டதுபோல அதன் மெய்யான வருங்காலம் புரியதொரு கிறிஸ்தவ நாகரிகத்திற்கு எப்படியாகிலும் வழி வகுப்பதிலேயே இருக்கிறது. அதற்குள்ள முயற்சி மேற்கொள்ளப்படுமேயானால் அது பொதுப் பணியாகவே இருக்கும். கிறிஸ்தவக் கனலினால் கிளறப்படும் எல்லா நாடுகளின் ஒத்துழைப்புடனேயே அதைச் சாதிக்கவியலும். 'இரும்புத்திரைக்'குப்பின் இன்னல்களுக்கு இலக்காகி இப்போது 'மௌனகுருக்களாக' இருக்கும் கிறிஸ்தவர்கள் அனைவரும், திரும்பவும் தடையின்றிப் பேசச் சந்தர்ப்பம் பெறும் போது இது விஷயத்தில் உலகுக்கு உயர்ந்த போதனைகள் புரியக்கூடும் என்பதில் ஐயமில்லை. தாராள நோக்குடைய ஆதர்சம் காரணமாகவும், ஆத்ம சோதனை புரியும் சுயவிமர்சன நோக்குக் காரணமாகவும் மெய்யான அமெரிக்க மரபைச் சார்ந்து அமைந்துள்ள ஐக்கிய அமெரிக்காவும் நாகரிகமும்' (தி யுனைடெட் ஸ்டேட்ஸ் அண்ட் ஸிவிலிஸேஷன்) என்னும் தம் அரிய நூலில் இன்று நமக்காகக் காத்திருக்கும் பெருமுயற்சியின் அகில உலக ரீதியான மனிதாம்சத்தை மெத்தப்



பொருத்தத்துடன் அறிவுறுத்தியுள்ளார், 'ஜான்நெஃப்' என்ற சான்றோர். அந்நூலிலின் முடிவுரை மிகுந்த முக்கியத்துவம் உடையது; முன்னெப்பொழுதையும்விட இன்று அவசியமாக விருக்கும் ஒரு உணர்வை அது வலிவுறுத்துகிறது. தேசப் பற்றுக்களையெல்லாம் கடந்து நிற்கவேண்டியதான பேருணர்வு தான் அது. ரூஸோ, மார்க்ஸ் ஆகிய இருவருடைய பிரஸித்தக் கூற்றுக்களையும் சுருக்கிப் பொருத்தி அவர் எழுதியுள்ள அம்முடிவுரை இது தான் : "அறமும் அறிவும் சுதந்தரமாகப் பிறந்தவை. ஆனால் இன்றோ எங்கணும் அவை தளை வசப்பட்டுள்ளன. உலகெங்கிலுமுள்ள நல்லவர்களே, கண்ணியமானவர்களே, அறிவுடையவர்களே, உண்மையை நேசிப்பவர்களே, ஒன்று கூடுங்கள் அனைவரும். உங்களுக்குச் சொந்தலாபம் தேடித்தரக் கூடியதாக இதில் ஏதுமில்லை; ஆனால் மனித குலத்துக்குப் பணிபுரிய வாய்ப்பு உண்டு. மனித உள்ளத்தையும் உணர்வையும் மறுபிறவி எடுக்கச் செய்யப் பொன்னான சந்தர்ப்பம் இது உங்களுக்கு."

* * *

*1943*-இல் நான் கூறியதை இங்கு மறுபடியும் குறிப்பிடுவது பொருந்துமென்றே கருதுகிறேன் : "ஐரோப்பாவுக்கு ஒரு விஷயம் நன்கு தெரியும், தேவைக்கு அதிகமாகவே தெரியும்—வாழ்க்கையைப் பொறுத்த சோகவியலின் முக்கியத்துவம்தான் அது...அமெரிக்கா ஒரு விஷயத்தை நன்கு அறிந்துள்ளது; மலைத்துப் பிரமிக்க வைக்கும் தன் சாகஸத்துடன் தொடர்பு கொள்வோருக்கு மதிப்பரிய மகத்தான பாடமாக அதனை அது போதிக்கிறது—சாதாரண மனிதனின், மக்களின் மதிப்பும் கௌரவமுமே அது...மகிழ்ச்சியை நாடித் தேடச் சாதாரண மனிதனுக்கு உரிமை உண்டென்பதை அது உணர்ந்துள்ளது. சுதந்திர வாழ்வின் பூர்வாங்கத் தேவைகளான ஆதார நிலைகளையும் உடைமைகளையும் அனைவரும் பெறுவது அவசியம் என்பதை அது அறிந்திருக்கிறது; அவை மறுக்கப்பட்டு ஏராள மக்கள் அவதிப்படுவதை மனித குலத்தின் மாளாப் புண்ணாக அது மதிக்கிறது. கலாசார, ஆன்மிக வாழ்வையொட்டிய உன்னத லட்சியங்களை நாடுவது உயரிய முயற்சி என்பதையும் அமெரிக்கா அறிந்துகொண்டிருக்கிறது.

"வாழ்வின் துன்பவியலைப் பொறுத்த உணர்வும், தன்

சோகச் சாயலைச் சமாளிக்க ஐரோப்பா காட்டவேண்டிய
துணிவும், மகத்தான மனித சாகஸம்பற்றிய உணர்வும்,
அந்த சாகஸத்தை இனிது முடிக்க அமெரிக்கா காட்டவேண்
டிய துணிவும் ஒன்றுசேர்க்கப்படாவிடில் இவ்வுலகுக்கு
நிலையான நன்மை பிறக்காது.

"ஐரோப்பிய ஆதார உணர்வும், அமெரிக்க ஆதார உணர்
வும் பொதுவான நல்லெண்ணத்துடன் ஒன்றுகூடி ஒத்து
ழைப்பது அவசியம். நாளையே இவ்வுலகில் சுவர்க்கநிலை சித்தி
யாகிவிடுமென நாம் நினைக்கவில்லை. எனினும் நாம் மேற்
கொள்ளவேண்டிய பணியானது—நாகரிகம் நிலைத்து வாழ
வேண்டும் என்று நாம் விரும்பும்பட்சத்தில்—மெய்யான,
உயிர்த் துடிப்புடைய கிறிஸ்தவ தர்மத்தினுல் மதச்சார்பற்ற
இயல்பில் ஊடுருவப்படும் சுதந்தர மக்கள் கொண்ட புத்துலக
மாகும்; அவ்வுலகில் வேத நூலிலிருந்து பெறப்படும் ஆதர்சம்
மனிதனின் சாதாரண வாழ்வைத் தீரம் மிக்க மனிதகுலநல
நாட்டமுடையதாக்கிவிடும்—மனிதரின் இயல்பான பலவீனங்
களுக்கு இடையருமல் இலக்காகக் கூடுமாதலால் இப்பணிக்கு
முன்னெப் பொழுதையும்விட அதிக தைரியமும் நம்பிக்கையும்
அவசியம் என்பதை அறிவுறுத்தத் தேவையில்லை.

* * *

இந்நாட்டைப்போல உலகில் வேறெங்கிலும் கிறிஸ்தவத்
தத்துவஞானத்துக்கு அவ்வளவு தேவை கிடையாது; இங்கு
போல் வேறெங்கும் அந்த ஞானம் ஓங்கி வளரவும் வாய்ப்பு
இல்லை.

* * *

மனித நலாபிவிருத்தி, அரசியல் பொதுநலன் ஆகியவற்
றின் முழுமுதல் முக்கியத்துவத்தைக் கூட்டு ஸ்தாபனங்களுக்கு
உணர்த்தும் உள்ளார்ந்த மாறுதலை, கூட்டுச்சேரும் தொழி
லாளர் வர்க்கத்தின் வளர்ந்தோங்கும் பலத்திலிருந்தும்,
பொதுநலாபிவிருத்தியும் அரசியல் பொதுநலனும் அதிமுக்கி
யம் என்பதை மேன்மேலும் பெரிய அளவில் உணரத்
தொடங்கியிருப்பதிலிருந்தும் பிரித்துப் பார்க்கமுடியாது.
இந்த இரண்டும் சேர்ந்து ஜனநாயக சமுதாயத் துறையில்
புதியதொரு யுகம் பிறப்பதற்கு மகத்தான முன்னறிகுறிகளா
கத் திகழ்கின்றன. எனினும் ஆன்ம வளர்ச்சிக்கு மாருக அறி



வுத்திறனைப் பெரும் கூட்டு ஸ்தாபனங்கள் பெற்ருலும்கூடப்
புதியதொரு கிறிஸ்தவ நாகரிகம் தோன்றுவதற்குப் போது
மானதானது. ஒன்றுகூடி ஓங்கியுள்ள பாட்டாளி வர்க்க
பலத்தைப் பொறுத்தும் இது பொருந்தும். அத்தகைய லட்சி
யத்தின் சாயலைக்கூட அறிவார்ந்த கூட்டுச் சுயநலம் இன்னும்
எட்டிப் பிடிக்கவில்லை; வெகுதொலைவிலேயேதான் இன்னும்
உள்ளது, அந்த லட்சியம்.

சமூக நலனின் நாட்டமுடைய கூட்டு ஸ்தாபனங்களும்,
சமூக மனேபாவம் படைத்த பாட்டாளி வர்க்கமும் அந்த லட்
சியத்தை நோக்கிச் செல்ல தொடங்குவதற்குப் பூர்வாங்க
ஏற்பாடுகளைத்தான் இப்போது செய்து வருகின்றன. இதில்
சித்தியைத் தீர்மானிக்கக் கூடியது ஆன்மீக அம்சமேயாகும்.

இப்போது இந்த உண்மை மேன்மேலும் விளக்கமாகி
வருகிறது. இன்னும் அடுத்த இருபதாண்டுகளில் அமெ
ரிக்காவில் அதிகப் பிரசித்தி உடையவர்களாக ஆன்மிக, தத்
துவ, அறிவுத் துறைகளின் தலைவர்களே இருப்பர் என்று எதிர்
பார்க்க உறுதியான முகாந்தரம் இருக்கிறது. மற்றெந்த
வகையினரையும்விட அவர்களே மிகப் பெரிதும் நலம் நல்கும்
வசதியுள்ளவர்கள் என்னும் ஒரு காரணமே இதற்குச் சாலுவ
தாகும். தமக்கு எவ்வகையினர் அதிகமாகத் தேவையோ
அவர்களைத்தான் தோற்றுவித்துக் கௌரவிக்கும் தன்மை
யுடையதாக இருந்து வருகிறது, சமூகம்.

"போலீஸ்காரர்களைச் சமயக் குரவர்வர்களால் பயமுறுத்
திப் பணிய வைக்கமுடிகிறது என்பதும், அரசியல்வாதிகளுக்
குத் தத்துவ வல்லுனரால் வரம்புகட்ட இயலும் என்பதும்
நாமறிந்ததே. அரக்க குணம் உடைய நம் படைப்புகளுக்குப்
பரிகாரம் செய்யக்கூடிய சக்தி படைத்த தார்மிக; அறிவுத்
துறைத் தலைமையினர் தோன்றுவது திண்ணமெனக் கொள்
ளப் போதிய சரித்திரச் சான்று இருக்கிறது. இத்துறைகளில்
இயங்கும் மனிதர்களுக்குச் சாதாரண நிர்பந்தங்களைச் சமாளிக்
கச் சக்தியுண்டு; தங்கள் பாதையில் பல இடங்களை எதிர்த்து
நிற்பதற்கு அவர்கள் சிரமப்படுவது இயல்பே. கிறிஸ்தவ மர
பைச் சார்ந்த அதியுன்னத ஞானிகளில் சிலர் ஆரம்ப காலத்
தில் உலகோடு ஒத்துப் போக மறுத்துத் தனி வழி சென்றது
தற்செயலாக நேர்த்ததன்று; எனினும் தங்கள் சித்தாந்தங்
கள் மூலம் வருங்காலத்தை வசீகரிக்கவே செய்கின்றனர்.

அமெரிக்கர்கள் ஏற்கக்கூடிய ஒரு 'ஆண்டவ நகர'த்தை மெய்யாகச் சமைப்பவர்கள் இவர்களே என்பது என்கருத்து.

*　　　*　　　*

"அமெரிக்கா ஒரு பொன்னுலக நாடு" என்று தம் அழகிய கவிதையொன்றுக்குத் தலைப்புக் கொடுத்திருக்கிறார், ஆர்ச்சி பால்ட் மக்லீஷ். தொடக்க நாளிலிருந்தே அமெரிக்காவை அதிருஷ்டத் தீவு, மண்ணுலக ஆசைகளை நிறைவேற்றும் நாடு, என்றெல்லாம் ஐரோப்பிய மக்கள் எண்ணி வந்தனர்; அவர்களுக்குப் பண்டங்களையும் உணவையும், தொழிற் சாதனங்களையும் அமெரிக்கா வாரி வழங்கலாம், அவர்களும் அவற்றை விருப்புடன் ஏற்கலாம். எனினும் அவற்றோடு அவர்கள் திருப்தி அடைந்துவிட மாட்டார்கள்; அவற்றுக்காக அமெரிக்காவிடம் நன்றி பாராட்டவும் மாட்டார்கள். அமெரிக்காவிடம் அவர்கள் எதிர்பார்ப்பதெல்லாம் "ஆசை நிறைவு" இந்த முக்கிய கோரிக்கையை இந்நாடு ஒரு போதும் மறவாதிருக்க ஆண்டவன் அருள்வானாக!

இவ்விஷயத்தை இன்னும் குறிப்பாகச் சொல்வதென்றால் இப்படிக் கூறலாம்: மனித மதிப்பு மங்காதிருக்கும்படி அதனைத் தோழமையுணர்வுடன் மதித்துப் பேண வேண்டும்; அதாவது வேத நூலில் மனிதர் காணும் இகநம்பிக்கை மறையாதிருக்கும்படிப் பார்த்துக் கொள்ள வேண்டும்—இதையே அமெரிக்காவிடம் உலகம் எதிர்பார்க்கிறது.

*　　　*　　　*

நாம் யாரை நேசிக்கிறோமோ அவர்களை நம் சொந்த ஆசைக் கனவுகள், நம்பிக்கைகளையொட்டித்தான் நாம் காண முற்படுகிறோம் என்பது மெய்தான். இருப்பினும் என் சொந்த அனுபவக் கலப்பு இருந்த போதிலும்கூட என்னுடைய இந்தச் சிதறிய சிந்தனைகள் வெறும் புள்ளி விவர ரீதியாகப் புரியப்பட்ட ஆராய்ச்சிகள் பலவற்றைவிடப் பொருத்தமான முறையில் உள்ளனவென்றே நம்புகிறேன். மேலும், அமெரிக்க அரங்கில் காணும் பல அம்சங்களைப் பற்றி முக்கியமான அம்சங்களைப்பற்றியும்கூட, நான் பிரஸ்தாபிக்கவேயில்லை. இங்குமங்குமாக ஓடும் சிந்தனைகளுக்கு முடிவே இல்லாமல் இருக்கலாம்; ஆனால் படிப்பவரின் பொறுமைக்கு எல்லை உண்டல்லவா? ஆகவே இதோடுஎன் விளக்கத்தை நிறுத்திக் கொள்கிறேன்.

---

Jacket Printed at Shivaji Printers, Madras-14